# பட்டிநாயக மாலை
# பச்சைநாயகி மாலை
# பதிகங்கள்



வெளியீடு
சிரவைக்
கௌமார சபை
2010

திருப்பேரூர்

# பட்டிநாயக மாலை
# பச்சைநாயகி மாலை
# பதிகங்கள்


நூலாசிரியர்

சிரவை ஆதீனகர்த்தர்

தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்

உரையும் பதிப்பும்

சிரவை ஆதீனக் கவிஞர்

பெரும்புலவர் ப.வெ. நாகராஜன்





சிரவைக் கௌமார சபை வெளியீடு

விக்ருதி ஆண்டு

2010

திருப்பேரூர்ப் பட்டீசர் திருக்கோயில் குடமுழுக்கு வெளியீடு

சிரவைக் கௌமார சபை
வெளியீட்டு எண் : 291

நூல் பெயர் : திருப்பேரூர்ப் பட்டிநாயக மாலை

நூலாசிரியர் : சிரவை ஆதீனகர்த்தர்
தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்

உரையும் பதிப்பும் : சிரவையாதீனக் கவிஞர்
பெரும்புலவர் ப.வெ. நாகராஜன்

முதல் பதிப்பு : 2010

வெளியீட்டு நாள் : 12-11-2010

படிகள் : 500

விலை : ரூ. 70/-

அச்சிட்டோர் : சௌமி அச்சகம்
69D, சிறுவாணி முதன்மைச் சாலை
பேரூர், கோவை - 641 010.
அலைபேசி : 98422 52779

நூல் கிடைக்குமிடம்
தலைவர்
கௌமார மடாலயம்
சின்னவேடம்பட்டி
கோயமுத்தூர் - 641 049
தொலைபேசி : 0422-2666370

# ஆசியுரை



**சிரவை ஆதீனகர்த்தர்**
**தவத்திரு குமரகுருபர சுவாமிகள்**

திருப்பேரூர் கொங்கு நாட்டின் தலைசிறந்த சைவத்தலங்களுள் குறிப்பிடத்தக்க ஒன்று ஆகும். ஆரூரர் தில்லைப்பதிகத்திலேயே இத்தலத்தைச் சிறப்பித்துப் பாடியுள்ளதால் இதற்கு நிச்சயமாகத் தனிப்பதிகம் பாடியிருப்பார். அது கிடைக்காதனவற்றுள் சேர்ந்து விட்டது. சுந்தரமூர்த்தி நாயனார் இத்தலத்திற்கு வந்து வழிபட்டதைச் சேக்கிழாரும் பதிவு செய்துள்ளார். அதனால் திருப்பேரூரை வைப்புத் தலமாகக் கொள்ளாமல் தேவாரப் பாடல் பெற்ற தலமாகவே கொள்ளலாம்.

சிரவையாதீனத்திற்கு மிகுந்த அபிமானம் உள்ள சில தலங்களுள் திருப்பேரூர் குறிப்பிடத்தக்க ஒன்று ஆகும். ஆதீனத்தாபகர் ஆகிய திருப்பெருந்திரு இராமானந்த சுவாமிகள் அடிக்கடி பேரூர் சென்று வழிபட்டு வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். சந்நிதானங்களின் அருளாட்சிக் காலத்தில் அருள்மிகு பச்சைநாயகியுடனமர் பட்டிப்பெருமான் திருக்கோயிலுக்குச்சில நிலையான கட்டளைகள் ஏற்படுத்தப்பட்டன. தவத்திரு. இராமசாமி ஐயா என்பவரால் நிறுவப்பட்டது கற்பூரக் கட்டளை. இதன்வழி பட்டிப்பெருமான் கோவிலுக்கு வழிபாட்டிற்குரிய கற்பூரம் இன்றுவரைநாடோறும் வழங்கப்பட்டு வருகிறது. இக்கட்டளையின் காரணமாக இராமசாமி ஐயா அவர்கள் கற்பூரச் சாமி என்றே வழங்கப்படுகிறார். மேலும் திருக்கோயில் அமுதுபடிக்குச் சுண்டல் செய்து படைக்கவும் ஒரு கட்டளை உள்ளது.

இவற்றுக்காகத் தெலுங்குபாளையம் கிராமத்தில் ஒரு வயல் எழுதி வைக்கப்பட்டுள்ளது.

சுவாமிக்கும் அம்மனுக்கும் மலர்மாலைகள் சாத்துவதற்காகப் பேரூரில் தெற்கு நந்தவனம் என்னும் பெயரில் ஒரு சோலை ஒதுக்கப்பட்டுள்ளது. இக் கட்டளை மகா சந்நிதானம் தவத்திரு இராமானந்த சுவாமிகளின் முதல் மாணவர்கள் ஆகிய விளவை நால்வருள் ஒருவரும், செங்கண கவுண்டர் என்னும் இயற்பெயர் உடையவரும், கல்வியுணர்வு மிக்கவரும் ஆகிய தவத்திரு. சுந்தர சுவாமிகளின் நிர்வாகத்தில் இயங்கியது. இந்தத் தெற்கு நந்தவன மலர்மாலைக் கட்டளை 1926ஆம் ஆண்டு நிறுவப்பட்டது.

திருப்பேரூரில் மார்கழித் திருவாதிரை, பங்குனி உத்தரம் ஆகிய இரண்டு நடன தரிசனப் பெருவிழாக்களிலும் சிரவையாதீனத்தின் சார்பில் பட்டீசர் திருக்கோயிலுக்குள் உள்ள முருகப்பெருமான் சந்நிதிக்கு எதிரே விரிவாக மண்டகப்படி நடத்தப்படுகிறது. இக் கட்டளைகள் யாவும் அவை நிறுவப்பட்ட நாளிலிருந்து இன்றுவரை எவ்வித இடையூறும் இல்லாமல் செம்மையாக நடந்து வருகின்றன. இவ்வாறு திருப்பேரூருக்கும் சிரவைக் கௌமார மடாலயத்துக்குமான தொடர்பு நிலையானதாகும்.

இந்தத் தொடர்பில் சிரவையாதீனத்தின் இரண்டாவது குருமகா சந்நிதானம் தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் அவர்கள் இரண்டாவது அத்தியாயமாகப் பெரிய இலக்கியத் தொடர்பு ஒன்றை ஏற்படுத்தியுள்ளார். இவர் சற்றேறக்குறைய 15,000 செந்தமிழ்ச் செய்யுட்களை இயற்றியவர். கற்றோர்களால் கொங்குநாட்டுக் கச்சியப்ப முனிவர் எனப் போற்றப்படுபவர். ஐம்பதுக்கு மேற்பட்ட ஆலயங்களைப் பாடியுள்ள இந்தச் சுவாமிகள் திருப்பேரூருக்குத்தான் ஓராயிரத்து இருநூற்றுக்கு மேற்பட்ட பாக்களைப் புனைந்துள்ளார். ஒரு தலத்தொடர்பாக சுவாமிகள் மிக அதிக எண்ணிக்கையில் பாடியுள்ளது மேலைச் சிதம்பரமாகிய பேரூருக்குத்தான். இவற்றைத் தவிர இங்கு சிறக்கப் பணியாற்றி வரும் திருப்பேரூர் ஆதீனம் தொடர்பாகத் தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் பிள்ளைத்தமிழ், தோத்திரப் பதிகம் என்னும் இரு பனுவல்களையும் படைத்துள்ளார்.

தவத்திரு கந்தசாமி சுவாமிகள் திருப்பேரூர் பற்றி இயற்றியவை அகப்பொருட் கோவை, கலம்பகம், பிள்ளைத்தமிழ், மாலை,

*சிலேடை வெண்பா, யமக அந்தாதி என இலக்கியச் சிறப்பு வாய்ந்த பனுவல்களாகத் திகழ்கின்றன. திருப்பேரூர் தவத்திரு. சுவாமிகளின் அபிமானத் தலங்களுள் மிகச் சிறப்புடைய ஒன்று ஆகும். அதனால் தான் பேரூரைத் தன்பால் பெற்றிருப்பதையே கொங்கு நாட்டின் தலைமையான பெருமை எனக் கூறுவார் போல் அன்னியூர்த் தலபுராணத்தின் நாட்டுப் படலத்தை,*

**திருமால் பிரமன் கோமுனிவன் சிறந்த பட்டி முனி ஆகி**
**அருமா தவம்பல் நாள் இயற்றி அரசம்பலத்தில் அருள்மகிமைப்**
**பெருமான் இயற்றும் நடம்கண்டு பேணிப் பேர் ஆனந்தம் உறும்**
**குருமா மணிமெய்த் திருப்பேரூர் குலவும் கொங்குத் திருநாடு**

*என்று தொடங்குகிறார். கௌசைப் புராணத்திலும் இத்தலத்தை மறக்காமல்,*

**..... உதிப்பு இறப்பு இல் மாண் பனைபுளி கொண்டு ஓங்கும்**
**உரம்மிகும் பேரூர் தன்கண் உறத்திகழ் கொங்குநாடு**

*என்கிறார். வைணவ புராணமாகிய காரைமடைத் தலபுராணத்தும்,*

**சீரைஊர் காம தேனு சிறப்பமுன் பூசை ஆற்றப்**
**பேரையூர் அதுதான் மேலைச் சிதம்பரப் பேர்பெற்றாங்கு**
**நாரைஊர் தேனு ஈண்டு நயந்து பூசித்தலாலே**
**காரைமாவனம் மேல் சீரங்கம் எனக்கவினும் மாதோ**

*என உவமையாக்கி மகிழ்கிறார்.*

*நூலாசிரிய சுவாமிகளின் இந்தப் பேரூர்ப்பற்று இத்தலத்தொடர்பான பனுவல்கள் அனைத்திலும் தெற்றெனப் புலப்படுகின்றன. இந்தப் பதிப்பில் இடம் பெற்றுள்ள பட்டிநாயக மாலையும் பதிகங்களும் மூலம் மட்டும் ஆகச் சிரவைக் கௌமார சபையின் பதிப்பாக 1941 இல் வெளியாகி உள்ளது. அதற்குப் பிறகு இப்பொழுது தான் உரையுடன் அச்சுவாகனமேறி உலா வருகிறது. பச்சை நாயகி மாலை பிள்ளைத் தமிழுடன் சேர்த்து 1940 -ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்டது. அதற்கும் இது தான் இரண்டாம் பதிப்பு.*

*இந்தப் தொகுப்பில் இடம்பெற்றுள்ள நடராசர் பதிகமும், தோத்திரமும் சுவாமிகளின் கையெழுத்துப் படிகளிலிருந்து*

அ…மையில் கண்டெடுக்கப்பட்டு இப்போது தான் முதன் முறையாக ஒரு நூலில் தொகுக்கப்பட்டுள்ளன. இதில் இடம்பெற்றுள்ள முந்நூற்றுக்கும் மேற்பட்ட செய்யுள்களுக்கு நம் ஆதீனக் கவிஞர் அவர்கள் குறிப்புரை வரைந்துள்ளார்.

இனித் திருப்பேரூர்த் தொடர்பான நூல்களுள் பச்சைநாயகி பிள்ளைத்தமிழ், திருப்பேரூர்க்கோவை ஆகியன அச்சாகி உள்ளன. திருப்பேரூர்க் கலம்பகம் பெரும்புலவர் ப.வெ.நா. அவர்களின் விளக்க உரையுடன் 1978 இல் வெளியிடப்பட்டு இப்போது இரண்டாம் பதிப்பை எதிர்நோக்கியுள்ளது. சிலேடை வெண்பா, யமக அந்தாதி ஆகிய மிறைக்கவிப் பனுவல்கள் இரண்டும் இனிமேல்தான் பதிப்பு வெளிச்சத்தைக் காண வேண்டும்.

12-11-2010 அன்று நடைபெற உள்ள பட்டிப்பெருமான் திருக்கோயில் திருக்குட முழுக்கையொட்டி இந்தப்பதிப்பு இப்பொழுது வெளியிடப்படுகிறது. தவத்திரு. கந்தசாமி சுவாமிகளின் அருளிச் செயல்கள் அனைத்தையும் ஒரே நூலாகப் பதிப்பிக்கும் பணியும் நடைபெற்றுக் கொண்டுள்ளது.

திருப்பேரூர்ப் பட்டி நாயகமாலை என்னும் இச் சிற்றிலக்கியத் தொகுப்பு இறையன்பர்களுக்கும், தமிழ் ஆர்வலர்களுக்கும், கொங்கு இலக்கிய ஆய்வாளர்களுக்கும் பெரும்பயன் விளைக்கும் என்பது உறுதி. இத்தொகுப்பை உருவாக்கி உரையும் கண்டு சிறப்பாகப் பதிப்பித்திருக்கும் சிரவையாதீனக் கவிஞர் பெரும்புலவர் ப.வெ.நா. அவர்களை மிகவும் பாராட்டுகிறோம். இதற்குக் கவிஞர் வரைந்துள்ள பதிப்புரை ஓர் நல்ல ஆராய்ச்சிப் பதிப்பாக இதனை உயர்த்தியுள்ளது. இத்துடன் அமையாமல் இதில் இடம்பெறாத சுவாமிகளின் நூல்கள் அச்சானவை, ஆகாதவை ஆகிய எல்லாவற்றிலிருந்தும் ஓரிரண்டு பாடல்கள் இந்நூலில் உரையுடன் பிற்சேர்க்கையாக இணைக்கப்பட்டுள்ளன. இந்த ஒரு சோற்றுப் பத ஆலோசனையை வழங்கியவர் சித்தாந்த சரசுவதி பேரா. ந.இரா. சென்னியப்பனார் ஆவார். இது நம் சுவாமிகளின் நூல்களை உரையுடன் செம்பதிப்பாக வெளியிடப் பொருளுதவி புரிய வேண்டும் என்னும் ஆர்வத்தைத் தமிழன்பர்களிடத்தே ஏற்படுத்தும் என்பது உறுதி.

*தவத்திரு. கந்தசாமி சுவாமிகளின் செய்யுள் நடை எளியது அல்ல; கடினமான புணர்ச்சிகளும் திரிசொற்களும், ஆட்சியில் அதிகமாக இல்லாத அருஞ் சொற்களும் மிகுதியாகப் பயிலப்பட்டதால் சற்றுக் கடினமானது. ஆனால் சொற்களைப் பிரித்துப் பொருள் தெரிந்து சுவைத்தால் தேனாக இனிக்கும். சுவாமிகளின் நூல்கள் அனைத்தையும் தமிழார்வலர்கள் அனைவரும் அறிந்து துய்க்கும் நன்னாள் விரைவில் வரவேண்டும் என விழைகிறோம்.*

*பாராட்டிற்குரிய அன்பர் திரு. தே. திருஞானசம்பந்தன் அவர்கள் இந்நூலைத் தம் சௌமி அச்சகத்தில் மிகக் குறுகிய காலத்தில் எழிலுற அச்சாக்கியுள்ளார். கடினமான நூலை உழைத்துப் பதிப்பித்த திரு. ப.வெ. நாகராஜன் அவர்களுக்கும், சௌமி அச்சகத்தாருக்கும் எம் பாராட்டைத் தெரிவித்துக்கொள்கிறோம். அன்பர்கள் அனைவரும் இப் பத்திப் பனுவல்களைப் பொருளுணர்ந்து ஓதி அருள்மிகு பச்சைநாயகியுடனமர் பட்டிப்பெருமானின் நல்லருளுக்கு இலக்காகி நீடினிது வாழ வாழ்த்துகிறோம்.*

**மேலைச் சிதம்பரமா மேவுதிருப் பேரூரின்**
**சீலத்தைக் காட்டும் திருப்பனுவல் - சால அருள்**
**விற்பனம்ஆர் கந்தகுரு வீறார்ந்த சொற்றமிழ் ஆம்**
**நற்பலவின் இன்சுவையை நாடு.**



# பதிப்புரை

சிரவை ஆதீனக் கவிஞர்
பெரும்புலவர். ப.வெ. நாகராஜன்

**கோமுனிக்கும், தொழுமுனிக்கும், குறுமுனிக்கும், குவலயம்செய்**
**மாமுனிக்கும், தில்லையில்வாழ் மறையவர்மூ வாயிரர்க்கும்,**
**தாமுனிக்கும் படிவேதத் தமிழ்பாடத் தடுத்தாண்ட**
**பாமுனிக்கும் திருநடனம் பயில் அரசம் பலம் போற்றி**
**(பட்டிப்புராணம்)**

*திருப்பேரூர்த் தலம் கோவைக்கு மேற்கே 5.கி.மீ. தொலைவில் உள்ளது. இது நொய்யல் என வழங்கப்படும் காஞ்சி மாநதியின் தென்கரையில் உள்ளது. பழைய நாட்டுப் பிரிவின்படி இது கொங்கு மண்டலத்தின் ஆறைநாட்டுப் பகுதி ஆகும். பேரூர் தேவார வைப்புத் தலங்களுள் ஒன்று.*

*இத்தலத்திற்குரியனவாகத் தேவாரப் பதிகங்கள் எதுவும் இப்போது காணப்படவில்லை. ஆனால் சுந்தரமூர்த்தி நாயனார் இங்கு வந்திருந்ததாகப் பெரியபுராணமும் (ஏயர்கோன்.செய்யுள் 88-91), பட்டிப்புராணமும் (இடபகோபச் சருக்கம்), திருப்பேரூர்ப் புராணமும் (பள்ளுப்படலம், அழகிய திருச்சிற்றம்பலப்படலம்) கூறுகின்றன. தவிர திருநாவலூரரும் திருக்கச்சி அநேகதங்காவதம் (2), கோயில் (10), ஊர்த்தொகை (4) ஆகிய மூன்று பதிங்களில் இத்தலத்தைக் குறிப்பிட்டுள்ளார்.*

*இப்படி வேறு திருத்தலங்களிலும் குறிக்குமளவு தம் நெஞ்சைக் கவர்ந்த திருப்பேரூருக்குச் சுந்தரர் பதிகங்கள் பாடியிருப்பார் என்பது திண்ணம். அவை மறைந்துவிட்டன. இப்பொழுது வழக்கில் உள்ள*

பதிகங்களை மட்டும் கொண்டு பாடல் பெற்ற தலங்கள் கணக்கிடப்படுவதால் திருப்பேரூர் கொங்குநாட்டுத் தேவாரத் தலங்களுள் ஒன்றாக எண்ணப்பெறுவதில்லை.

அப்பர் பெருமானின் திருவீழிமிழலைத் திருத்தாண்டகத்திலும் (8), க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகத்திலும், மணிவாசகர் அருளிய திருக்கோவையாரில் மணமுரசு கூறல் துறைக் காரிகையிலும் (299), பெரியபுராணத்தில் ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணத்திலும் (88,91,115) இத்தலம் கூறப்பட்டுள்ளது. அருணகிரிநாதரின் இரண்டு திருப்புகழ்ப் பாக்கள் (959, 960) திருப்பேரூருக்குரியன.

இத்தலத்திற்கு இரண்டு தல புராணங்கள் உள்ளன. முதலாவதாகிய பட்டிப் புராணம் என்னும் பிறவாநெறிப் புராணம் கி.பி. 1608 ஆம் ஆண்டு இயற்றப் பெற்றது. இது ஏழு சருக்கங்களையும் 343 விருத்தங்களையும் கொண்டது. இது அச்சுவாகனம் ஏறவில்லையாயினும் ஓலைச்சுவடியிலிருந்து இந்தப் பதிப்பாசிரியரால் உரையோடு பதிப்பிக்கப்பட்டு, அமெரிக்க விண்வெளி ஆய்வு மையத்தில் (நாசா) கணிப்பொறி விஞ்ஞானியாகத் திகழும் முனைவர். நா. கணேசன் அவர்களால் தம் இணையதளத்தில் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. அடுத்தது அனைவரும் அறிந்த சிறப்புவாய்ந்த திருப்பேரூர்ப் புராணம். கவிராட்சச கச்சியப்ப முனிவரின் இந்நூலைப் பற்றிச் சைவ உலகம் நன்கு அறியுமாதலின் அதிகம் கூறவேண்டியதில்லை.

திருப்பேரூரைப் போற்றும் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் ஆக 72 பனுவல்கள் பெயரளவில் அறியப்பெறுகின்றன. தவத்திரு. சிரவைக் கந்தசாமி சுவாமிகள் ஒருவரே பதின்மூன்று சிற்றிலக்கியங்களைப் படைத்துள்ளார். அவற்றுள் மாலைகள் இரண்டு, பதிகங்கள் ஏழு என ஒன்பது பிரபந்தங்கள் இந்தப் பதிப்பில் குறிப்புரையுடன் இடம் பெற்றுள்ளன. இனி இவற்றைப் பற்றித் தனித்தனி நோக்குவாம்.

தமிழில் சிற்றிலக்கிய வகைகள் 96 எனக் கூறப்படுவது சரியல்ல என்றும், இப்போது இருநூற்றுக்கு மேற்பட்ட சிற்றிலக்கிய வகைகள் பெயரளவில் அறியப்படுகின்றன என்றும், அவற்றுள் மிகப் பலவற்றிற்கு இலக்கியங்களே இல்லை என்றும் சிற்றிலக்கிய ஆய்வறிஞர்கள் நன்கு அறிவர். வண்ணச்சரபம் தண்டபாணி

சுவாமிகள் தம் அறுவகை இலக்கணத்துள், "**பைந்தமிழ்ப் புலவோர் பகரும் பனுவல் தொண்ணூற்றாறு எனச் சொல்வார் சொல்லினும் லகரி முதற்கொடு நொண்டி ஈறு ஆகிய வேறு பல்விதங்களும் விளங்குகின்றனவால்; யாமும் சிலவிதம் இயம்ப நாணுதுமே**" (528) என மிகத் தெளிவாகக் கூறுகிறார்.

தமிழ்ச் சிற்றிலக்கிய வகைகள் ஏராளமாகக் கூறப்பட்டாலும் கோவை, கலம்பகம், பிள்ளைத்தமிழ், உலா, தூது, அந்தாதி வகைகள், மாலை போன்ற சில வகைகளே பெரும் செல்வாக்குப் பெற்று, கவிஞர்களால் அதிகமாகப் படைக்கப்பட்டுள்ளன. சமய உலகில் தோத்திர இலக்கியமாகப் பதிகம் மிகவும் சிறப்பிடம் பெற்று விளங்குகிறது.

வெண்பா அல்லது கட்டளைத்துறை யாப்பில் ஏதாவது ஒரு பொருள், இடம், காலம் அல்லது தொழில் பற்றி 30,40,70,90 அல்லது 100 பாக்கள் பாடுவது மாலை எனப்படும் என்பது பாட்டியல் இலக்கணம். பாட்டியலில் இந்த இலக்கிய வகை எண் மாலை எனச் சுட்டப்படுகிறது.

"**கருது பொருள் இடம் காலம் தொழிலின் முப்பான் நாற்பான் எழுபான், தொண்ணூறு நூறான் வெண்பாக் கலித்துறையினாதல் மன்னும் அவ் எண்ணால் மாலை**" (பிரபந்த மரபியல் 16), "**பன்னுபொருள் இடம் காலம் தொழில் முப்பான் நாற்பான் எழுபான் தொண்ணூறு நூறால் வெண்பா மன்னு கலித்துறையாதல் புகல் அப்பேரால் மாலையும் ஆம். எண்ணாலும் மருவும் பேராம்**" (சிதம்பரப்பாட்டியல், மரபியல் 11) என்பன இந்த இலக்கிய வகையின் பாட்டியல் விதி. புதியன புகுதலாக 20, 50 பாடல்களை அமைப்பதும், ஆசிரிய விருத்தத்தில் பாடுவதும் தோன்றியுள்ளன.

இப்பொழுது தமிழில் கிடைக்கும் மாலைகளுள் வெண்பா, கலித்துறைகளை விட ஆசிரிய விருத்த மாலைகளே மிக அதிகமாக உள்ளன. அதிலும் விளம், மா, விளம், விளம், மா, விளம், மா, என நடக்கும் எழுசீர் ஆசிரிய மாலைகளே ஏராளம்.

தமிழில் ஏறக்குறைய 300 மாலைகள் இருக்கலாம் என அறியப்படுகிறது. பிற்காலக் கவிஞர்களுள் ஏறக்குறைய எல்லோருமே

மாலை இலக்கியத்தைப் படைத்துள்ளனர். தவத்திரு. சிரவைக் கந்தசாமி சுவாமிகள் ஒருவரே 28 மாலைகளை யாத்துள்ளார். இப்பதிப்பாசிரியரின் அறிவுக்கு எட்டியவரையில் வேறு எந்த ஒரு புலவரும் இவ்வளவு மாலைகளைப் புனையவில்லை. இது தமிழ்ச் சிற்றிலக்கிய வரலாற்றில் சிறப்பாகக் குறிப்பிட்டுக் கூறத்தக்க ஒரு செய்தி ஆகும். இனி இப்பதிப்பில் இடம் பெற்றுள்ள இரண்டு மாலைகளையும் பற்றித் தனித்தனியாகக் காண்போம்.

### 1. தலபுராணசாரம் ஆகிய பட்டிநாயக மாலை

புராணங்களை நாள்தோறும் பாராயணம் செய்வதும் வழிபாட்டின் ஓர் அங்கம் ஆகும். புராணங்கள் மிக விரிவாக அமைந்திருப்பதால் அவற்றை ஒருமுறை வழிபாட்டில் பாராயணம் செய்து முடிக்கவே நெடுநாளாகின்றன. அதனால் இந்தப் புராணங்களுக்குச் சுருங்கிய மாற்று இலக்கியங்கள் தேவைப்பட்டன. இவ்வாறு அமைந்த சுருக்க நூல்கள் இருவகையில் அமைந்தன. முதலாவது முதல்நூலின் வடிவத்திலேயே அளவில் சுருங்கியவை. சம்பந்த சரணாலயரின் கந்த புராணச் சுருக்கம், பத்தர்பாடி எம்பெருமான் கவிராயரின் தக்கை ராமாயணம் முதலியவை இவ்வகைக்கு எடுத்துக் காட்டுகள் ஆகும்.

இரண்டாவது வகை புராண வரலாறுகளை முறையாகவும் முழுமையாகவும் தம்முட்கொண்டு மாலை, கலிவெண்பா என்பன போன்ற சிற்றிலக்கியங்களாக இயற்றப்பட்டவை. பெரியபுராணத்தின் சுருக்கமாகப் பல பிரபந்தங்கள் தோன்றியுள்ளன. அவற்றுள் கனக சபைக் கவிராயரின் பெரியபுராணச் சுருக்கக் கலிவெண்பா, ஆசிரியர் பெயர் மறைந்து விட்ட திருத்தொண்டர் அடிமைத்திறம் ஆகியன குறிப்பிடத்தக்கன. அவ்வாறே வேம்பத்தூர் நம்பி திருவிளையாடற் புராணத்தின் சுருக்கமாகிய வீரபத்திரக் கம்பரின் பயகர மாலையும், பரஞ்சோதி முனிவராலேயே இயற்றப்பட்ட அவருடைய திருவிளையாடற் புராணத்தின் சுருக்கமாகிய மதுரைத் திருவிளையாடற் போற்றிக் கலிவெண்பாவும் சிற்றிலக்கிய வடிவில் அமைந்த புராணசார நூல்கள் ஆகும்.

இந்தப் புராணசார சிற்றிலக்கியங்களாகவும் சிரவைக் கந்தசாமி சுவாமிகள் ஐந்து பனுவல்களைப் படைத்துள்ளார் என்பது விதந்துரைக்கப் படவேண்டிய செய்தி. கச்சியப்ப முனிவரின் விநாயக புராணம், திருப்பேரூர்த்தலபுராணம் ஆகிய இரண்டின் சுருக்கமாக

பெருந்தலைவை இட்ட சித்தி விநாயக மாலை, பேரூர்ப் பட்டி நாயகமாலை என்னும் இரண்டு நூல்கள். கச்சியப்ப சிவாசாரியாரின் கந்தபுராணத்தின் மிகச் சுருங்கிய வடிவில் அமைந்தது இரங்கசாமிக் கவுண்டன்புதூர் தண்டபாணி மாலை தாமே இயற்றிய கந்தமான்மியத்தின் சுருக்கமாக அமைந்தது குருதோத்திர மாலை. கருவலூரில் கோயில்கொண்டுள்ள விருந்தீசரைப் போற்றிப் பாடப்பட்ட பதிகம் அத்தலபுராணத்தின் சாரமாகும். இவ்வாறு நம் சுவாமிகளால் இயற்றப்பட்டுள்ள ஐந்து புராணசார நூல்களுள் நான்கு மாலையாகவும் ஒன்று பதிகமாகவும் அமைந்துள்ளன. இவற்றுள் ஒன்று ஆகிய திருப்பேரூர்ப் பட்டிநாயகமாலையை இனிக் காண்போம்.

பட்டிநாயகமாலை ஆகிய இது திருப்பேரூர்ப்புராணம் என்னும் பொருள் பற்றி 111 எழுசீர் விருத்தங்களால் ஆன ஒரு சிற்றிலக்கியம். இம்மாலை காப்புச் செய்யுள் ஒன்று, நூல் 112 என மொத்தம் 113 செய்யுட்களைக் கொண்டது. புராணத்தை முற்றுவிப்பதற்காக 112 விருத்தங்கள் புனையப்பட்டிருப்பினும் இதனை நூறு பாக்களால் ஆன மாலைக்கு இனமாகவே கொள்ள வேண்டும். முன்னர்க் கூறப்பட்ட எழுசீர் விருத்த யாப்பில் அமைந்த இந்த மாலையின் மகுடம் "பேரூர்ச் சிட்டனே பட்டி நாயகனே" என்பது ஆகும். எல்லா விருத்தங்களிலும் முற்பகுதி வேண்டுகோளாகவும் பிற்பகுதி தல புராணக் குறிப்பாகவும் அமைந்துள்ளது. இந்த மாலை தலபுராணத்தின் சுருக்கம் என்பது காப்புச் செய்யுளிலேயே,

> **"போற்றியல் அரசம் பலத்திருப்பேரூர்ப் புராணத்தின் சாரசங்கிகம்**
> **ஏற்று இயல் பட்டிநாயக மாலை இன்புற முடிய"**

எனத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. மிகச் செறிவான 2220 விருத்தங்களைக் கொண்ட நூலை 111 பாக்களில் சுருக்கி உரைத்துள்ள ஆசிரிய சுவாமிகளின் திறம் வியந்து பாராட்டற்பாலது.

## ௩. திருப்பேரூர்ப் பச்சை நாயகிமாலை

மாலை என்னும் பிரபந்தம் வெண்பா அல்லது கட்டளைக் கலித்துறையாப்பால் பாடப்பட வேண்டும் என்பது பழைய பாட்டியல் மரபு என்பது மேலே சுட்டப்பட்டது. அவ்வாறு யாக்கப்படும் பிரபந்தம் பாடற்தொகையாலோ யாப்பாலோ பெயர் பெறும் என்பதும் கூறப்பட்டது. அதாவது இந்த மாலைப் பிரபந்தம் வெண்பா மாலை

கட்டளைக் கலித்துறை மாலை என யாப்பாலோ 30,40,70 என எண்ணாலோ பெயர் பெறும் என்பது இதன் கருத்து. ஆனால் கால வெள்ளத்தில் இவ்விதி நெகிழ்ந்து விட்டது. பொதுவாகப் பிற்காலத் தமிழ் இலக்கியத்தில் கட்டளைக் கலித்துறை மாலைகள் யாப்பாலோ எண்ணாலோ பெயர் பெறுவது இல்லை. எங்காவது மிக அருகி வழக்கில் இருக்கலாம். ஆனால் வெண்பா மாலைகள் மிகப் பெரும்பாலும் யாப்பாலேயே பெயர் பெறுகின்றன.

பச்சைநாயகி ஆகிய பொருள்மேல் நூற்றொரு கட்டளைக் கலித்துறையால் இயன்ற நூல் பச்சைநாயகி மாலை. இது யாப்பாலோ எண்ணாலோ பெயர் பெறாமல் பாடுபொருளால் பெயர் பெற்றுள்ளது. கட்டளைக் கலித்துறை அல்லது விருத்தத்தால் நடக்கும் மாலைகள் எல்லாம் இவ்வாறு பாடுபொருளால் பெயர் பெறுவதே இலக்கிய மரபு ஆகிவிட்டது. காண்க

1. சோணசைல மாலை - துறைமங்கலம் சிவப்பிரகாசர்
2. திருவரங்கமாலை - பிள்ளைப்பெருமாள் ஐயங்கார்
3. பழனாபுரிமாலை - மாம்பழக்கவிச்சிங்க நாவலர்
4. அகிலாண்டநாயகி மாலை - மகாவித்வான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை.
5. சண்முக மாலை - சிரவையாதீனத்தாபகர் திருப்பெருந்திரு இராமானந்த சுவாமிகள்.

இந்த நெறியிலேயே சிரவைக் கந்தசாமி சுவாமிகளின் மாலைகள் அனைத்தும் யாப்பாலோ எண்ணாலோ அன்றிப் பாடுபொருளாலேயே பெயர் பெற்றுள்ளன.

பச்சைநாயகி மாலை காப்பு ஒன்று, நூல் 101 என மொத்தம் 102 கட்டளைக் கலித்துறைகளால் ஆனது. ஈற்றில் வாழ்த்துக் காரிகை ஒன்றும் இடம் பெற்றுள்ளது. "பேரைவாழ் பச்சை நாயகியே" என்பது இந்த பனுவலின் மகுடம் ஆகும். தமிழில் தோன்றியுள்ள மாலை இலக்கியங்களுள் இந்தப் பச்சைநாயகி மாலை பக்திச்சுவையும், தத்துவ விளக்கங்களும், இலக்கியச் சிறப்பும் மிக்கதொரு சிற்றிலக்கியம் ஆகும்.

## இம்மாலைகளின் பதிப்பு விவரம்

பட்டிநாயக மாலை 1941 ஆம் ஆண்டு சிரவைக் கௌமார

சபையாரால் வெளியிடப்பட்ட திருப்பேரூர்த் தோத்திரப் பிரபந்தத்திரட்டு என்னும் நூலில் முதன்முறையாக வெளியிடப்பட்டது. அதற்குப்பிறகு இப்பொழுதுதான் மறுபதிப்பு ஆகிறது.

பச்சைநாயகிமாலையும் 1940 ஆம் ஆண்டு சிரவைக் கௌமார சபையினரால் பச்சைநாயகி பிள்ளைத்தமிழோடு முதன் முறையாக வெளியிடப்பட்டது. அதற்குப் பிறகு இப்பொழுதுதான் வெளியிடப்படுகிறது.

திருமதி. பாக்கியலட்சுமி காவேரி என்பவர் இப்பேரூர்ப் பச்சைநாயகி மாலையை ஆய்வு செய்து 2001 ஆம் ஆண்டு பாரதியார் பல்கலைக்கழகத்தில் இள முனைவர் (எம்.பில்) பட்டம் பெற்றுள்ளார்.

## பதிகம்

இனி அடுத்து இந்தத் தொகுப்பில் இடம் பெற்றுள்ள இரண்டாவது சிற்றிலக்கிய வகை ஆகிய பதிகத்தைக் காண்போம்.

சமய உலகில் தோத்திர இலக்கியமாகப் பதிகம் சிறப்பிடம் பெற்று விளங்குகிறது என முன்னர்ச் சுட்டப்பட்டது. தமிழில் பல்லாயிரக் கணக்கான பதிகங்கள் உள்ளன. தமிழ்ச் சைவ வைணவங்களுக்கு மூல இலக்கியங்களான தேவார, திவ்வியப் பிரபந்தங்களே பதிகத் தொகுப்புக்கள் தானே!

பொதுவாக ஒரு பொருள் பற்றி ஒரே யாப்பில் பத்துப் பாக்களைக் கொண்ட பனுவல் பதிகம் எனப்படுகிறது. இதற்குக் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் எனக் கருதப்படும் காரைக்கால் அம்மையாரையே முன்னோடியாகக் கூறுவர். அவரால் இயற்றப்பட்ட திருஆலங்காட்டுப் பதிகங்கள் இரண்டும் சைவ உலகில் மூத்த திருப்பதிகங்கள் எனப்படுகின்றன. எனினும் இவர் காலத்திற்கு முன்பே ஒரு பொருள் பற்றி ஒரே யாப்பில் பத்துச் செய்யுள்கள் இயற்றும் முறை தோன்றிவிட்டது என்பது உறுதி.

ஒரு பொருளைப் பற்றித் தனிப்பாடல் ஒன்றைப் பாடிய புலவன் அடுத்து அதே பொருளில் பத்துப்பாடல்களை அதே யாப்பில் இயற்றுதல் என்பது இயல்பான வளர்ச்சி ஆகும். சங்க காலத்திலேயே பதிற்றுப்பத்திலும் ஐங்குறுநூற்றிலும் இந்த வளர்ச்சி காணப்படுகிறது. பத்துப் பாடல்களின் தொகுதி தொடக்க நிலையில் பத்து என்றே

வழங்கப்பட்டது. ஐங்குறு நூற்றின் வேழப்பத்து, களவன் பத்து, சிறுவெண்காக்கைப் பத்து என்பன போன்ற தலைப்புகளாலும், பதிற்றுப்பத்தில் மூன்றாம் பத்து, ஆறாம் பத்து என்பன போன்ற பெயரீட்டாலும் இப்போக்கை அறியலாம். காரைக்கால் அம்மையாரும் தன் பனுவல்களுள்,

**"காரைக்கால் பேய் செப்பிய செந்தமிழ் பத்தும் வல்லார்"**
**"காரைக்கால் பேய்தன் பாடல் பத்தும் பாடி ஆட"**

என்றே பாடுகிறார்.

உலகியல்ப் பொருண்மை பற்றி ஒரே யாப்பில் பத்துப்பாடல்கள் புனையும் பழைய இலக்கிய மரபை இறைவனைப் போற்றும் பனுவலாக மடைமாற்றம் செய்ததால் தான் அம்மையாரின் பதிகங்கள் மூத்தவை என வழங்கப்படுகின்றனவே அன்றி இவ்வகைச் சிற்றிலக்கியத்தை முதன் முதலாகப் படைத்தவரே அவர்தான் என்பது ஏற்புடையது ஆகாது.

பாட்டியல் நூல்கள் தோன்றும் வரை இவ்வாறு இயற்றப்பட்ட பத்துப்பாக்கள் கொண்ட ஒரு தொகுதி ஒரு தனி இலக்கிய வகையாக கருதப்பட்டதாகத் தெரியவில்லை. தேவார. திவ்வியப் பிரபந்த ஆசிரியர்கள் தம் கடைக்காப்புப் பாசுரங்கள் எதிலும் பதிகம் என்ற சொல்லை ஆளவில்லை என்பது கவனமாகச் சிந்தித்தற்குரியது. ஆனால் திருஞானசம்பந்தர் ஒரே ஓர் இடத்தில்,

**"பதிகமது எழுது இலையவை எதிரே வரு நதியிடை"**
**(3-113-12)**

என இச்சொல்லை ஆளுகிறார். இங்கு பதிகம் என்பது வாழ்க அந்தணர் எனத் தொடங்கும் தேவாரப் பதிகத்தைத்தான் என்பது உறுதி. இதனால் பத்துப்பாக்களாலான ஒரு தொகுதியைப் பதிகம் எனக் குறிப்பிடும் வழக்கமும் சம்பந்தர் காலத்திலேயே மிக அருகிய நிலையில் வழக்கில் இருந்திருக்கும் எனத் தெரிகிறது. பாட்டியல் நூல்கள் தோன்றிய பின்பு பதிகம் என்பது குறிப்பிட்டதோர் இலக்கியவகையைக் குறிப்பிடும் கலைச்சொல் ஆகிவிட்டது.

பதிகம் என்னும் இலக்கிய வகையைப் பன்னிரு பாட்டியல் (நூற்பா 312), முத்து வீரியம் (1116), சுவாமிநாதம் (168), பிரபந்த தீபிகை (28), பிரபந்த தீபம் (80) என்னும் ஐந்து பாட்டியல் நூல்கள் குறிப்பிடுகின்றன.

"கோது இல் ஓர் பொருளைக் குறித்து ஐயிரண்டு
பா எடுத்துரைப்பது பதிகம் ஆகும்" (முத்துவீரியம் 1116)

என்பதுதான் அடிப்படை இலக்கணம்.

பத்துப் பாடல்கள் ஒருதொகுதியாக, அதன் கடைக்காப்பு அல்லது நூற்பயன் கூறலாக ஒன்றை இணைத்து மொத்தப் பாடல்தொகை பதினொன்று என இயற்றும் முறை காரைக்கால் அம்மையாராலேயே தொடங்கப்பட்டுவிட்டது. சில பதிகங்கள் நூல் பதினொன்று, நூற்பயன் ஒன்று என மொத்தம் பன்னிரண்டு செய்யுள்களைக் கொண்டு அமைகிறது. முருகப் பெருமானைப் போற்றும் பதிகங்களை நூல் பன்னிரண்டு பாக்களையும் நூற்பயன் ஒன்றையும் சேர்த்து ஆக மொத்தம் 13 பாடல்களால் இயற்றுதல் வண்ணச்சரபம் சுவாமிகளின் வழக்கம். சிரவைக் கந்தசாமி சுவாமிகளும் இதனை மரபாகக் கடைப்பிடிக்கிறார்.

பதிகம் என்பதே இறைவனை வாழ்த்தும் பொருண்மையது. எனவே அதற்குத் தனியாகக் காப்புப் பாடல் ஒன்றை இயற்றும் மரபு பழந்தமிழில் இல்லை. ஆனால் வண்ணச்சரபம் சுவாமிகளும், அவரைப் பின்பற்றிச் சிரவைக் கந்தசாமி சுவாமிகளும் தனியாகக் காப்புச் செய்யுள் ஒன்றை - பெரும்பாலும் நேரிசை வெண்பாவாக - தொடக்கத்தில் இடம்பெறச் செய்கின்றனர். இதனால் பதிகத்தின் மொத்த செய்யுள்த் தொகை புற உறுப்புக்களையும் சேர்த்து 12, 13, 14 என மிகுந்துவிடுகிறது.

தோத்திரப்பதிகங்கள் ஓர் தலத்தில் கோயில் கொண்டுள்ள தெய்வத்தைப் பற்றியதாகவோ அந்தத் தலத்தின் பெருமையையே பாடுபொருள் ஆகக் கொண்டதாகவோ இருக்கலாம். முதல்வகைப்பதிகத்தின் பெயர் கடவுள் பெயரினும் அடுத்த வகைப் பெயர் தலத்தின் பெயரிலும் அமையும். எடுத்துக்காட்டு. கௌசைக் கருணாகரவல்லி பதிகம், அன்னியூர்ப்பதிகம். சிற்றிலக்கிய ஆய்வாளர்கள் இரண்டாம் வகையை ஊர்ப்பதிகம் என்பர்.

திருஞானசம்பந்தரின் "குறிகலந்த" எனத் தொடங்கும் திருப்புகலூர்ப் பதிகம் (முதல்திருமுறை இரண்டாம் பதிகம்), அப்பர் பெருமானின் "பாசமும் கழிக்ககில்லா" என்னும் இராமேச்சுரப் பதிகம் (4-61), சுந்தரரின் "தேனெய் புரிந்து" என்னும் கச்சி அநேகதங்காவதப் பதிகம் (7-10), திருமங்கை ஆழ்வாரின் "அங்கண்

ஞாலம்" என்னும் சிங்கவேள் குன்றப் பதிகம் (பெரிய திருமொழி 1-7) முதலியன ஊர்ப்பதிகங்கள் ஆகும்.

திருப்பேரூர்ப் பிரபந்தங்களாகிய இத்தொகுப்பில் சிரவைக் கந்தசாமி சுவாமிகளால் இயற்றப்பட்டள்ள ஏழு பதிகங்கள் இடம் பெற்றுள்ளன. இவற்றுள் திருப்பேரூர்ப் பதிகம் என்பது ஊர்ப்பதிகம் ஆகவும், முருகன் பதிகம் திருப்புகழ் யாப்பில் அமைந்ததாகவும் உள்ளன. இவற்றைத் தவிர நடராசர் தோத்திரம் என நான்கு விருத்தங்களும், மூன்று திருப்புகழ்ப் பாக்களும் இதில் உள்ளன.

இவ்வாறாக இந்தப் பேரூர்ப் பனுவல் திரட்டில் மாலைகள் இரண்டு, பதிகங்கள் ஏழு என ஒன்பது சிற்றிலக்கியங்களும் ஏழு தனித் தோத்திரங்களும் உள்ளன. இவற்றின் மொத்த செய்யுள்த் தொகை 311 ஆகும். அனைத்திற்கும் அரும்பத உரை வரையப்பட்டுள்ளது. இக் குறிப்புரை பத்தி இலக்கிய வாசகர்களுக்குச் செய்யுளை உணர்ந்து கொள்ளப் போதுமானதாக இருக்கும். நூலின் பக்கங்கள் பல்குதலைத் தவிர்ப்பதற்காகவே இந்த அணுகுமுறை.

## பதிகங்களின் பதிப்பு விவரம்

இதில் இடம்பெற்றுள்ள ஏழு பதிகங்களும் 1941 இல் கௌமார சபையாரால் வெளியிடப்பட்ட திருப்பேரூர்ப் பேரூர்ப்பிரபந்தத் திரட்டில் உள்ளன. இவற்றுள் அகிலாண்ட நாயகி பதிகம் ஒன்று மட்டும் சிரவையாதீனம் 2007 ஆம் ஆண்டு வெளியிட்ட அன்னையர் அருட்பதிகங்கள் என்னும் தொகுப்பு நூலில் இரண்டாம் பதிப்பைப் பெற்றுள்ளது. அதிலும் குறிப்புரை இல்லாமல் மூலம் மட்டுமே வெளியாகி உள்ளது.

சிரவைக் கந்தசாமி சுவாமிகளின் வாழ்க்கை வரலாறு பல இடங்களில் சுருக்கமாகவும் தனி நூலாக இரண்டு நிறுவனங்களாலும் வெளியிடப்பட்டிருப்பதால் இங்கு எழுதப்படவில்லை. ஆனால் சுவாமிகளுக்குத் திருப்பேரூர் மிகுந்த அபிமானத்தலம் என்பது இங்கு பதிவு செய்யப்பட வேண்டிய ஒன்று ஆகும். தவத்திரு. சுவாமிகளால் இயற்றப்பட்டுள்ள நூல்களுள் மிகப் பல பிறரின் வேண்டுகோளின்படி எழுந்தனவே ஆகும். ஆனால் பேரூர் பற்றிய சிற்றிலக்கியங்கள் அனைத்துமே அவராக - பிறர் வேண்டுகோள் இன்றி - இயற்றிப் பெற்றவை. மேலும் இத்தலத்திற்குத் தான் அகப்பொருட்கோவை,

கலம்பகம், பிள்ளைத்தமிழ், மாலைகள் இரண்டு, யமக அந்தாதி, சிலேடை வெண்பா மாலை, பதிகங்கள் ஏழு எனச் சிறப்பான சிற்றிலக்கியங்களை வனைந்துள்ளார். தவத்திரு. கந்தசாமி சுவாமிகளால் திருப்பேரூர் விஷயமாகப் பாடப்பட்டுள்ள செய்யுள்களின் எண்ணிக்கை ஓர் ஆயிரத்து இருநூற்றுக்கும் மேற்பட்டது ஆகும். இவ்வளவு செய்யுட்களை இவரிடமிருந்து வேறு எந்தத் தலமும் பெறவில்லை.

திருப்பேரூரில் 12-11-2010, வெள்ளிக்கிழமையன்று நடைபெற உள்ள பட்டிப்பெருமான் திருக்கோவில் திருக்குடமுழுக்கின்போது மறுபதிப்புக் காணாத பேரூர்ப் பிரபந்தங்களையெல்லாம் சுருக்கமான குறிப்புரையுடன் வெளியிட வேண்டுமெனச் சிரவையாதீன கர்த்தர் அவர்கள் திருவுளம் கொண்டார். இந்த அரிய சிவப்பணியைச் சுவாமிகள் எனக்கு வழங்கியருளினார். அதற்கேற்ப என்னால் இயன்றவரை இப்பணியை ஏற்று நிறைவேற்றியுள்ளேன். கந்தசாமி சுவாமிகளின் நூல்கள் எல்லாம் விளக்கமான விரிவுரையுடன் வெளியிடப்பட வேண்டும் என்று மூத்த பேராசிரியர்கள் விழைகின்றனர். இந்த அரிய தமிழ்ப் பணியை எனக்கு அளித்த சிரவையாதீனத் தலைவர் அவர்களின் திருமுன்புக்கு என் பணிவான நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இதில் உள்ள செய்யுள்களை எல்லாம் அச்சுக்குரிய முறையில் அழகாக எழுதிக் கொடுத்த சுவடிக் கலைஞர் திரு. **கிருஷ்ணராவ்** அவர்களுக்கு நன்றி.

இந்த நூலை மிகக் குறுகிய காலத்தில் அக்கறையுடன் எழில் மிக்கதாக உருவாக்கிக் கொடுத்த சௌமி அச்சக உரிமையாளர் திரு. **தே. திருஞானசம்பந்தம்** அவர்களின் ஆர்வமும், முயற்சியும், உழைப்பும் மிகப் பாராட்டற்பாலன. இதில் இடம் பெற்றுள்ள படங்கள் யாவும் அவர் திரட்டிக் கொடுத்தவையே ஆகும். பேரன்பிற்குரிய திரு. **தே. திருஞானசம்பந்தன்** அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்வதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

**ஆடற் பெருமான் அருமைத் திறத்தையெலாம்**
**பாடும் பனுவல் பலவற்றை - நீடும்**
**கலைத்தமிழால் தந்தருளும் கந்தமுனி வாக்கு**
**நிலைத்தபயன் ஈதல் நிசம்.**

# பொருளடக்கம்

# பட்டிநாயக மாலை

## [பேரூர்ப் புராண சார சங்கிரகம்]

**காப்பு**

*(எழுசீர் விருத்தம்)*

போற்று இயல் அரசம்பலத் திருப்பேரூர்ப்
புராணத்தின் சார சங்கிரகம்
ஏற்று இயல் பட்டி நாயக மாலை
இன்பு உற முடிய, என் உளத்து அன்பு
ஊற்று இயல் பெருக அருட் கடல் ஆகி
உவந்து வீற்றிருந்து அடி பணிவார்
வேற்றியல் பவநோய் மாற்றுஇயல் பட்டி
விநாயகன் சேவடி பணிவாம்.

***சார சங்கிரகம்*** - *உட்பொருட் சுருக்கத்தை.* **ஏற்று இயல்** - *தன்பாற் பெற்று நடக்கின்ற.* **வேற்று இயல்** - *வேறுபட்ட.* **பவ நோய்** - *பிறவிப்பிணி.*

**நூல்**

துப்பு அருள்ப் பவள வரையொடு நீலத்
தொல்வரை துணைபெறக் கலந்தது
ஒப்ப, வெள்விடைமேல் தோன்று அருள்க்காட்சி
உள்ப்புறத்து அகன்றிடாது உதவாய்-
பப்பு அருள்நலம் தோய் நேமியங் கானப்
படிவர் வேண்டிடத் தவச் சூதன்
செப்பு அணி மகிமை மெய்ப்பு அருள்ப் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 1

**துப்பு** - *சிவந்த.* **தொல்வரை** - *பழைய மலை.* **விடை** - *காளை.* **பப்பு** - *வழங்குகின்ற.* **நேமியங்கானம்** - *நைமிசாரணியம்.* **படிவர்** - *முனிவர்கள்.* **சூதன்** - *சூதமுனிவர். நைமிசவனத்தில் இருந்த சௌனகர் முதலிய முனிவர்கள் கேட்கச் சூத முனிவர் பேரூரின் பெருமையைக் கூறலுற்றார்.*

கொன் புணர் உமை தோய் உரத்தில் என்பு ஆரம்
கொண்டிடு திறத்தில் அன்புடையார்
இன் புகல் தொடையொடு என் கவிகளும் ஏற்று,
இயல் அருள்க் கடல் பெயர் புரப்பாய்-

நின் புகல் உணர்ந்த நந்தி, வேட்கு இயம்ப,
நிகழ் குகன் நாரதற்கு உணர்த்தும்
தென்புகழ்ச் சீர்த் தென்கைலை அம் பேரூர்ச்
சிட்டனே! பட்டிநாயகனே! 2

**கொன்புணர்** - பெருமை மிக்க. **உரத்தில்** - மார்பில். இன்தொடை, புகல்தொடை எனத் தனித்தனி இயையும், **தொடை** - பாமாலை. **வேட்கு** - முருகப்பெருமானுக்கு. சிவபெருமான் நந்திக்கும், நந்தி முருகவேளுக்கும், அவர் நாரதருக்கும் இத்தல மகிமையைக் கூறியருளினர்.

ஏலவார் குழலார் கருப் பெருங்குழி நின்று
ஏறுமாறு அறிகிலேன், மாயா
சால மோகத்தால் அயர்ந்தனன், அருள்வாய்-
சத்திநிபாதன் முப்பொருள் தேர்
காலவன் முத்தித் தலம் எனச் சிவலிங்-
கம் பதிட்டித்து, அர்ச்சித்து, ஏத்தி,
சீலநின் உபதேசம் பெறு பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 3

**ஏலவார் குழலார்** - மணமிக்க நீண்ட கூந்தலை உடைய மகளிர். **சத்தி நிபாதன்** - இறையருள் படிவதற்கு ஏற்ற ஆன்ம பக்குவத்தை உடையவரும். **முப்பொருள் தேர்** - பதி, பசு, பாசம் ஆகிய மூன்று நிலையான பொருள்களின் தன்மையை அறிந்தவரும். **பதிட்டித்து** - எழுந்தருளுவித்து. பிரதிட்டை. காசிப முனிவரின் மைந்தர் ஆகிய காலவமுனிவர் பேரூரில் சிவலிங்கத் திருவுரு ஒன்றை அமைத்து வழிபட்டு, இறைவனைத் தரிசித்து உபதேசம் பெற்றார்.

காமம் ஆதிய துற்குணப்பரல் உறுத்தும்
காய வெஞ்சுரத்து அயர்வேனைத்
தாமதம் அறநின் பதநிழல் சேர்த்து ஆள்-
தவத்து அயன் உறங்கத் தேனுவை மால்
"ஏமம் ஆர் இமயத்து அருந்தவம் புரி" என்று
ஏவ, மெய்ப்பயன் உறாது அயர்கால்,
சேம நாரதனால், தேனு ஓர் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 4

**பரல்** - சிறுகற்கள். **காய** - உடல் ஆகிய. **வெஞ்சுரத்து** - கொடிய பாலைவழியில். **மெய்ப்பயன் உறாது அயர்கால்** - ஆயிரம்

ஆண்டுகள் அருந்தவம் புரிந்தும் இறைவனைத் தரிசிக்க முடியாமல் வருந்திக்கொண்டிருந்தபோது. **சேம** - இன்பமயமான. சிவயோகத்தில் இருந்த பிரமன் ஒரு காலத்தில் அப்படியே தூங்கிவிட்டார். இதை அறிந்த திருமால் காமதேனுவை நோக்கித் தவம் புரிந்து இறையருள் பெற்றுப் படைப்புத் தொழிலைக் கைக்கொள்ளுமாறு ஆணையிட்டார். தவத்திற்கு மிக ஏற்ற தலம் பேரூர் என்பதைக் காமதேனு நாரதரால் அறிந்து கொண்டது.

**தனங்கள் தம்முடைய என்று இசைத்து அணைவார்**
**தனங்கள் தம்முடைய என்று ஈர்க்கும்**
**அனங்க வேள் படைகட்கு அயர்தராது அருள்வாய்-**
**அருள்கொள் நாரதன் உரைவழியே,**
**முனம் பெறு காஞ்சி படிந்து, அசரீரி**
**மொழிப்படி, தேனு ஆதிலிங்கம்**
**தினம் பெறப் புற்றின் மேல் பெய் பால்ப் பேரூர்ச்**
**சிட்டனே! பட்டி நாயகனே!** 5

**தனங்கள்** - 1. நகில்கள், 2. செல்வங்கள். அனங்கவேள் படை - மன்மதனின் சேனையாகிய மகளிர். **காஞ்சி** - நொய்யலாறு. நாரதர் உரைப்படிப் பேரூரை அடைந்தபோது அங்கிருந்த ஒரு புற்றின்மீது நாடோறும் தன் பாலைப் பொழிந்து வழிபடுமாறு ஆகாயவாணி அறிவுறுத்தியது. காமதேனு அவ்வாறே வழிபட்டுக் கொண்டிருந்தது.

**கன்னியர் அளகத்து இருளினை, தனம் ஆம்**
**கல்லினை, கண்ப் பெருங் கடலைப்**
**புல்நிலை பெறும் என் புன்னிலை மனம்நிற்**
**பொருந்தல் என்று? அருள்- பெரும் தவம் செய்**
**நன்னிலைத் தேனுக் கன்று கண்டு, ஆட,**
**நண்ணு புற்று உறையும் நின் இலிங்கச்**
**சென்னியில் கோடு குளம்பு தோய் பேரூர்ச்**
**சிட்டனே! பட்டி நாயகனே!** 6

**அளகம்** - கூந்தல். **கல்** - குன்று. **புல் நிலைபெறும்** - சார்ந்திருத்தலில் எப்பொழுதும் ஈடுபட்டிருக்கும், புல் முதனிலைத் தொழிற்பெயர். **புன்னிலை** - இழிந்த. **தேனுக் கன்று** - காமதேனுவின் கன்று. **கோடு** - கொம்பு. ஒரு நாள் இரவில் கன்று விளையாட்டாகச் சிவலிங்கத்தை மறைத்திருந்த புற்றினை மிதித்தது. பிறகு கொம்புகளால் உடைத்தது அப்போது இறைவர் திருமுடியில் கால், கொம்புகளின் தளும்புகள் உண்டாயின.

ஊன் உறும் மாயை உடல் புரந்திடற்கே,
உலகம் முற்று அவத்து உழன்று அயர்வேன்;
வான்உறும் மறுமைக்கு என் செய்வேன்? அருளாய்-
வளர் கன்றின் செயற்கு அயர் தேனு-
தான் உவப்பு உற, முன் தோற்றி, "ஈது என் உள்
சம்மதித்து ஏற்றதால் காம
தேனுவின் புரம், பட்டிபுரி" என் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 7

**ஊன் உறும்** - மாமிசத்தால் ஆகிய. **புரந்திடற்கே** - பாதுகாக்கவே. **அவத்து** - வீணாக. **தோற்றி** - இறைவன் தரிசனம் தந்து. மறுநாள் காலை கன்றின் செயலைக்கண்டு வருந்திய காமதேனு மகிழ்ச்சியடையும்படித் தாமே விரும்பி அந்தச் சுவடுகளை ஏற்றதாகவும், இத்தலம் காமதேனுபுரம், பட்டிபுரி என வழங்கப்பட்டும் என்றும் இறைவன் கூறினார்.

விடம் கொள் ஐந்தலைய அரவு தீண்டுதல் போல்
விடாது அற மயக்கும் ஐம்புலனால்
மடம் கொள்வேன் குற்றம் திருவுளம் குறியேல்;
வந்தருள்; அடைக்கலம் அடியேன்,
நடம் கொள விழை நாரணன், கயிலையில் நீ
நவின்றவா, கோமுனி ஆகி,
திடம் கொள் பத்தியினால் அணை திருப்பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 8

**மடம் கொள்வேன்** - அறியாமையை அடைந்தவனாகிய அடியேனின். **நடம் கொள விழை** - இறைவனின் திருக்கூத்தைத் தரிசிக்க விரும்பிய. சிவபிரான் திருமாலிடம் பேரூரில் கோமுனியாக வழிபட்டால் நடன தரிசனம் வழங்குவதாகக் கூறியிருந்தார். அதற்கிணங்கத் திருமால் பேரூர்ச் சென்றடைந்தார்.

நன்கு அயில் ஆயவிழி மடமானார்
நகைத்து, "இறக்கிலை கிழப் பிணமே!"
என்கயில், ஆயத் தகு துணை ஆம் உன்
இரு பதம் வல்லை ஈந்தருள் - மால்
தன் கயில் ஆய சிவலிங்கம் அமைத்து,
சக்கர தீர்த்தம் தொட்டு, ஆட்டி,
தென்கயிலாயம் சிறப்பில் செய் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 9

**அயில் ஆய** - வேலைப் போன்ற. **என்கயில்** - என்கையில், என்று பழித்துரைக்கும் போது, எதுகை நோக்கிய போலி. **ஆயத் தகு** - சிந்திக்கத் தக்க. **வல்லை** - விரைவாக. **தன் கையில்** - தன்னுடைய கைகளால். **ஆய** - ஆக்கப்பட்ட. **தொட்டு** - தோண்டி. **ஆட்டி** - முழுக்காட்டி. திருமால் பேரூரில் ஒரு சிவலிங்கத்தைத் தாபித்து, சக்கரதீர்த்தம் என ஒரு நீர்நிலையை உண்டாக்கி, அந் நீரால் இறைவனை நீராட்டி வழிபட்டு வந்தார். அந்த இலிங்கக் கோயில் தென்கயிலாயம் எனப்படும். இவ்விருத்தம் திரிபு.

அருஉரு உபயம் என்று அவிர்ந்து, அருளால்,
ஆடல் செய் நின் இயல்பு அறியாது,
ஒருவுறா வேதம் புரிகுநர்க்கு உள்ளம்
உழன்றிடாது அருள்புரி - பிரமன்
மருவுறு துயில் விட்டு உனைத் தொழ, நீ வாய்-
மலர்ந்திடல் போல் பட்டி முனிஆம்
திருவுரு அடைந்து எய்திய புகழ்ப் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 10

**உபயம்** - அருவுருவத் திருமேனி. **ஒருவுறா** - நீங்காத. பிரமன் தூக்கத்திலிருந்து விழித்து இறைவனை வேண்ட, அவர் ஆணைப்படிப் பட்டிமுனி என்னும் பெயர்தாங்கிப் பேரூரில் வழிபட்டுக் கொண்டிருந்தார்.

வார்த் திரள் முலைப் பால்வார்த்து இனி ஒருதாய்
மகவு என வளர்த்திடும் துன்பம்
தீர்த்தருள், பாராமுகம் செய்யேல்! அபயம்;
திகழ் பட்டி முனி வடகயிலை
ஆர்த்தியில் புரிந்து, சிவலிங்கம் பதிட்டித்து,
அவனியுள் இருத்து குண்டிகை தோய்
தீர்த்தத்தின் அபிடேகித்து அமை பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 11

**வார்** - கச்சணிந்த. **திரள்** - திரண்ட. **ஆர்த்தியில்** - அன்புடன். **அவனியுள் இருத்து** - நிலத்தில் வைத்த. **குண்டிகை** - நீர்க்கரகம், கமண்டலம். **அமை** - வசித்திருந்த. பட்டி முனிவர் வழிபட்ட தலம் வடகயிலாயம் எனப்படும். தன் கமண்டல நீரால் புனித நீராட்டிப் பேரூரில் பிரமன் பட்டி முனியாக வழிபட்டுக் கொண்டிருந்தான்.

இகழ் புகழ் என்னும் இரண்டும் என்றனைத் தொட்டு
ஈர்த்து அலைக்காது, மால் முன் மண்
அகழ் வினை கொண்டு எட்டரிய நின் செம்பொன்
அடி ஒளிக்குள் எனை ஒளிப்பாய்-
நிகழ் விதி காஞ்சி மேற்கினில் உன்கண்
நிறை அருள் நோக்க யாகம் செய்
திகழ் திருநீற்று மேடு அமை பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 12

மால் - திருமால். **முன்** - முற்காலத்தில். **மண்** - நிலத்தை. **அகழ்வினை** - தோன்டும் செயல். **ஒளிக்குள்** - பிரகாசத்திற்குள். **ஒளிப்பாய்** - மறையவைப்பாய். **விதி** - பிரமன். **யாகம்** - வேள்வி. நொய்யலாற்றின் மேற்கே பட்டிமுனி சிவபிரான் அருளை வேண்டிப் பெரிய வேள்வி ஒன்றைச் செய்தார். அந்த இடம் இப்போது திருநீற்று மேடு என வழங்கப்படுகிறது.

சந்தை நேர் உலகத் துன்ப வாழ்க்கையினைச்
சரதம் என்று, ஊன் வளர்த்து, உழலும்
மந்தை மந்தைகளை உறவு எனக்கருதும்
அவிச்சை என்று ஒழிதர அருள்வாய்?
முந்தை மாதவக் காலவன், பட்டி முனி, கோ-
முனி திரு நடம் தரிசிப்பான்
சிந்தை செய்து அமைநீள் மகிமை சால் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 13

**சரதம்** - நிலையானது. **ஊன்** - உடல். **மந்தை** - 1. அறிவற்ற, 2.கூட்டம், முதற்பொருளில் மந்த எனற்பாலது ஐகாரப் போலி ஆயிற்று. **அவிச்சை** - அறியாமை. **என்று** - எந்நாள். முன்னர்க் கூறப்பட்ட காலவர், பட்டிமுனி, கோமுனி ஆகிய மூவரும் இறைவன் ஆனந்தத் தாண்டவத்தை எதிர்பார்த்து வழிபட்டு வந்தனர்.

சாட்சி ஆம் உன்னோடு ஒன்றிடக் கட்ட-
சாத்தியப்படும் எனக்கு உண்மைக்
காட்சி ஈந்தருள்வது என்று? கோமுனி நீ
கழறும் மன்று அறிகிலன் கலங்க,
''மாட்சி முன் மன்றம் மறைத்து, நீர் புதிதா
வயக்கி, எற்போற்றுமின்'' என்னச்
சேட்சி ஆகாய வாக்கு அருள் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 14

***சாட்சி*** - சுத்த சைதன்யம், தூய அறிவு மயமான நிலை. **கட்ட சாத்தியம்** - மிக முயன்றால்தான் ஒரு செயல் முடியும் என்னும் நிலை. ***காட்சி*** - அறிவு, தரிசனமும் ஆம். ***சேட்சி*** - தொலைவில். நடனத்திற்கு ஏற்ற அரங்கம் எங்குள்ளது எனத் தெரியாமல் கோமுனி திகைத்தார். அப்போது புதியதாக ஓர் அரங்கத்தை அமைக்குமாறு அசரீரி எழுந்தது.

**பித்தனாய் உலக மாலிடைக் கவிழ்ந்த**
**பேதையேன்றனைக் கடைக்கணித்து, உன்**
**பத்தன் ஆக்கிடல் நிற்கே கடன்; மன்றம்**
**பணியிடம் அறிகிலர் பழிச்சி,**
**முத்தர்ஆம் காலவன் பட்டிமுனி கோ -**
**முனி உளம் வியந்து, தாழ்ந்து, ஏத்தச்**
**சித்தனாய் ஆடல் கோடி செய் பேரூர்ச்**
**சிட்டனே! பட்டி நாயகனே!** 15

***உலக மால்*** - உலகியல் ஆசை, மயக்கம் எனினும் ஆம். ***பணியிடம்*** - எழுப்ப வேண்டிய இடம். ***பழிச்சி*** - போற்றி. நாட்டிய அரங்கம் எங்கு அமைப்பது எனக் கவலைப்பட்டுக் கொண்டிருந்த போது மூவரும் வியப்படையச் சிவபெருமான் ஒரு சித்தராகத் தோன்றிப் பற்பல சித்தாடல்களைப் புரிந்தார்.

**ஒன்றினை விட்டு, ஒன்றினைப்பிடித்து, இடை அற்று**
**ஓடி, என்றனைத் துயர் உறுத்தி,**
**பொன்றிடப் புரியும் மனப் பகை ஒழித்து உன்**
**புகல் அருள் - மூவர், "சித்தேசன்**
**என்றிடில் மன்றம் காட்டு" என, வடகீழ்**
**இசை திசை அரசுஅடி நிழல்ப்பால்**
**சென்று, இரசத மன்று எழப் புரி பேரூர்ச்**
**சிட்டனே! பட்டி நாயகனே!** 16

**பொன்றிடப் புரியும்** - இறக்கச் செய்யும். **மூவர்** - காலவன் முதலியோர். **அரசு** - அரசமரத்தின். **இரசத மன்று** - வெள்ளியம்பலம். வந்த சித்தரை நோக்கிக் காலவர் முதலிய மூவரும், 'நீ பெரிய சித்தரானால் கூத்தம்பலத்தை உருவாக்கு' என்றனர். அப்பொழுது ஆதிலிங்கத்திற்கு வடகிழக்குப் பக்கத்தில் இருந்த ஓர் அரசமரத்தின் நிழலில் சித்தர் ஒரு நாட்டியமேடையைத் தோற்றுவித்தார்.

தரையொடு விண் பாதல உலகு இசையும்
சடம் அளித்திடு கொடுவினையால்,
கரை இலாத் துயர் கொண்டு, உழன்றது சாலும்;
கருணை செய் -மூவர் வேண்டிடலால்,
புரை இல் சீர் நடராசன் சிவகாமி
புரிந்து, இரண்டாம் முகுர்த்தத்தில்
திரையுடன் வெளி என்று ஒளிதரும் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 17

***தரை*** - நிலஉலகம். **சடம்** - உடல். ***கரை இலா*** - எல்லையற்ற. **சாலும்** - போதும். **புரைஇல்** - குற்றமற்ற. **புரிந்து** - செப்புத் திருமேனிகளைத் தோற்றுவித்து. இரண்டாம் முகூர்த்தம் என்றது காலையில் சூரிய உதயத்திற்குப் பின் ஒன்றரை மணி நேரம் கடந்த நேரத்தை. ஒரு முகூர்த்தம் = மூன்றே முக்கால் நாழிகை. 90 நிமிடம், ஒரு ஜாமத்தில் பாதி நேரம். அப்போது அம் மூவரும் அந்தச் சபைக்கேற்ற திருவுருவங்களைப் படைத்தளிக்க வேண்டினர். உடனே சித்தர் அம்மேடையைச் சுற்றி ஒரு திரை கட்டச் சொல்லி உள்ளே சென்று ஒரு முகூர்த்த காலம் இறுந்து சிலைகளை உருவாக்கி விட்டு மறைந்து விட்டார்.

வருத்தும் மும்மலத்தில் பட்டு அவத்து எனது ஆன் -
மா உழன்று, அயர்ந்திடு திறம் என்?
கருத்துள் மேவிய நிற்கு இசைப்பது என் ? ஆறு
காலமும் காலவன் முதலோர்
அருத்தியில் தெரிசித்திட நடராசன்
அருள் சிவகாமியாய் விளங்கித்
திருத்தியில் பூசை ஏற்றருள் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 18

**மும்மலம்** - ஆணவம், கன்மம், மாயை. **இசைப்பது** - சொல்லுவது. ***அருத்தியில்*** - விருப்பத்தோடு. ***திருத்தி*** - மனநிறைவு. மூவரும் அத்திருவுருவங்களை நாள்தோறும் ஆறுகாலமும் மனநிறைவோடு வழிபட்டு வந்தனர்.

கரத்துணை சிரத்தில் கூப்பி, நெஞ்சு என்பு
கரைதரக் கசிந்து, கண் அருவி
உரத்தினில் பாய, உனைத் துதித்திடு நாள்
உண்டுகொல்? பங்குனி மதியில்

தரத் திருவிழாப் பத்தாம் தினத்து, இரசி-
தச் சபையூடு, ஒலி மிக, உத்-
திரத்து, அத்தநாரீசரா நடி பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 19

**கரத்துணை** - இரண்டு கைகள். **நெஞ்சு என்பு** - உள்ளமும் எலும்பும், உம்மைத்தொகை. **உரத்தினில்** - மார்பில். **மதி** - மாதம். **தர** - மேன்மையான. **இரசிதச் சபை** - வெள்ளியம்பலம். **உத்திரத்து** - உத்திரம் ஆகிய விண்மீன் நாளில். **அர்த்த நாரீசரா** - மாதொரு பாகராக. **நடி** - கூத்தியற்றுகின்ற. பங்குனித்திருவிழாவின் பத்தாம் நாள் உத்தர நட்சத்திரத்தில் இறைவன் மாதொருபாகராகத் திருக்கூத்து ஆடினார்.

கருவிகள் கரணம் ஒய்ந்து, நின் செம்பொன்
கழல் நிழல் ஒன்று அடியவருள்
மருவிட அருள்வாய்-மூவர், பல்லியத்தின்
வழங்கு ஒலி அலது, நின்மல நின்
உரு அறிகிலர் ஏங்கிட, மலம் மாற்றி,
ஒப்பு இல் ஞானக்கண் ஈந்து, அருள் ஆர்
திருநடம் காணப் புரிந்தருள் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 20

**கருவிகள்** - ஐம்புலன்கள். **கரணம்** - மனம். **கழல்** - வீரக்கழல், ஆகுபெயராகத் திருவடிகள். **மருவிட** - சேரும்படி. **பல்லியம்** - இசைக்கருவிகள். **அலது** - அல்லாமல். **நின்மல** - இயல்பாகவே மலங்களினின்றும் நீங்கியவரே, விளி. **உரு அறிகிலர்** - வடிவத்தைக் காணாதவர்களாக, முற்றெச்சம். மூவரின் ஊனக்கண்களில் நாட்டியம் தெரியாததால் ஞானக் கண் தந்து தெரிய வைத்தார்.

கூற்றினுக்கு அஞ்சிச் சரண்புகும் பனவக்
குமரன் ஒத்து, என்னையும் அன்பால்
ஏற்றிடக் கருதாய்-நடன வேகத்தால்
எய்த்து, அராப்பூண் உமிழ் விடத்தால்
போற்றினோர் மயங்க, அன்னரை அன்ன-
பூரணி கரிமுகன் குகனால்
தேற்றி ஆதரித்த கருணை எம் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 21

**கூற்றினுக்கு** - இயமனுக்கு. **பனவக் குமரன்** - அந்தண வாலிபர் ஆகிய மார்க்கண்டேயர். **அராப் பூண்** - பாம்பு ஆகிய அணிகலன்கள்.

**போற்றினோர்** - வழிபட்டுக் கொண்டிருந்த. **அன்னரை** - அவர்களை. **அன்னபூரணி** - அனைவருக்கும் உணவு வழங்குபவளாக விளங்கும் பார்வதி தேவியின் கூறு. இறைவன் ஆடிய கூத்தின் வேகத்தால் அவர் அணிந்திருந்த பாம்புகள். நஞ்சைக் கக்கின. அதனால் பார்த்துக் கொண்டிருந்த அனைவரும் வெப்பத்தாலும் பசியாலும் வருந்தினர். அப்போது அன்னபூரணி உணவு வழங்க, முருகக் கடவுள் தண்ணீர் தர, விநாயகர் தம் தும்பிக்கையால் காற்றை ஊதி வெப்பத்தைத் தணித்தார்.

**தூயநின் மலர்த்தாள் கருது அளவறு சிற்-**
**சுகம் விடுத்து, இகத் துயர்ப்பந்தம்**
**தோய ஓடிடும் என் மனக் கொடும் பேயைச்**
**சுட்டு அறத் திருத்துவாய்- வஞ்சக்**
**காய மாயத்தின் தொடக்குஇல் மெய்க் கதியைக்**
**காலவன் விருப்பில் ஈந்து, இனி ஓர்**
**சேயன் என்று அமையாது அருள்புரி பேரூர்ச்**
**சிட்டனே! பட்டி நாயகனே!** 22

*சிற்சுகம்* - ஞானமயமான மகிழ்ச்சி. **இக** - இவ்வுலக. **பந்தம்** - கட்டு. **காய மாயம்** - உடல் மயக்கம். **தொடக்கு** - தொடர்பு. **சேயன்** - குழந்தை. இறைவன் காலவருக்கு அவர் விருப்பப்படி வீட்டுப்பேற்றை வழங்கினார்.

**பூவை அம்காவை இடம் எனக் கொண்ட**
**புலவர்கள் வியக்கும் நல் நலங்கள்**
**யாவையும் அருள்-பட்டி முனி கோமுனிவர்க்கு**
**இச்சை ஆம் வரம் உவந்து உதவி,**
**"மா வைகுந்தம் சத்திய உலகத்து**
**வாய்ந்தும் இக் கூற்றின் என் நடனச்**
**சேவை கண்டு அமைமின்" என்று அருள் பேரூர்ச்**
**சிட்டனே! பட்டி நாயகனே!** 23

பூவை இடம் எனக் கொண்டவர் தாமரைவாழ் பிரமன். அம்மை (நீர்) இடம் எனக் கொண்டவர் பாற்கடல் வாழ் திருமால். காவை இடம் எனக் கொண்டவர் கற்பக நாட்டு இந்திரன் முதலியோர். **புலவர்கள்** - தேவர்கள். **மா** - சிறப்பு மிக்க. **சத்திய உலகம்** - பிரமனின் சத்தியலோகம். இக் கூற்றின் என்றது பட்டிமுனி கோமுனி அமிசமாக. புராண வரலாறு வெளிப்படையாக உள்ளது.

பத்திஇல் கொடியேன் ஆயினும் வேதம்
பகர்ந்திடற்கு அரியநின் புகழ்ச்சீர்
துத்தியம் புரியும் விருப்பினேன்; கருணை
சுரந்து அருள்-"இத்தலத்து உறைவார்,
நத்தி நம் நடம் கண்டவர்க்கு எலாம் என்றும்
நவில் அறம் பொருள் இன்பம் வீடும்
சித்தி ஆகுக" என்று அருளிய பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 24

**துத்தியம்** - தோத்திரம். **உறைவார்** - வசிப்பவர்கள். **நத்தி** - விரும்பி. ***சித்தி ஆகுக*** - கிடைக்கட்டும். வெளிப்படை.

கோண்இயல் உலக வீணினில் நெஞ்சம்
கொட்பு உறுவாரை நட்பு உறவு என்று,
ஊண் இயல் பூண் அங்கு அவர் பொருட்டு ஈட்டும்,
உணர்வு இலேற்கு அருள்- அபசயத்தால்
நாணிய காளி காணிய நடனம்
நவிற்றி அம்பிகைக்கு வெள்ளிவரைச்
சேண்இயல் மன்ற நடம்தரும் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 25

**கோண் இயல்** - நன்மைக்கு மாறுபட்ட. **உலக வீணினில்** - உலகியல் தொடர்பான பயனற்ற செயல்களில். **கொட்பு** - சுழற்சி. **நட்பு உறவு** - நண்பர்களும் சொந்தக்காரர்களும், உம்மைத்தொகை. **ஊண்** - உணவு. **பூண்** - அணிகலன்கள், இது ஆடை வீடு முதலிய தேவைகளுக்கு உபலட்சணம். **அபசயம்** - தோல்வி. **காணிய** - பார்க்கும்படி. **சேண் இயல்** - வானைத் தொடும். நாட்டியப் போட்டியில் தன்னிடம் தோற்ற காளி, உமாதேவியாகத் தரிசித்து மகிழ, இறைவர் வெள்ளியங்கிரிமீது உள்ள வெள்ளியம்பலத்தில் நடம் புரிந்தார்.

இதம் பரவையின்பால் ஓதியும் நம்பி-
யின் திருப்பாட்டு அணிந்தனை; நின்
பதம் பரவு எனக்கு ஏன் அருள்கிலை?கலி நின்
பண்பை மாற்று அடல் படைப்பதுவோ?
கதம் பரவிய சூரன் செய் துன்பு, அமரர்
கயிலை உற்று ஓத, "நம் மேலைச்
சிதம்பரம் புகும்" என்று உரைத்தருள் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 26

**இதம்** - இனிய சொற்கள். **பரவை** - பரவை நாச்சியார். **நம்பி** - சுந்தரமூர்த்தி நாயனார். **பதம் பரவு** - திருவடிகளைப் போற்றுகின்ற. **கலி** - கலிகாலம். **அடல்** - வலிமை. **கதம்** - சினம். **புகும்** - சென்று சேர்வீர்களாக. சூரனால் படும் துயரங்களைத் தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட அவர் அவர்களைப் பேரூரில் தங்கித் தம்மை வழிபடுமாறு பணித்தார்.

பொய் தழைத்திடும் மாயையில் படிந்து, உள்ளம்
புழுங்கும் என்றன்னை உன் அடிக்கீழ்
எய்த என்று அருள்வாய்? "என் உரு, உமை, மால்,
இருக்கன் மெய் உருக்கொள் வெற்பு ஏத்தி,
மை தவழ் முருகோன் உருவம் ஆம் மருத
வரையிடை அமைந்து, மாதவம் நீர்
செய்திர்" என்று அமரர்க்கு உரைத்தருள் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 27

**புழுங்கும்** - கலங்கும். **என்று** - எந்நாள். **இருக்கன்** - வேதங்களை உரைத்த பிரமன். பஞ்ச கிரிகளை உரைத்தவாறு. முருகப் பெருமானின் வடிவமாகிய மருதமலையில் தங்கியிருந்து தவம்புரியுமாறு இறைவன் தேவர்களுக்கு அறிவுரை கூறினார்.

ஆர்த்த ஐம்புல வேடருக்கு இளைத்து, உன் தாள்
அடைக்கலம் ஆகும் என் அவலம்
தீர்த்து அருள் செயல் உன் கடன்; காலாக்கினி ருத்-
திரன் சடை உற்று அவிர் கங்கை
கூர்த்த வேல் வடிவு ஆம் மருத வேரூடு
கொப்புளித்து எழும் அருள் மதுரத்
தீர்த்த மான்மியச் சீர் விரித்து அருள் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 28

**ஆர்த்த** - போரிடுகின்ற. **அவலம்** - இழி நிலை. **காலாக்கினி ருத்திரன்** - பேரூழிக் காலத்தில் அனைத்து உலகங்களையும் அழிக்கின்ற ருத்திரபேதம், பொதுவாக இயமனை அழிக்கும் நெருப்புப் போன்றவராகிய சிவபிரான் எனினும் ஆம். மருதமலையில் இருந்த மருதமரம் வேலின் வடிவம் என்றும், அதன் கீழ் உள்ள சுனைக்கு அருச்சுன தீர்த்தம் எனப் பெயர் என்றும் கூறுவர். தேவர்களுக்கு நாரதர் மருதமலையின் பெருமையைக் கூறினார்.

இறப்பு இலார் உளத்து அத்துவிதமாய்க் கலந்துண்டு,
இன்பு உருவாக்கும் நின் திருத்தாள்
மறப்பு இலாது உன்னும் வரம் அருள் - மருத
வரைமிசை மகிமை மிக்கு அமைந்து
வறப்பு இலாது ஓங்கும் கன்னிகை, கந்த,
மாருதி, சரவண தீர்த்தச்
சிறப்பு இலேகருக்குப் புகன்றருள் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 29

**உன்னும்** - *தியானிக்கின்ற. கன்னிகை, கந்தம், மாருதி, சரவணம்* என்பன மருதமலையில் உள்ள புனித நீர்நிலைகள். **இலேகருக்கு** - தேவர்களுக்கு. புகன்றவர் நாரதர்.

பாவ புண்ணியம் ஆம் வினை, இவை தரும் பொய்ப்
பயன் மயக்கு ஒழிய நின் கமலச்
சேவடி அணையும் தவச் சிறப்பு அருள்வாய்-
சீர்த்தி தோய் பஞ்ச வெற்புகளும்
ஆவலில் பணிந்து, காஞ்சி தோய்ந்து உவகை
ஆழியில் படிந்து, மால் முதலாம்
தேவர் போற்று இரசிதச் சபைப் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 30

***சீர்த்தி*** - பெரும்புகழ். **உவகை ஆழி** - இன்பக்கடல். வரலாறு வெளிப்படை.

காம்பு உறழ் தோளார் கருப் பை எய்தாது, உன்
கழல் அருள் - மருத மால்வரை உற்று,
ஓம்பு மாதவ நாரதன் சொல்போல் புரியும்
உம்பர் அன்பு உவந்து, வை வேலால்
பாம்பு நேர் அசுரர்த் தடிந்து, இமையோர்கள்
பரவிட, கந்த தீர்த்தத்தால்
தேம் புணர் பூசை குகன் புரி பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 31

**காம்பு உறழ்** - மூங்கிலைப் போன்ற. **அன்பு உவந்து** - பத்தியை மெச்சி. **வை** - கூர்மையான. **நேர்** - நிகர்த்த. **தடிந்து** - அழித்து. **பரவிட** - போற்ற. **தேம் புணர்** - இனிய. முருகக்கடவுள் சூரனை அடக்கி, தேவர்களுக்கு அரசளித்து, பேரூரில் சிவபெருமானைப் பூசித்தார்.

தவம் இலேன் எனினும், உன் அடித் தொண்டர்-
தாம் பொருந்து அருள் நிலை எய்தும்
உவகை மிக்கு உடையேன்; வேண்டுவார் வேண்டல்
உதவல் உன் கடமை; ஏமாங்கி
அவ மயல்க் கடல் வீழ் பாதகச் சுமதி
ஆக்கை காஞ்சியில் புன்மா இடலால்
சிவ உலகு அமையப் புரிந்தருள் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 32

**ஆக்கை** - உடல். **புன் மா** - இழிந்த விலங்காகிய நாய். **ஏமாங்கி** - நற்குலத்தில் பிறந்தும் பரத்தைமையை விரும்பி ஏற்று வாழ்ந்தவள். **சுமதி** - மராட்டிய நாட்டைச் சேர்ந்த ஒரு வேதியன். இவன் பற்பல கொடுஞ்செயல்களால் பொருள் ஈட்டி ஏமாங்கியோடு வாழ்ந்திருந்தான். அவள் இவனை வெறுத்துப் பிரிந்து வேறிடத்திற்குச் சென்றுவிட்டாள். அவளைத் தேடியலையும்போது சுமதி பேரூர் எல்லையில் ஒரு காட்டில் விழுந்து இறந்தான். நாய் அவன் உடலை இழுத்து நொய்யலில் இட்டது. அதனால் சுமதி தன் தீவினைகள் நீங்கச் சிவலோகம் அடைந்தான்.

இரவுடன் பகலும் இடையிலும் இடையீடு
இன்றி நெக்குருகி நின் செம்பொன்
சரணம் நாடிடும் வாழ்வு அருள் - சுகுமாரி
சபிக்க, வானரம் அதுஆம் விதூமன்,
வர உனது அருளால் முசுகுந்தன் ஆகி,
வான் புரந்து அரம்பை எள்ளலின் வத்-
திரம் உறக் காஞ்சி படிந்து தாழ் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 33

**சுகுமாரி** - கலிங்க நாட்டைச் சேர்ந்த ஓர் அந்தணன் மகள். **வானரம்** - குரங்கு. **விதூமன்** - ஒரு கந்திருவன். **வான் புரந்து** - சுவர்க்கத்தை அரசாண்டு. **அரம்பை** - அப்சரசுகளில் ஒருத்தி. **வத்திரம் உற** - நல்ல முகம் அமைய. விதூமன் சுகுமாரியைக் கண்டு காமுற்றான். அவள் விரும்பாதபோதும் மிக வற்புறுத்தினான். அதனால் அவள் அவனை குரங்கு ஆகச் சபித்துவிட்டாள். அந்த வானரம் ஒரு சிவலிங்கத்தின்மீது வில்வ இலைகளைப் பறித்துப் போட்டதால் அடுத்த பிறப்பில் முசுகுந்தச் சக்கரவர்த்தியாகப் பிறந்தது. அப்போதும் அவன் முகம் மட்டும் குரங்கு முகமாகவே இருந்தது. ஒரு முறை இவன் வானுலகில் இருந்தபோது அங்கு நடனமாடிக் கொண்டிருந்த அரம்பை இவனுடைய குரங்கு முகத்தைப் பார்த்துச் சிரித்தாள். அதனால் மிக

நாணமடைந்த முசுகுந்தன் பேரூருக்கு வந்து நொய்யலில் மூழ்கி மனித முகம் வரப்பெற்றான்.

சகச ஆணவத்தின் பிணிப்பு ஒழித்து, உன் மெய்த்
தனித்த ஞானானந்த புரண
சுக சொரூபத்துாடு அமைத்தருள்- பிருகின்
சுதையை வேட்டு, அவன் இடும் சூளால்
இகல் இராக்கதன் ஆம் போகி, நாரதனால்
இரும் புனல்க் காஞ்சி தோய்ந்து, ஏத்தி,
சிகரி ஆலயம் யாகம் புரி பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 34

**சகச ஆணவம்** - உள்பொருள் ஆகிய ஆணவ மலம். **பிணிப்பு** - கட்டு. **தனித்த** - இணையற்ற. **புரண** - முழுமையான. **சுகசொரூபத்துாடு** - இன்பவடிவத்தோடு. **பிருகின் சுதை** - பிருகு முனிவரின் மகள். அவன் என்றது முனிவரை. **சூள்** - சாபம். **போகி** - இந்திரன். **சிகரி** - கோபுரம். அகிதவுட்டிரன் என்றும் அரக்கனால் தோற்கடிக்கப்பட்ட இந்திரன் இமைய மலையில் திரிந்துகொண்டிருந்தபோது பிருகு முனிவரின் மகளைக் கண்டு காமுற்று வலியப்பற்றினான். அப்போது பிருகுவின் சாபத்தால் இந்திரன் அரக்க வடிவடைந்தான். நாரதர் அவன்பால் சென்று பேரூருக்கு அழைத்து வந்து நொய்யலில் மூழ்குவித்தார். அவன் பழைய நிலையை அடைந்தான். பேரூரில் கோவில் கட்டி வேள்வியும் இயற்றினான்.

ஈர்த்து, எனை அநித்தத் துக்கம் ஆம் பொருட் கண்
இச்சை உண்டாக்கி, மிக்கு அலைக்கும்
துார்த்த வன்மனம் துார்த்தருள்-தவக்கோலச்
சுவிர்த்தி வன்கொலைப் பவம் தலங்கள்
பார்த்துநீங்காது, நாரதன் உரைத்த-
படி கரிகால் சோழன் படிய
தீர்த்த நல் காஞ்சித் தீர்த்தம்ஆர் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 35

**அநித்த** - நிலையற்ற. **துக்கம் ஆம்** - துன்பமயம் ஆகிய. **துார்த்த** - கொடிய. **துார்த்தருள்** - அடக்குவீராக. **தவ** - தவம் புரிபவனும். **கோல** - பன்றி வடிவத்தில் இருந்தவனும் ஆகிய. **சுவிர்த்தி** ஓர் அந்தணன். **பவம்** - பழி. **படிய** - மூழ்க. **தீர்த்த** - போக்கிய. சுவிர்த்தி என்னும் வேதியன் தன் தவம் உறவினரால் இடையூறுபடாமல் இருக்கப் பன்றி வடிவில் வசித்து வந்தான். அப்பன்றி நீர் குடிக்கும்போது உண்மையை

அறியாத கரிகாற்சோழன் அதனை அம்பெய்திக் கொன்றுவிட்டான். அதனால் அரசனுக்குக் கொலைப்பழி நேர்ந்துவிட்டது. நாரதரின் உபதேசப்படிக் கரிகாலன் நொய்யலில் மூழ்கிப் பாவத்தைப் போக்கிக்கொண்டான்.

**செய்வகை ஈது என்று அறிகிலேன், மாயைத்**
**தேகமே யான் எனத் திரிந்தேன்;**
**உய்வகை எது? கந்தருவன்மேல் மால் உற்று,**
**உமை சொலால், அரமகளிர்கள் ஆம்**
**மைவளர் விழியார் எழுவரும் கரிகால்**
**வளவனோடு உற்று மூழ்கிடுகால்**
**தெய்வ மெய் தரும் காஞ்சித் திருப்பேரூர்ச்**
**சிட்டனே! பட்டி நாயகனே!** 36

***மால் உற்று*** - காதல் கொண்டு. ***தெய்வ மெய்*** - கடவுளருக்கு உரிய உடம்பு. உமாதேவியின் சேடியர் எழுவர் கந்தருவன் ஒருவனைக் கண்டு காமுற்று தேவியின் சாபத்தால் மானிட மங்கையர் ஆகினர். அவர்களும் சோழனோடு நொய்யலில் மூழ்கித் தம் சாபம் நீங்கிப் பழைய வடிவம் பெற்றனர்.

**விருப்புடன் வெறுப்பு என்று எழும் மனநினைவை**
**வேர் அறக் களைந்து, உனைக் கருதத்**
**திருப்புவாய்-கரிகால் சோழனும் உமைதன்**
**சேடியர் எழுவரும் திகழ்நின்**
**உருப் பதிட்டித்து அர்ச்சனை செய்கால் தோன்றி**
**உடன் பிறவா நெறி தரலால்**
**திருப் பெயர்க் காரணம் பெறு பேரூர்ச்**
**சிட்டனே! பட்டி நாயகனே!** 37

***செய்கால்*** - புரியும்போது. ***தோன்றி*** - இறைவன் காட்சியளித்து. ***பிறவா நெறி*** - மறு பிறவியற்ற நிலை. அதனால் பேரூருக்குப் *பிறவாநெறி* என ஒரு காரணப் பெயர் உண்டாயிற்று.

**மாயவன் அயன் இந்திரன் முதல் தேவர்**
**வாழ்வையும் தாழ்வு எனக் கருதும்**
**நேய மெய்த் தொண்டர் பதத் துகள் அணிந்து, என்**
**நெஞ்சு உவப்பு உறுதினம் நிகழ்த்தாய்-**

தூய மெய்ப் பத்தி கொண்டு அவிர் கரிகால்
சோழன் மூழ்கிடுதலால் நாம-
தேயம்ஆர் துறைதோய் காஞ்சிவாய்ப் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 38

**நாமதேயம் ஆர்** - பெயரைப் பெற்ற. கரிகாலன் மூழ்கிப் பேறு பெற்ற துறை சோழன் துறை என வழங்கப்படுகிறது.

ஊடிடும் தொழில் இன்பு எனப் புரி மடவார்க்கு
உவப்பு உறல் உன்னினன் அல்லால்,
பேடி வில் அடி கொண்டு அருளும் நின் கருணைப்
பெருக்கம் ஓர்கிலன்; கயிலையின்பால்
ஆடியில் நீ முன் அழைத்திடச் சாயை ஆகி
வந்தருளும் ஆரூரன்
தேடிவந்து, ஆடும் காஞ்சியம் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 39

**உவப்பு உறல்** - விரும்புதல். **உன்னினன்** - நினைத்துச் செய்தேன். **பேடி** - அருச்சுனன். அருளியது பாசுபதக் கணையை. **ஆடி** - கண்ணாடி. **சாயை** - நிழல். **ஆரூரன்** - சுந்தரமூர்த்தி நாயனார். சிவபிரான் தம் படிவத்தைக் கண்ணாடியில் பார்த்து அழைக்கச் சுந்தரர் தோன்றினார். அவரே திருநாவலூரில் சுந்தரமூர்த்தி நாயனார் ஆக அவதரித்தார். சுந்தரர் பேரூருக்கு வந்தார்.

அறுவகை அகமே அகப்புறம் புறத்தோடு
அமை புறப்புறச் சமயங்கள் -
தொறும் அமைந்து, எவரும் தொழும் கடவுளராத்
துலங்கு உன் மாண்பு உணர்த்துதி - ஊரன்
குறுகிட, உவப்பாய்ச் சிவையுடன் பள்ளக்
கோலம் ஏற்று, உயர் மறைச் சிரம்நேர்
செறுவினுள்ப் புகுந்து ஆட்டு அயர் திருப்பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 40

அகச்சமயங்கள் ஆறு : பாடாணவாதம், பேதவாதம், சிவசமவாதம், சிவசங்கிராந்த வாதம், ஈசுவர அவிகார வாதம், சிவாத்துவிதம் என்பன. அகப்புறச் சமயம்: பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வைரவம், ஐக்கியவாத சைவம். புறச்சமயம்: தருக்கம், மீமாம்சை, ஏகான்ம வாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம். புறப்புறச்சமயம் : உலகாயதம், மாத்தியமிகம், யோகாசாரம். சௌத்திராந்திகம்,

வைபாடிகம், ஆருகதம். **கடவுளரா** - பல சமயத்தினர் பல்வேறு நாமரூபங்களோடு போற்றுதலின் கடவுள் ஒருவரே எனினும் பன்மையிற் கூறப்பட்டது. **ஊரன்** - சுந்தரர். **சிவை** - உமை. **செறுவினுள்** - வயலில். **ஆட்டு அயர்** - திருவிளையாடல் புரிந்த. சுந்தரமூர்த்தி நாயனார் கோவிலுக்கு வரும்போது இறைவன், இறைவி, இரு மக்கள் அனைவரும் பள்ள வடிவேற்று வயலுக்குள் இறங்கி நாற்று நடலாயினர்.

அறாத ஆகுலத்துள் வீழ்ந்து, அயர்ந்து, உண்மை
அறிவு இழந்து, உழலும் என்றனை நீ
வெறா விலக்கிடுமாறு எண்ணிடில் திக்கு
வேறு இகத்து உளது கொல்? விளம்பாய்-
நறா உமிழ் கடப்பந் தார்ப் புயக்குமர
நாயகன், ஐங்கரன் பள்ளச்
சிறாரில் உற்று ஆடும் பணை பொலி பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 41

**அறாத** - தீராத. **ஆகுலத்துள்** - கவலையில். **வெறா** - வெறுத்து. **திக்கு** - கதி. **இகத்து** - இவ்வுலகில். **ஒறா உமிழ்** - தேன் பிலிற்றும். **சிறாரில்** - சிறுவர்களைப் போல. **பணை** - வயல். புராணச் செய்தி வெளிப்படை.

கருக் கடலிடை ஆழ்ந்து உழல் எனை, முத்திக்
கரை பெறுங் கரை இல் இன்பு உருத்தோய்ந் -
திருக்க, நின் கமலத் துணைப் பதப் புணை ஈந்-
திடற்கு எந்நாள் உள் கருதிடுவாய்?
மருக்கமழ் துளவன் முதல் சுரர் இதை நாற்று
ஆதி ஆம் வடிவுடன் மருவித்
திருக் கணநாதர் ஏவல் செய் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 42

**கரைஇல்** - எல்லையற்ற. **புணை** - தெப்பம். **உள்** - மனத்தில். **மருக்கமழ்** - நறுமணம் வீசுகின்ற. **துளவன்** - துழாயணிந்த திருமால். **சுரர்** - தேவர்கள். **இதை** - கலப்பை. **சிவ கணநாதர்** - சிவபெருமான் ஆகிய அனைத்துக் கணங்களின் தலைவர். வரலாறு வெளிப்படை.

மை உறழ் மேனி மால் அயன்காணா-
வண்ணம் ஓங்கிய உனை, உலகப்
பொய்யுள் ஆழ்ந்து இளைப்பேன், என் உணர்வு அதனால்
பொருந்தல் உண்டோ? அலர்மகளிர்,

பை உறழ் அல்குல் சசி, இவர் பச்சைப்
பள்ளி நாயகியினோடு உவந்து,
செய்யுள் நாற்று அமைக்கும் மகிமைசால் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 43

**மை உறழ்** - மேகம் போன்ற. **இளைப்பேன்** - வருந்துபவன் ஆகிய அடியேன். **அலர் மகளிர்** - தாமரையில் உள்ள திருவும் கலைமகளும். **பை** - பாம்பன் படம். **சசி** - இந்திராணி. **இவர்** - ஆகிய தேவமகளிர். **பச்சைப் பள்ளி** - பள்ளி வடிவத்தில் உள்ள பச்சை நாயகி. **செய்யுள்** - வயலில். புராணச் செய்தி வெளிப்படை.

வண்டு அமிழ்ந்து அருந்தும் மதுக் கடுக்கையை நேர்
வண் தமிழ் கொண்டு போற்றிடச் செய்து,
அண்டர் மெச்சிடு சீர் உறப்புரி - நம்பி
ஆலயத்து உனை அறிகிலன், நீ
விண்ட சொல் வழுவா நந்தியை வினவி,
விழிக் குறிப்பால், வயல் அணைந்து,
தெண்டன் இட்டு, அன்பில் போற்று அருட் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 44

**மது** - தேன் நிறைந்த. **கடுக்கையை நேர்** - கொன்றை மாலையை நிகர்த்த. **அண்டர்** - தேவர். **நம்பி** - சுந்தரர். **அறிகிலன்** - காணாதவராகி. **விண்ட** - சொல்கின்ற. **வழுவா** - மாறாத. நாயனார் இறைவனைக் கோயிலில் காணாமல் நந்தியைக் கேட்டார். அவர் விழியால் வயலைக் காட்டினார். சுந்தரர் அங்கு சென்று இறைவனை வழிபட்டார்.

உழுந்து கண்ணாடி நின்று உருள் பொழுது உன்
உரு உளத்து உன்னி, நெக்குருகி,
தொழும் தவப்பெரியோர் பதத் துகள் அணிமெய்த்
தொண்டர் தம் தொண்டன் ஆக்கிடுவாய்-
அழுந்து உளப் பத்திச் சுந்தரனுடன், நீ
அம்மை மால் ஆதியர் படியும்
செழும் திருக் காஞ்சிநதி அணிப்பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 45

**உழுந்து** - உளுந்து. **உன்னி** - தியானித்து. **அழுந்து** - நன்கு பதிகின்ற. **படியும்** - நீராடும். வயலில் இருந்த பட்டீசர் முதலியோர் மேலே வந்து காஞ்சியில் நீராடி ஆலயத்திற்கு வந்தடைத்தனர்.

பெண்டொடு பிள்ளை, சோதரர், உற்றார்,
பெற்றவர், மற்றவர் பாசம்
கொண்டு, ஒடுங்கிடுவேற்கு அருள்செய்-நின் மொழிகள்
குறிப்பினால் பகர் நந்தி சென்னி
மண் தொடு படையால் துணித்து அவன் தீர்த்தம்
வயக்கிப் பூசித்தலால் இன்பாய்த்
தெண்டொடு வரம் நல்கிய அருட் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 46

**ஒடுங்கிடுவேற்கு** - தகுதியில் சுருங்கி விட்ட எளியேனுக்கு. **சென்னி** - தலை. **மண் தொடு படை** - மண்வெட்டி. **துணித்து** - வெட்டி. **தீர்த்தம் வயக்கி** - நீர்நிலை ஒன்றை உண்டாக்கி. **தெண்டொடு** - நந்திக்கு உரிய பிரம்பு, இது பழைய அதிகாரத்தை வழங்கி என்றவாறு. சுந்தரருக்கு இறைவரின் இருக்குமிடத்தைக் காட்டியதால் நந்தியின் முகத்தை மண்வெட்டியால் சிதைத்தார். நந்தி வணங்கப் பழைய பதவியை வழங்கினார்.

உருநடம் ஆடி, அனல் உறும் மெழுகில்
உளம் உருக்கிடும் மட மானார்
கரு நடம் ஆர் புன் பிறப்பு இறப்பு ஒழியக்
கண் அருள் புண்ணிய மூர்த்தீ!
அரு நடம் ஆர் பாப் புகலும் ஆரூரர்
அன்பில் ஏத்திட, வெள்ளி மன்றில்
திருநடம் காணப் புரிந்தருள் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 47

**உரு** - அழகிய. **கரு நடம் ஆர்** - கருப்பையில் உழல்கின்ற. பட்டீசர் சுந்தரருக்கு வெள்ளியம்பலத்தில் நடனதரிசனம் அருளினார்.

கார் அகங்கார வினைத் திரள் மாயக்
காயத்தில், ஐம்புல வேடர்
போர் அகம் காணப் பயந்தனன்; அருள்வாய்-
போற்றும் ஆரூரர் பொன் கேட்ப,
மூரல் செய்து, "ஆடலே பரிசு, இஃது
முத்தி அம் தலம், பொன் ஈகிலம், நம்
சேரலன்பால் கொள்" என்று அருள் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 48

**கார் அகங்கார** - கரிய ஆணவத்தின் துணை ஆகிய. **வினைத்திரள்** - இருவினைகளால் விளைந்த. **மாய** - நிலையற்ற. **காயத்தில்** - உடலில். **அகம் காண** - உள்ளத்தில் நிலைபெற. **மூரல்** - புன்முறுவல். **ஈகிலம்** - தரமாட்டோம். **நம்** - எம் அன்பன் ஆகிய. **சேரலன்பால்** - சேரமான் பெருமான் நாயனாரிடம். செய்தி வெளிப்படை.

வெருச் சித்தம் படைத்து நமன் உறாது, உன் தாள்
விரை மலர் கொண்டு அருச்சித்தே
அருச்சித்தம் பெறச் செய்- கீழ்ச்சிதம்பரப் பொன்-
அம்பலம் தொழும் நம்பி, இன்பப்
பெருக்குற்ற வெள்ளி மன்று கண்டு, வந்து,
"பேரூரர் பெருமானைப் புலியூர்த்
திருச்சிற்றம்பலத்தில் பெற்றாம்" என் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 49

**வெருச் சித்தம்** - அச்சமூட்டும் எண்ணம். **விரை** - மணம் மிக்க. **அரு சித்தம்** - அறிவினை அறியும் அறிவு. **கீழ்** - கிழக்குத் திசையில் உள்ள. செய்தி வெளிப்படை.

தொல்லை வெம் பவப் பாலையில் நடந்து அயர்ந்து
துடிக்கும் என் ஆருயிர், அருள் வீட்டு
எல்லை எய்திடும் நாள் இஃது எனவேனும்
இயம்பில், வன்துயர் அகல்வேனே;
வல்லை நேர் கொங்கைப் பரவை கோன் திருவாய்
மலர்ந்த மா மறைத் துதிவினவித்
தில்லை அந்தணர் தேர் மகிமைசால் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 50

**தொல்லை** - வருத்தப்படுத்தும். **பவப் பாலை** - பிறவி ஆகிய பாலைவனம். **வல்லைநேர்** - சூதாடு கருவியைப் போன்ற. **பரவைகோன்** - பரவை நாச்சியாரின் கணவர், சுந்தரர். **தேர்** - பேரூரைப் பற்றித் தெரிந்து கொள்கின்ற. செய்தி வெளிப்படை.

வருணம் ஆச்சிரமம் கடந்து, தேகாபி-
மானம் அற்றவர் உளத்து அவிர் உன்
தருண வாரிசத் தாள் முடிபுனை - தில்லைத்
தலம் விடுத்து அணைந்திடு மறையோர்

அருள் நலம் பெறுவான் அழகிய திருச்சிற்-
றம்பலம் புரிந்து, அர்ச்சித்து, ஏத்தித்
தெருள் நடம் கண்டு, மகிழ் திருப் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 51

**வருணம்** - குலம். **ஆச்சிரமம்** - மாணவ நிலை முதலிய நான்கு நிலைகள். **தேகாபிமானம்** - உடலே நான் என்னும் நினைவு. **தருண** - இளமை வாய்ந்த. **வாரிசத்தாள்** - தாமரைத் திருவடிகளை. **முடிபுனை** - அடியேனின் தலையில் சூட்டு. **அணைந்திடு** - பேரூரை வந்தடைந்த. **பெறுவான்** - அடைவதற்காக. **அழகிய திருச்சிற்றம்பலம்** - தில்லைவாழந்தணர்கள் வழிபட்ட கோவில். செய்தி வெளிப்படை.

கார்த்தகைக் குழல் செவ்வரி மதர்க் கண்ணார்
காதல் வாள் அரவம், நல் மதி உண்டு,
ஈர்த்து, அவத்து அலைக்காத் தவப் பயன் பிறவி
எவற்றினும் யான் உறப் புரிவாய்-
சீர்ப் பட்டீச்சுரத்தின் மூன்று யோசனையுள்
தேவர் தானவர் முனிவோர் செய்
தீர்த்தம் நல் சிவலிங்கங்கள் ஆர் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 52

**கார்த் தகை** - மேகத்தைப் போன்ற. **குழல்** - கூந்தலையும். **வாள்அரவம்** - ஒளிமிக்க பாம்பு. **மதி உண்டு** - அறிவை மயக்கி, பாம்பு சந்திரனை விழுங்கி என்பது தொனி. **ஈர்த்து** - தன்வயப்படுத்தி. **அலைக்கா** - உழலவைக்காத. **பட்டீச்சுரம்** - திருப்பேரூர் ஆலயத்தின் திருப்பெயர். யோசனை - பழங்காலத்தில் வழக்கில் இருந்த ஓர் நீட்டல் அளவை, 4 காதம் கொண்ட தூரம். **தானவர்** - அசுரர்கள். செய்தி வெளிப்படை.

இன்னிசை மறைகள் ஏத்தும் நின் புகழ்ச்சீர்
இடை அறத் துதிக்க வைத்து எனை ஆள் -
பின் இசை பிரமன் படைப்புஉற, முத்திப்
பேறு உறுமாறு உளம் கருதி
முன்இசை அயன் மால் விண்ணவர் யோகர்
முனிவர் போற்றிட, நடம் காட்டும்
சின்னிசை வெள்ளியங்கிரிப் பேரூர்ச்
· சிட்டனே! பட்டி நாயகனே! 53

**படைப்பு உற** - சிருட்டித் தொழில் கைவரப் பெற. **சின் இசை** - ஞானமயமான. முன் ஓர் ஊழியில் பிரமன் படைப்புத் தொழிலை வேண்டியும், முன்னர் பதவியில் இருந்த பிரமன், திருமால் முதலியோர் வீடுபேற்றை நாடியும் தவம் செய்தனர். அவர்களுக்காகச் சிவபெருமான் நடனதரிசனம் காட்டினார்.

**விரிதரும் உலகப் பவ வினைக் காட்சி**
**விடுதி ஆம் என் உளம், திருந்தப்**
**புரிதரு செயல் உன்றனக்கு உரித்து; என்னை**
**புகல்வது இங்கு உளது மற்று அடியேன்?**
**தெரிதரு நட வேகத்து, அரா நஞ்சம்**
**சிந்து வெப்புஉற்று உளோர் வருந்த,**
**திரிபதகையை, நீக்கு என விடும் பேரூர்ச்**
**சிட்டனே! பட்டி நாயகனே!** 54

**பவ வினைக்காட்சி விடுதி** - பிறவிக்குக் காரணமான கருமங்களின் கண்காட்சி சாலை. **உளோர்** - அங்கு இருந்தவர்கள். **திரிபதகை** - கங்கை. **நீக்கு** - வெப்பத்தை மாற்று. அப்போது இறைவன் அணிந்திருந்த பாம்புகள் விடத்தைக் கக்கின. அதனால் வருந்தி அனைவரும் முறையிட்டனர். உடனே சிவபிரான் கங்கையை ஓர் ஆறாகப் பாய்ந்து வரும்படிப் பணித்தார்.

**உள் இயல் ஒளிக்குள் ஒளி என, அகலாது**
**உறையும் நின் நிறைவு உளத்து உன்னேன்;**
**சள் இயல் புலன்வாய்ப் புகுந்து இகத்து உழன்றேன்;**
**தவறு உளம் கொண்டிடேல் - எந்தாய்!**
**வெள்ளியங் குன்றச் செவிஅடி உரோமம்**
**மேவு வன்னியில் உனது உரை போல்**
**தெள்ளி மேல் எழுந்த நதி புகும் பேரூர்ச்**
**சிட்டனே! பட்டி நாயகனே!** 55

**சள் இயல்** - தொல்லைப்படுத்தும். செவியடி உரோமம் மேவு வன்னி - மலையின் காதின் உரோமமாக உருவகிக்கத்தக்க வன்னிமரம். **உரைபோல்** - ஆணைப்படி. அப்போது அங்கிருந்த வன்னிமரத்தின் அடியிலிருந்து ஆறு பாய்ந்து வந்தது.

பித்து இயல் உலகப் பொய் நடைப்பட்டு,
பிணக்கு உறு குணத்தர்கள் நட்பு உள்
வித்தி, ஓவாது துயர்க் கண்ணீர் பாய்ச்சி,
விளைக்கும் என் களைப்பு ஒழித்து அருள்வாய்-
புத்து இயல் கங்கை நீர் படிந்து, அயின்று
புணர்ந்துளார் சோகம் அற்று, இட்ட
சித்தி எய்திடத் தந்தருள் அணிப் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 56

***வித்தி*** - விதைத்து. ***அயின்று*** - குடித்து. ***இட்ட சித்தி*** - படைப்புத் தொழில், முத்தி ஆகிய விருப்ப நிறைவேற்றம். அனைவரும் அதில் மூழ்கி வெப்பம் தணிந்தனர். அந்த ஆறே காஞ்சி என்னும் பிறவாநெறி. அத்துடன் தங்கள் விருப்பமும் நிறைவேறப் பெற்றனர்.

நவநிதித் திருவுள் மூழ்கு சீர் தன்பால்
நண்ணி மூழ்குநர்க்கு எளிது ஆக்கும்
தவநதி, அமுத உந்தி, ஆதி கங்கை,
தட்சிண கங்கை, ஞான தோயை,
நிவ கலி கன்ம நாசினி, பிறவா-
நெறி பிப்பிலம், பிரயாகை,
சிவநதி, விருத்த காஞ்சிவாய்ப் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 57

***நவநிதித் திருவுள்*** - குபேரனிடம் உள்ளதாகக் கூறப்படும் சங்கம், பதுமம் முதலிய ஒன்பது பொக்கிஷங்கள் ஆகிய பெருஞ்செல்வத்தில். இச் செய்யுளில் நொய்யலாற்றின் பிறபெயர்கள் பட்டியலிடப்பட்டுள்ளன.

"ஈண்டிய இறப்பும் பிறப்பும் நீக்கிடுதற்கு
இத்தலம் அன்றி இன்று" என்னத்
தூண்டிய நிற்கு, யான் செய் கைமாறு உன்னைத்
துதித்தல் அற்று அறிகிலன்; தீரத்து
ஆண்டு இரும் தபம் ஆதிய புரிவார்க்கு ஒன்று
அனந்தமாப் பெருக்கி, நல் முத்தி
தீண்டினோர்க்கு அருளும் காஞ்சிஅம் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 58

***தீரத்து*** - ஆற்றங்கரையில். ***இரும்*** - பெரிய. ***அனந்தம்*** - பல மடங்காக. செய்தி வெளிப்படை.

வார்த்திகம், "போகம் ஆற்றலை, போக
மாற்று" என வந்தும், ஏடணைகள்
ஆர்த்து இகத்து அலைக்க மெலிந்தனன்; அருளாய்-
அன்பில் மண்டலம் படிந்து அயில்வோர்
ஆர்த்தி ஈந்து, அலகை பிணி மலடுகள் முற்று
அறுத்து, இறுதியில் பிரமபதம்
சேர்த்திடு பிரம தீர்த்தம் ஆர் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 59

**வார்த்திகம்** - முதுமைப்பருவம். **போகம் ஆற்றலை** - உன்னால் இன்பம் துய்க்க முடியாது. **போக மாற்று** - அந்த எண்ணம் நீங்கும்படி மனத்தை வேறு துறைகளில் ஈடுபடுத்து. **ஏடணைகள்** - ஆசைகள். ஆர்த்து - கட்டி. மண்டலம் - 48 நாள்கள், சிலர் 45 என்பர். **அயில்வோர்** - அருந்துவோர். **ஆர்த்தி** - விருப்பங்கள். **அலகை** - பேய். பேரூரின் வடகயிலாயத்தில் உள்ள பிரமதீர்த்தத்தின் சிறப்புக் கூறியவாறு.

நித்தமும் படிந்து இன்புற அயின்றவர்க்கு
நேர் வினைப் பகை அற நீக்கி
உத்தமப் பயன் நல்கு காலவ தீர்த்தம்,
ஒளிர் கதிர், இந்திரன் தீர்த்தம்,
நத்து அருள் கந்ததீர்த்தம், கும்பேசன்
நகத்தின் கீழ்க் குறுமுனி தீர்த்தம்,
சித்த தீர்த்தம், யோகி தீர்த்த நல்பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 60

**நேர்** - ஏற்படுகின்ற. **கதிர்** - சூரியதீர்த்தம். **கும்பேசன், குறுமுனி** - அகத்தியர், இது அகத்திய தீர்த்தம். **நகம்** - மலை. பேரூரில் உள்ள பல புனித நீர்நிலைகள் கூறப்பட்டுள்ளன.

மறம் தரும் கொடு வல் வினையினரேனும்
வாய் பெய் அக்கணத்து, அவர் ஆவி
இறந்திடப் புரிந்து, பின்பு இறவா வீட்டு
இசைப்பதாய், தாம்பிரம் ஆதி
நிறம் தரும் பொன்னாய்ச் சித்தர்கள் புரியும்
நின்மலத் தன்மை உற்று, ஓங்கும்
திறம்பொலி நச்சுப் பொய்கை ஆர் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 61

**மறம் தரும்** - அறம் அல்லாததாகிய. **பெய்** - ஊற்றிக் கொண்ட. **ஆவி** - உயிர். **தாம்பிரம்** - செம்பு. **நின்மல** - தூய. பட்டீச்சுரத்தின் வடதிசையில் உள்ள நச்சுப் பொய்கையைப் பற்றிய செய்தி இது.

அங்கம் ஆர் தாக சோகம் அற்றிடுமாறு
 அருந்தினோர் ஆடினோர்க்கு அருளும்
மங்கள வசிட்டம், பார்க்கவம், வாம-
 தேவம், பொன், கேத்திரபாலம்,
அங்கி, நந்தீசம், ஏமமே, காளி,
 அமை குலசேகரம், பாலம்
சிங்கம், சக்கரம், துர்க்கை தீர்த்தம் மன்பேரூர்ச்
 சிட்டனே! பட்டி நாயகனே! 62

**அங்கம் ஆர்** - உடலில் ஏற்படும். **ஆடினோர்** - மூழ்கினவர்கள். பேரூரில் உள்ள மேலும் பல தீர்த்தங்கள் பட்டியலிடப்பட்டுள்ளன.

தசை உடல்த் துவக்குஆம் பரிச மாத்திரத்தால்
 சார் உயிர்க்கு இக பரத்து இன்பம்
இசைதல் செய் சண்டேசுரம், சத்த கன்னி,
 இந்துவே, பிரமத கணமே
நசை கொள் அங்கிரமே, சோழம், இயக்கம்,
 நாரதம், முசுகுந்தம், தேனு,
திசை கொள் கன்னிகை தீர்த்தம் பொலி பேரூர்ச்
 சிட்டனே! பட்டி நாயகனே! 63

**தசை** - மாமிசத்தால் ஆன. **துவக்கு** - தோல். **பரிச மாத்திரத்தால்** - தொட்ட அளவில். **சார்** - தன்பாற் பொருந்திய. மேலும் பல புண்ணிய தீர்த்தங்கள் கூறப்படுகின்றன.

நின் மயம் ஆகும் தன்மையால் சித்தி
 நிறைதரு தருக்குலம், கொடிகள்
கொன்மணி, இரசமணிக் கூபம், குகை, நாற்-
 கோட்டு இபம், மாங்கிச பேதி,
பொன்மயச் சோதித் தாரு, பால் கிணறு,
 பொருஇல் சர்க்கரை நதியும் சேர்
சின்மய வெள்ளியங்கிரிப் பேரூர்ச்
 சிட்டனே! பட்டி நாயகனே! 64

**நின் மயம்** - (சிவபெருமானாகிய) தேவரீரின் வடிவம். **தருக்குலம்** - மரவகைகள். **கொன்** - பெருமை மிக்க. **இரசமணிக் கூபம்** - பாதரசமணி கிடைக்கும் கிணறு. **நாற்கோட்டு இபம்** - நான்கு தந்தங்களை உடைய யானை. **மாங்கிசபேதி** - ஊனைக் கரைத்துவிடும் ஒரு செடிவகை. **சோதித் தாரு** - ஒளி மயமான மரம். **சின்மய** - ஞானமயமாகிய. வெள்ளியங்கிரி மலையில் உள்ள வியப்புப் பொருள்கள் கூறப்பட்டன.

**இந்து ஆன பளிங்கு வரை, சிலா நதியொடு,**
**இருங் குகை, பாரத சரசில்**
**கொந்து ஆன கோடி தூண் பொலி கனகக்**
**குளிர் மன்றில் ஐங்கரன் செவ்வேள்**
**நந்து ஆன கரன் ஆதியர் திரண்டு ஏத்த**
**நனி அதிர் ஐங்கருவி ஒலி**
**சிந்து ஆன முத்தர் செவி புகும் பேரூர்ச்**
**சிட்டனே! பட்டி நாயகனே!** 65

**இந்து ஆன** - சந்திரனைப் போன்ற. சிலா நதி - தன்பால் பொருந்திய எல்லாவற்றையும் கல்லாகச் செய்துவிடும் ஆறு. **பாரத சரசு** - ஒரு குளத்தின் பெயர். **நந்து ஆன கரன்** - சங்கேந்திய திருமால். **ஐங்கருவி** - தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, மிடற்றுக் கருவி (குரல்), கஞ்சக்கருவி ஆகிய ஐவகை இசைக்கருவிகள். சிந்து ஆன - கடலின் முழக்கமும் குறையும்படி. இதுவும் அவை.

**வான் உளார் வியக்கும் சந்தனச் செறிவில்**
**வாய்த்த ஐந்து ஏழ் தலை நாகந்-**
**தானும், சந்தானகரணி முன் ஔட-**
**தங்களும்,வெள்ளி வெற்பினில் ஆ-**
**மானும், மால் வெற்பில் தீர்த்தமும், அயன்தன்**
**வரையினில் சிலாநதி, மருதில்**
**தேனு வந்து உலவும் மகிமை தோய் பேரூர்ச்**
**சிட்டனே! பட்டி நாயகனே!** 66

**செறிவு** - சோலை. **சந்தான கரணி** - முரிந்துவிட்ட உறுப்புகளை இணைத்துவிடும் மூலிகை. **ஔட தங்கள்** - மருந்துத் தாவர வகைகள். **ஆமான்** - காட்டுப்பசு. **மால் வெற்பு** - விண்டுகிரி. **அயன்தன் வரை** - பிரமகிரி. **மருதில்** - மருதமலையில். **தேனு** - காமதேனு. இதுவும் அது.

உத்தேசம் ஆன பயன் எலாம் கணத்தில்
உதவி முத்தியும் தரும் தகைசால்
மெய்த் தேசம் இதை அல்லாது இலை எனும் மெய்
விளக்கு இறவாப் பனையுடன், ஓர்
பொய்த் தேசமான ஈங்கு உறப் பிறவாப்
புளி, ஆதிலிங்கருக்கு அருகே
சித்தேச மரம், காஞ்சியும் அவிர் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 67

**கணத்தில்** - ஒரு நொடியில். **மெய்த் தேசம்** - நிலையான தலம். **விளக்கு** - தெளிவாகப் புரிய வைக்கின்ற. **பொய்த் தேசம்** - நிலையற்ற உலகம். **சித்தேச மரம்** - கோயிலில் உள்ள பன்னீர் மரம், இதன்கீழ்ச் சித்தர்கள் தவம் புரிந்ததால் இப்பெயர் பெற்றது. **காஞ்சி** - நொய்யலாறு. இதுவும் அது.

பொன்றிடப் புரியும் ஐம்புலப் புழையுள்
புக்க என் மனத்தை உன் தாளில்
ஒன்றிடப் புரியாய்- விசுவநாதரின் நேர்
உற்று, "அரி பரம்" எனும் வியாசன்
கன்றிட, நந்தி ஓதிய சாபம்
கழிதர, முன் எழுந்தருளி,
"சென்றிடு" என்று அருள, அவன் அணை பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 68

**பொன்றிட** - அழிந்திட. **புழை** - ஓட்டை. விசுவநாதரின் நேர் உற்று - காசியில் விசுவநாதருக்கு எதிரே. **அரி பரம்** - திருமாலே பரம்பொருள், தேற்றேகாரம் விரிக்க. **கன்றிட** - வருந்துமாறு. **கழிதர** - நீங்க. ஒரு காலத்தில் காசியில் விசுநாதர்முன் இருந்துகொண்டு இரு கைகளையும் உயர்த்தியவராக வியாசர் திருமாலே பரம்பொருள் என்று உறுதிபடக் கூறினார். இதனால் சினங்கொண்ட நந்தியின் சாபத்தால் வியாசரின் கைகளும் நாக்கும் செயல்படாமல் போயின. அப்போது திருமால் வந்து சாபம் தீரப் பேரூர் செல்லும்படி அறிவுறுத்தினார். அதற்கிணங்க வியாசர் பேரூர் வந்தடைந்தார்.

ஒப்பிடற்கு அரிய நின் அருள்ச் சுகம் மிக்கு
உலவுறாது இருக்கவும், மாயை
வெப்பு இடத்து எனை ஆழ்த்து, அலைப்பது என்? உரையாய்;
வியாசன் நல் காஞ்சியில் படிந்து,

திப்பிய வெள்ளிக் கிரி தொழுது, அன்பில்
திருந்து பூசனை செயக் கையும்
செப்பிடத் துதி நாவும் தரும் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 69

**ஒப்பிடற்கு** - ஒப்பிட்டு நோக்கி இணை கூற. **உலவுறாது** - குறையாமல். வியாசன் இங்கு வழிபட்டுக் கைகளும் நாக்கும் மீட்டும் செயல்படப் பெற்றார்.

"காலன் ஆக்கினை செல்லாத மான்மியம் சால்
காசியே தலங்களுக்கு எல்லாம்
மேலது" என் விசுவாமித்திரன் யோகில்
வெள்ளி மன்று உணர்த்தி, "வைரவன்தன்
சூல தண்டம் செய்திடும் பதி ஈது; இத்
துன்பமும் அற்ற இன்பு அருளும்
சீலம் மேவியது" என்று இசை அருள்ப் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 70

**காலன் ஆக்கினை** - இயம தண்டனை. **என்** - என எண்ணியிருந்த. **யோகில்** - யோகக்காட்சியில். **வைரவன்** - கால பைரவர். **சூல தன்டம்** - சூலாயுதத்தால் தாக்கப்படும் தண்டனை. ஈது என்றது காசியை. ***சீலம்***-தன்மை. சிவபிரான் விசுவாமித்திரரின் யோகத்தில் காட்சி அளித்துக் காசியில் இயம தண்டனை இல்லையே தவிரக் கால பைரவ தண்டனை உண்டு; பேரூரில் அதுவும் இல்லை என உணர்த்தினார்.

சரத்து இயல் மைக் கண் மாதர் யாவரையும்
தாய் எனக் கருதி மாதவம் செய்
விரத்தி ஈந்து அருள்-ஈண்டு அமை தவ விசுவா-
மித்திரன் வேண்டுமாறு, அருளால்
"பரத்து இசை வீடு அல்லாது அறம் பொருள் இன்-
பமும் தருதும்; தலம் குருகேத்
திரத் திருப் பேரும் பெறுக" என் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 71

**சரத்து இயல்** - அம்பினை போன்ற. **விரத்தி** - வைராக்கியம். பேரூரை அடைந்த விசுவாமித்திரர் முறைப்படி வழிபட்டார். காட்சியளித்த சிவபிரானிடம் பேரூரில் முத்தியோடு அறம் பொருள் இன்பங்களையும் வழங்க வேண்டும் என்றும் தலம் குருகேத்திரம் என வழங்கப்பட வேண்டுமெனவும் வேண்டினார். பட்டீசர் அவ்வரங்களை வழங்கினார்.

சுட்டு இலாப் பரிபூரண அருள் மெய்ச் சிற்
சுக அநுபவம் பெறு முத்தர்
உள் திகழ் நிலை என் உளம் பெறப் பதிப்பாய்-
ஓங்கு ஒரு கற்பத்தில் பிரமன்
மட்டு இலாத் தலம் தீர்த்தங்களைப் படைத்து, உள்
மமதை உற்று, உற, "உனது ஆன
சிட்டியோ?" என்று அசரீரி சொல் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 72

**சுட்டு இலா** - குறிப்பிட்டுக் கூற முடியாத. **உள்** - உள்ளம். **கற்பம்** - ஒரு கால அளவு. **மட்டு இலா** - எல்லையற்ற. **மமதை** - செருக்கு. **சிட்டியோ** - படைப்போ. தன் படைப்பாற்றலை நினைத்துச் செருக்கடைந்த பிரமன் கேட்க ஓர் ஆகாயவாணி காஞ்சி நதியும் பேரூர்த்தலமும் உன்னால் படைக்கப்பட்டனவா? என எழுந்தது.

பொத்திய மாய உடல் அபிமானம்
போக்கி, நின் துணைத் திருத்தாளில்
சத்திய பத்தி அருள்- விதி கைலை
சார்ந்தனன் வினவ, நீ படைக்கும்
புத்தி எய்தாமுன், படைத்து, நான் நடித்தேன்;
பொருந்தும் என் உரு வெள்ளிக்கிரி; காஞ்-
சித் திருநதியே கங்கை" என் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 73

**பொத்திய** - சூழ்ந்துள்ள. **சத்திய பத்தி** - மெய்யன்பு. **விதி** - பிரமன். **புத்தி** - அறிவு. **நடித்தேன்** - தாண்டவம் புரிந்தேன். அசரீரியைக் கேட்ட பிரமன் கயிலைக்குச் சென்று அரனிடம் வினவ, அவர் "நீ படைக்கத் தொடங்குவதற்கு முன்பே நான் பேரூரையும் நொய்யலையும் படைத்து அங்கு நடனம் ஆடினேன்" என்றார். அத்துடன் வெள்ளியங்கிரியே என் வடிவம், காஞ்சியே கங்கை என்றும் தெரிவித்தார்.

புத்தியல் மதுர புஞ்ச வான் தமிழால்
பொருந்தும் நின் திருந்து இசைகளையே
துத்தியம் புரியப் பணித்தருள் - கவலை
தோய் திரிசங்குக்கு ஆம் சொர்க்கம்

மத்தியில் படைத்து, அந்தண முனி ஆகும்
வரம் விசுவற்கு இடும் தவ மெய்ச்
சித்தி மா புரமா விளங்கு அணிப் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 74

**புத்தியல்** - புதுமையான. **மதுர** - இனிமைமிக்க. **புஞ்ச** - செறிவான. **வான்** - பெருமை மிக்க. **இசை** - புகழ். **துத்தியம்** - தோத்திரம். **மத்தியில்** - வானுக்கும் நிலத்துக்கும் நடுவில். **அந்தண முனி** - பிரம்மரிஷி. **விசுவர்** - விசுவாமித்திரர். **திரிசங்கு** - அயோத்தி மன்னன். இவன் உடலோடு சுவர்க்கம் செல்ல விரும்பியபோது அவன் குலகுரு ஆகிய வசிட்டர் அது இயலாத செயல் என்றார். அதனால் அவரை நீக்கிவிட்டுத் திரிசங்கு விசுவாமித்திரர்பால் அடைந்தார். விசுவாமித்திரர் ஒரு வேள்வி செய்து மன்னனை உடலுடன் இந்திர சபையின் நடுவே இருத்தினார். இந்திரன் சினங்கொண்டு கீழே தள்ளிவிட்டான். உடனே முனிவர் தம் தவ ஆற்றலால் கீழே விழுந்து கொண்டிருந்த மன்னனை அந்தரத்திலே நிறுத்திப் புதிய சுவர்க்கம் ஒன்றைப் படைக்கத் தொடங்கிவிட்டார். மேலும் பிரம்மரிஷி என்னும் சிறப்பையும் பெற்றார். இச்சிறப்புகள் எல்லாம் பேரூரில் எய்தியதால் இத்தலம் தவ சித்திபுரம் எனப் பெயர் பெற்றது.

கரிய கண்டமும் முக் கண்ணும் நின் பவளக்
கவின் உருவும் தினம் கண்டு, உள்
விரி அகண்டத்துள் குடி பெறப் புரிவாய்-
மேலை ஆம் சிதம்பரம், பத்தி
புரி, ககன புரி, பரம்புரம், போத
புரம் வன்மீக புரம் ஞானபுரம்
தெரியும் நாட்டிய புரித் திருப்பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 75

**கரிய கண்டம்** - கருப்பான கழுத்து. **அகண்டம்** - ஞான ஆகாயம். திருப்பேரூரின் பிற பெயர்கள் கூறப்படுகின்றன.

உலுத்தரைப் பாடும் புலவரில் பயன் அற்று
உடலினை ஓம்பி இங்கு அவமே
அலுத்த எற்கு அருளாய் - அந்தகன் ஊர் பாழ்
ஆதல் கண்டு ஈண்டு அமைந்து உன் மெய்க்
கொலு தரிசித்துக் குறை சொல்கால் இங்கு
குறுகினோர் அன்றி மற்றவர்பால்
செலுத்து நின் அரசு என்று அருள்புரி பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 76

**உலுத்தர்** - கஞ்சத்தனம் உடையவர். **புலவரில்** - கவிஞர்களைப் போல. **அந்தகன் ஊர்** - இயமனின் ஊர் ஆகிய நரகலோகம். விசுவாமித்திரரின் வேண்டுகோட்கு இணங்கிப் பேரூரில் வழிபட்டவர்களுக்கு முத்தியை மட்டுமன்றிப் பொருள், இன்பப் பயன்களையும் வழங்கத் தொடங்கினார். ஆதனால் பாவிகளும் பேரூரில் வழிபட்டு முத்தியடையலாயினர். இதன்விளைவாக நரகத்திற்குச் செல்வாரின்றி அவ்வுலகம் பாழ்பட்டது. அதனால் இயமன் பேரூரில் வழிபட்டுத் தன் ஆட்சியில் உள்ள பகுதி மீண்டும் செழிப்படைய வேண்டினான். அதற்குப் பட்டீசர் பேரூரை வழிபடாத மற்றவர்களைத் தன் கீழ்ப்படுத்தி ஆண்டு வர ஆணையிட்டார்.

"வானவர் தமக்கும் எய்தரிது உன் தாள்
வணங்கும் மானிடப்பிறப்பு" என்னும்
கான மாமறைச் சொல் விளக்கிடும் ஞான
காரணச் சிற்சபை, குந்த
கானம், ஆதிபுரி, மேருநகரம், கல்-
யாணபுரம், போதிக் கானம்,
தேனுநல் பிரமபுரத் திருப்பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 77

**கான** - இசைச் சிறப்பு மிக்க. திருப்பேரூரின் பல பெயர்கள் இங்கு குறிப்பிடப்படுகின்றன.

கருக்கடல் புகுத்தாது எனைப் புரப்பது நின்
கருணைக்கு ஓர் பெரிது அன்று; அங்கிரன் ஆம்
பெருக்கம் ஆர் பஞ்ச பாதகன் காஞ்சி
பெறும் புனல் அருந்துகால், பாம்பால்
வெருக்கொள மடிந்து, ஆற்றிலும் திரு நீற்று
மேட்டில் நாய்நரி இடுதிறத்தால்
திருக்கயிலையில் புக்கு அமைதல் செய் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 78

**கருக்கடல்** - பிறவிக்கடல். **புரப்பது** - பாதுகாப்பது. அங்கிரன் என்பவன் வங்கதேசத்தைச் சேர்ந்த ஒரு வேடன். மிகப்பெரும் பாவங்களைச் செய்து பொருளீட்டினான். அவன் செயல்களை அவன் இல்லத்தாரே ஏற்றுக் கொள்ளாத நிலையில் அவர்களையும் கொன்றான். அவன் நொய்யலாற்றில் தண்ணீர் குடித்துவிட்டுக் கரையேறும்போது ஒரு பாம்பு கடித்து இறந்தான். அவன் உடலை நாய் நரிகள் இழுத்துக் கொண்டு போய்த் திருநீற்று மேட்டில் இட்டன. இதனால் அங்கிரன் வீட்டுப் பேறு பெற்றான்.

எய்தவன்தனை விட்டு அம்பை நோகுநர் போல்
என் விதி வெறுக்கிலன், பிறரை
வைது, அவம் பெருக்கும் மதியினேன் உய்யும்
வகை அருள் - நாரதன் மொழியால்,
மை தவழ் இமயம் நீத்து, உமை, அரனை
வல்லையில் மணந்திட, நோன்பு
செய்து அமை தவ சித்தித் திருப்பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 79

**அவம் பெருக்கும்** - தீவினைகளை வளர்த்துக் கொள்ளும். மலையரசன் மகளாகப் பார்வதி என்னும் பெயரில் இருந்தபோது தேவி சிவபெருமானை மணக்க விரும்பி நாரதன் அறிவுறுத்தியவாறு திருப்பேரூரை அடைந்து தவம் புரிந்தாள்.

சங்கை இல் பாவ சலதியை, அருளால்
சார்தரும் காஞ்சியினிடை ஓர்
அங்கை நீர் ஒழித்தலால் வடவை என
அறையலாம் போலும்; அந்தணனாய்
மங்கையாம் உமைபால் அடைந்து, சல்லாப
மாற்றம் விண்டு, உவந்து, உருக்காட்டி,
செங்கை தொட்டு, அந்தப்புரத்து அணை பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 80

**சங்கை இல்** - கணக்கற்ற. **பாவ சலதி** - தீவினைக்கடல். பாவமாகிய கடலை வற்றவைப்பதால் நொய்யலாறு வடவைத்தீக்கு ஒப்பாகக் கூறப்பட்டது. **சல்லாப மாற்றம்** - விளையாட்டுப் பேச்சு. **உரு காட்டி** - தன் சுய வடிவத்தைக் காட்டி. சிவபிரான் ஒரு கிழவேதியனாகப் பார்வதியின்பாற் சென்று உரையாடித் தன்னை உணர்த்தி ஆட்கொண்டார்.

கொப்பத்துள் வீழ் குஞ்சரம் அனையேற்கும்
கொடுத்தி-நீ காணும் மண்டபத்தில்
முப்பத்து முக்கோடி தேவர், மால், பிரமன்,
முனிவர் நாற்பத்தெண்ணாயிரவர்,
ஒப்பத் தங்குவித்த பிரமத கணங்கள்,
உற்றுளோர் யாரும் நாரதன் மேய்ச்
செப்புஅத் தருணம் சேர் சிறப்பின் ஐப் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 81

**கொப்பம்** - யானையை வீழ்த்தும் பள்ளம். **குஞ்சரம்** - யானை. **பிரமத கணங்கள்** - கயிலாயத்தில் நிலையாக இருக்கும் அடியார்கள். திருமணத்திற்காக இறைவன் நிருமித்த மண்டபத்தில் நாரதன் அழைப்பை ஏற்று அனைவரும் கூடினர்.

பா இயை தர நிற்கு அணிந்து போற்று எனை, நீ
பாவி என்று ஓதினும், அன்பால்
நாஇயை உபதேசத்து உளம் அமைத்து,
நாடுவேன்; இமைய வேந்து இல்லாள்
மேவி, ஐதினில் பால் கொடு பதம் விளக்கி,
மேல் தெளித்து உள் அருந்தி, உமா
தேவியைத் தத்தம் செய்திடும் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 82

**பா** - தோத்திரப் பாக்களை. **இயைதர** - பொருந்துமாறு. **நாஇயை** - (அருளின்) பொலிவு மிக்க. **உபதேசத்து** - குருதேவர் கற்பித்தவாறு. **உளம்** - மனத்தில். **இமையவேந்து இல்லாள்** - மலையரசன் மனைவி, மேனை. **ஐதினில்** - அழகாக, இங்கு முறைப்படி. **தத்தம் செய்திடும்** - நீர்வார்த்துக் கொடுக்கும். இமவானால் பார்வதி சிவபெருமானுக்கு முறையாகத் திருமணம் செய்து கொடுக்கப்பட்டாள்.

"நவை உறும் உடலம் துக்கம் ஆர் இகம் தோய்
நரகு அனைத்து" என்று உணர்ந்தாலும்,
சுவை உறப் போகம் காட்டும் ஆணவத்தின்
தொடக்கு அறுத்து அருள் - திருமணம் காண்
குவையினர்க்கு, இருமைப் பயன்களும் அருளால்
கொடுத்தபின், விடுத்து, இயல் இன்பச்
சிவையுடன் பொருந்தி, விளங்கு சீர்ப் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 83

**நவை உறும்** - குற்றங்களோடு கூடிய. **இகம் தோய்** - இவ்வுலகில் உள்ள. **தொடக்கு** - தொடர்பு. **குவையினர்** - கூட்டத்தார். **சிவை** - உமாதேவி. திருமணத்தைத் தரிசித்தவர்களுக்கு இம்மை மறுமைப் பயன்களை அருளி விடையளித்து அனுப்பியபின் உமாதேவியோடு கோவில்கொண்டிருந்தார்.

பொய்வகை உலக வீண் வழக்கு என்னில்
பொங்கும் மிக்கு உவகை; இங்கு உனைத் தோய்
மெய்வகைச் செலவு என்றால் கலங்கு உளத்தேன்
வீட்டு உறற்கு என் கடவேனே?

கைவரும் வீணைக் கடவுள் மாமுனிவன்
        கரைதல் போல், கந்தனை மணப்பான்
தெய்வ குஞ்சரி சார் தவம் பொலி பேரூர்ச்
        சிட்டனே! பட்டி நாயகனே! 84

**பொய்வகை** - நிலையற்ற. **மெய்வகைச் செலவு** - உண்மையான ஒழுக்கம். **வீணைக் கடவுள் மா முனிவன்** - மகதிவீணையை உடைய நாரதர். **கரைதல் போல்** - கூறியபடி. தெய்வயானை முருகப்பெருமானை மணக்க விரும்பி நாரதர் கூறியவாறு பேரூரில் தவம் புரிந்தார்.

பொங்கம் ஆம் மறை, ஆகம முடிப் பொருள் என்
        புந்தியூடு உற அருள் – கந்தன்
துங்கம் ஆர் தெய்வப் பிடி களித்திட, நேர்
        தோன்றுகால், இந்திரற் கூவி,
மங்கள மண மண்டபம் செய்வித்து, எவரும்
        வணங்கி ஏத்திட, அருள் வழங்கி,
சிங்க வான் தவிசில் அமர்ந்தருள் பேரூர்ச்
        சிட்டனே! பட்டி நாயகனே! 85

**பொங்கம் ஆம்** - பொருட் பொலிவு மிக்க. **முடிப்பொருள்** - முடிவான கருத்து. **புந்தியூடு** - அறிவில். **துங்கம் ஆர்** - உயர்ந்த. **தெய்வப்பிடி** - தேவசேனை. **சிங்க வான் தவிசு** - அரியணை. முருகப்பெருமான் தெய்வயானையின் எதிரே தோன்றி, மணமண்டபம் அமைத்து, மணவறையில் அமர்ந்து கொண்டார்.

குரு வடிவா வந்து அருளினை; தேறாக்
        குறைவு உறும் கொடியனேற்கு இன்பம்
மருவு அடியவர் கொள் பூரண ஆனந்த
        வாழ்வு எந்நாள் வழங்குவை? பஞ்ச
தருஅடிக் கோமான் சசியுடன் மணப் பந்-
        தரில் பசும் பாலினால் முருகன்
திருவடி அலம்ப, சென்று பாய் பேரூர்ச்
        சிட்டனே! பட்டி நாயகனே! 86

**தேறா** - தெளிவு பெறாத. **பஞ்சதரு அடிக்கோமான்** - கற்பகம் முதலிய ஐந்து தெய்வீக மரங்களின் நிழலில் வாழும் இந்திரன். **சசி** - இந்திராணி. திருமணத்தை முன்னிட்டு இந்திராணி முருகப்பெருமானின் பாதங்களைப் பாலால் அலம்பினாள்.

ஐவகை உணர்வில் அடங்கிடாது அவற்றை
அணு எனத் தன் உள்ளே அடக்கும்
மெய்வகை உணர்வு ஈந்தருள்- தெய்வப்பிடியை
மேகவாகனன் தத்தம் செய்ய,
கைவயின் கொண்டு, பொன் சடங்கு இயற்ற,
கழல் அம்மி அமைத்து, அனல் வலமாய்,
தெய்வ மங்கலம் செவ்வேள் புனை பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 87

**ஐவகை உணர்வில் அடங்கிடாது** - ஐம்புல நுகர்ச்சி வேட்கையில் சிக்கிக்கொண்டு விடாமல். **அவற்றை** - அந்தப் புல இன்பங்களை. **உணர்வு** - ஞானம். **மேகவாகனன்** - இந்திரன். **தத்தம் செய்ய** - தண்ணீர் வார்த்துக் கொடுக்க. **கைவயின் கொண்டு** - கரங்களில் ஏற்று. **பொன்** - வியாழன், பிரகஸ்பதி. **அனல்** - வேள்வித்தீ. **தெய்வ மங்கலம்** - தாலி. இந்திரன் உரிய சடங்குகளுடன் தெய்வயானையை முருகப்பெருமானுக்குத் திருமணம் செய்து கொடுத்தார்.

கற்றிலேன், கற்றோர் மொழிப் பெரும் பயனைக்
கருதிலேன்; கதிபெறும் இச்சை
சற்று இலேன்; மாயைச் சார்பு அற, அருள்மெய்ச்
சார்பு தந்தருள் - தயாநிதியே!
வெற்றி வேல் குகன், குஞ்சரியுடன், கண்டோர்
விழிபெறும் பயன்பெற உலா ஆர்,
தெற்றி வான் மணிமாடத் திருப் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 88

**கதிபெறும்** - வீடு அடையும். **சார்பு அற** - பற்றுதல் நீங்க. **குஞ்சரி** - தெய்வயானை. **தெற்றி** - முன் மாடம், பால்கனி. கந்தவேள் தெய்வயானையுடன் கண்டவர்கள் களிக்கத் திருவீதி உலா வந்தார்.

வாய் இரங்கிடு தன் சேயினைத் தேற்ற
மதித்திடா வன்மை மிக்கு உற்ற
தாய் இலையேல், உன் அருள்க்கு இசைத்திடல் என்?
தவம் குசத்துசன் சுரர் ஆண்டு ஓர்
ஆயிரம் இயற்ற,நேர்ந்து, "இரு பெண்கள்
அளித்தனம்; மருத வெற்பு அடைந்து,
சேயினைத் தொழில், சேய் தரும்" எனும் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 89

**சேயினைத் தேற்ற** - குழந்தையைச் சமாதானம் செய்ய. **வன்மை** - கடுமை. **சுரர் ஆண்டு** - தேவ வருடங்கள். **சேயினைத் தொழில்** - செவ்வேளை வழிபட்டால். **சேய்** - மகவு. குசத்துவசன் என்னும் மன்னன் மக்கட்பேறு இன்றி வருந்திப் பேரூரில் வந்து வழிபட்டான். அவன் பேரூரில் ஓர் ஆயிரம் தெய்வ ஆண்டுகள் தவம் புரிந்தான். சிவபிரான் இறைவியோடு காட்சியளித்து, தன்னை வழிபட்டதால் இரண்டு மகள்களைப் பெற வரமருளி, மருதமலையில் கந்தக்கடவுளை வழிபட்டு ஆண்மகவொன்றைப் பெற்றுக் கொள்ள அறிவுறுத்தினார்.

**அருந்தலும் பொருந்தலும் பெரும் பேறு என்று**
**அலைதராது, அருள்நிலை காட்டாய்-**
**மருந்தினால் அறத்தால் குறைதல் இல் குட்டம்,**
**வளர் குலசேகரன் தலங்கள்**
**பொருந்தலில், சமமாய் இசையும் நாள், வீணைப்**
**புங்கவன் மொழிவழி, உள்ளம்**
**திருந்தி, நல் காஞ்சி படிந்து உறும் பேரூர்ச்**
**சிட்டனே! பட்டி நாயகனே!** 90

**அருந்தல்** - உணவு கொள்ளல். **பொருந்தல்** - புணர்தல். **குட்டம்** - குட்டநோய். **தலங்கள் பொருந்தலில்** - பல திருத்தலங்களுக்கு யாத்திரை செய்ததால். **சமமாய் இசையும் நாள்** - நோய் மிகவோ குறையவோ இல்லாமல் பொறுத்துக் கொள்ளும் அளவில் இருந்தபோது. **வீணைப் புங்கவன்** - நாரதர். குலசேகரன் என்னும் சேர வேந்தனுக்குக் குட்டநோய் வந்தது. அது குணமாகவே இல்லை. தல யாத்திரையால் சமநிலை அடைந்தது. அப்போது நாரதரின் அறிவுரைப்படிப் பேரூர் வந்து நொய்யலில் மூழ்கினான்.

**மருப்பு அணிக் கொங்கை மங்கையர் காம**
**வாரியை, வன் கழைவில் ஆர்**
**சுருப்பு அணி நாணி உடையவன் நாண,**
**சுடும் கனல்க் கண் கொடு, தொலைப்பாய்-**
**திருப்பு அணி காயம் நலம் பெற, இன்பம்**
**சேர் குலசேகரன் வதிந்து,**
**திருப்பணி புரிந்து, போற்று சீர்ப் பேரூர்ச்**
**சிட்டனே! பட்டி நாயகனே!** 91

**மருப்பு அணி** - யானைத் தந்தங்களைப் போன்று அழகிய. **வாரி** - கடல். **கழைவில்** - கரும்பாகிய வில்லையும். ஆர் சுருப்பு அணி நாணி

- பொருந்துகின்ற வண்டுகளின் வரிசை ஆகிய நாண். **உடையவன்** - மன்மதன். **கனல்க்கண்** - தீவிழி. **திருப்பு அணி காயம்** - நிலைமாற்றம் அடைந்துள்ள உடல். காஞ்சியில் மூழ்கிய உடன் குலசேகரனின் நோய் முற்றிலும் நீங்கியது. அவன் பேரூரில் பல திருப்பணிகளைச் செய்து கொண்டு நீண்ட நாள் வசித்தான்.

"பூவினைக் குற்றம் அறப் புரத்தல்; மினார்ப்
பொருந்தல்; கள் அருந்தல்; மன்னவனா
மேவினைக்கு உற்ற செயல்" என் காபாலர்
விதி மதம் புகும் திரிலோகக்
கோவினை, குற்றத்து உறாது, நாரதன் கைக்
குண்டிகை நீரின், மால் ஒழித்து, "உன்
தீவினைக்கு உற்ற மருந்து" எனும் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 92

**பூவினை** - நிலத்தை, தன் ஆட்சிக்கு உட்பட்ட நாட்டை - மினார்ப் பொருந்தல் - பெண்களை மருவல். **மன்னவனா மேவினைக்கு** - அரசனாக அமைந்த உனக்கு. **காபாலர்** - ஒரு வகைச் சைவ சமயிகள் விதி - ஏற்படுத்திய. **கோ** - அரசன், இங்கு சோழன். **குண்டிகை** - செம்பு. **மால்** - அறிவு மயக்கம். திரிலோக சோழன் என்னும் மன்னன் தூய சமயநெறிகளைத் துறந்து காபாலிக நெறியில் நம் சமய நெறிக்கு மாறுபட்டு ஒழுகினான். பிரமனின் ஆணைப்படி நாரதர் மன்னனின் சபையை அடைந்து அவன்மீது தம் கரக நீரைத் தெளித்தார். உடனே அவன் அறிவு தெளிவடைந்தது.

மருள் பெருக்குறும் ஐம்புலக் கொடும் பிறவி
வழி அடைத்து, அலகு இல் பேரின்ப
அருள் பெருக்குற, எற்கு அருள்பவர் உனை அற்று
ஆர் உளர்? திரிலோக சோழன்
இருள்ப் பெருக்கு ஆர் காபால வன் தொடக்கு அற்று
இரும் தவம் திருப்பணி இயற்றித்
தெருள் பெருக்குறச் செய் மகிமை சால் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 93

**மருள்** - அறிவு மயக்கத்தை. **அலகு இல்** - கணக்கற்ற. **இருள்ப் பெருக்கு ஆர்** - பாவங்கள் நிரம்பிய. **வன் தொடக்கு** - வலிய தொடர்பு. **இரும்** - பெரிய. **தெருள்** - அறிவுத் தெளிவு. திரிலோக சோழன் நாரதர் உபதேசப்படிப் பேரூரை அடைந்து வழிபட்டும் திருப்பணி செய்தும் மெய்யறிவு பெற்று நலமடைந்தான்.

சத்துவ குணமும், பொய்உடல் மானம்
தாக்குறா உணர்வும், நின் திருத்தாள்
ஒத்து உளம் அகலாப் பத்தியும் அடியேற்கு
உதவும் நாள் என்று? உரைத்து அருள்வாய்-
புத்துருச் சிவ வேடம், துழாய், வில்வம்,
பூசனைமுறை உமைக்கு உபதே-
சித்து, உலகோர்கட்கு உணர்த்து அருள்ப் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 94

**சத்துவ குணம்** - முக்குணங்களுள் மிகச் சிறந்ததாகிய பண்பு, ஏனையவை ராஜசம், தாமசம். **பொய் உடல் மானம்** - நிலையற்ற உடலை உயிர் ஆகிய நான் என மயங்கிப் பெருவிருப்புக் கொள்ளுதல். **துழாய்** - துளசி. சிவவழிபாட்டு முறையை மக்கள் தெளிவாகப் புரிந்து கொள்வதற்காகச் சிவபிரான் உமைக்குப் பேரூரில் உபதேசித்தார்.

வரு பகல்க் கனவாய்ப் பயன் அறும் உலக
வழக்கில் வீழ்ந்து உழலும் என் உளம், நின்
சொரூப நிச்சயத்து என்று இசைகை? தான்மிகன் வித்-
துருலதை மனை இராக்கதனால்
பருவரல் உற்று, பலவிதம் முயன்றும்
பயன் பெறாது அயரும்நாள், வீணைத்
திருமுனி புகல, உணர்ந்து, அணை பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 95

**சொரூப நிச்சயம்** - இறைவனின் இயல்பு இத்தகையது எனத் தெளிவாக உணர்தல். **இசைகை** - பெருந்துவது. **பருவரல் உற்று** - வருந்தி. **வீணைத் திருமுனி** - நாரதர். **அணை** - வந்து அடைந்த. தான்மிகன் என்னும் பாண்டிய மன்னனின் மனைவி வித்துருலதை. அவளை ஒரு பிரமராச்சதப் பேய் பற்றிக் கொண்டது. என்ன செய்தும் அப்பேய் விலகவில்லை. நாரதர் மன்னரிடம் அவன் மனைவி பேரூரை அடைந்து, காஞ்சியில் நீராடி, விபூதி மேட்டு விபூதியை அள்ளிக் குழைத்துத் தன் உடம்பில் பூசிக் கொண்டால் பேய் விலகும் என்றார்.

அமிர்து உறழ் மதுரச் செந்தமிழ்க் கவிகள்
அளவு அறத் தினம் பொழிந்து, அறுகால்
இமிர்தரு கடுக்கை மலரில் நின் புயத்தில்
யான் அணிந்து உவக்குமாறு அருளாய்-

நிமிர் திருநீற்று மேட்டு மண், காஞ்சி
நீர் கொடு குழைத்து மன் மனை மெய்
திமிர்தலும், அரக்கற் பிரித்திடும் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 96

**உறழ்** - போன்ற. **மதுர** - இனிய. **அறுகால் இமிர்தரு** - வண்டுகள் முசுகின்ற. **கடுக்கை** - கொன்றை. **மலரில்** - பூக்களைப் போல. **மன் மனை** - அரசனின் மனைவி. **திமிர்தலும்** - பூசிகொண்ட உடனே. **அரக்கன்ப் பிரித்திடும்** - பேயை நீக்குகின்ற. அரசன் நாரதர் சொற்படி செய்ததால். அரசி குணமடைந்தாள்.

தூங்குறும் துலாபாரப் பொன் வேட்டு ஏற்ற
துய்யவன், மனைவியைத் தொட்ட
தீங்கு உளன் எனினும், பிரமதீர்த்தம், காஞ்-
சி, திருமேட்டு மண் படலால்
ஓங்கு உருத் தெய்வ விமானம் உற்றேன் என்று
ஒருவ, தான்மிகன் வித்துருலதை
தேங்கும் இன்பு இருமையும் பெறும் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 97

**தூங்குறும்** - தொங்குகின்ற. **துலாபாரம்** - தன் நிறைக்குச் சமமாகப் பொன்னைத் தானம் செய்தல். **வேட்டு ஏற்ற** - விரும்பித் தானமாகப் பெற்ற. **துய்யவன்** - தானம் பெற்ற அந்தணன். **ஒருவ** - அரசியை விட்டு அகல. நான்மறை வல்ல அந்தணன் ஒருவன் கொங்கண நாட்டில் இருந்தான். அவன் மகாராட்டிர மன்னனிடம் துலாபார தானம் வாங்கினான். பிறகு அச்செயலுக்காக வருந்தி இறந்து பிரமராக்கதன் ஆனான். அவனே வித்திருலதையைப் பற்றியவன். பிரமதீர்த்தம், காஞ்சிநதி, விபூதி கேட்டு மண் ஆகியவற்றின் தொடர்பால் அவனும் பேய் வடிவம் நீங்கி நற்கதி அடைந்தான்.

பரத்து அமைதர, ஆருயிர்களைப் பதிக்கும்
பதிப் பொருளே கிரேதத்தில்
திரத்து அமை விசுவ நாதர், திரேதத்-
தினில் கொள் அமுத லிங்கேசர், துவா -
பரத்து அமை தரும நாதர், சார் கலியில்
பசுங் கன்றின் குரம் கொம்புச் சுவடு
சிரத்து அமை கோட்டீச்சுரன் எனும் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 98

**பரத்து அமைதர** - முத்தியில் நிலைக்கும்படி, **பதிக்கும்** - அமர்த்துகின்ற. **பதிப்பொருளே** - பரமே. **கிரேதத்தில்** - முதல்யுகம் ஆகிய கிரேதாயுகத்தில். **திரத்து அமை** - நிலைபெற்ற. **திரேதத்தினில்** - திரேதாயுகத்தில். **துவாபரத்து** - துவாபரயுகத்தில். **சார் கலியில்** - இப்பொழுது உள்ள கலியுகத்தில். **குரம்** - காற்குளம்பு. நான்கு யுகங்களிலும் பேரூர் இறைவன் முறையே விசுவநாதர், அமுதலிங்கேசர், தருமநாதர், கோட்டீச்சுரன் என வழங்கப்படுவார்.

மறப் பவ வினைப்பட்டு உன் திருத்தாள்கள்
மறப்ப வைத்திடும் மன மாயை
இறப்ப, நின் கடைக்கண் நோக்கு சித்திரையில்
ஏற்ற சித்திரையில் எண்ணெய் இட்டு,
சிறப்பு அணி அணிந்திட்டு, அன்னமொடு இயல்பல்
சிற்றுண்டி நிவேதிப்பார்தமக்குத்
திறப்படு சிவபுண்ணியம் தரும் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 99

**மற பவ** - கொடிய பிறவிக்குக் காரணம் ஆகிய. **இறப்ப** - நீங்க. **சித்திரை** - 1.மாதம், 2. நட்சத்திரம். சித்திரா பௌர்ணமி நாளில் வழிபடுபவர்களுக்குச் சிவபுண்ணியம் கிடைக்கும்.

இடபம் ஆம் மதிப் பூரணை விசாகத்தில்
இரச முக்கனிகளும் ஆட்டி,
அடல்கொள் பால் மாங்காய் ஊட்டினர்க்கு, அமலம்
ஆர் உலகு அளித்து, இசை நாற்கால்
சுடர் விரி மணி மண்டபத்தில் நீர் நிறைத்துத்
தோயும் நின் வசந்த நல்விழாச் செய்
திட மனத்தினர்க்கு இன்பு ஈந்திடும் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 100

**இடபம் ஆம் மதி** - வைகாசி மாதம். **பூரணை விசாகத்தில்** - பௌர்ணமி கூடிய விசாக நாளில். **இரச** - சாறு உள்ள. **ஆட்டி** - அபிடேகித்து. **அமலம்** - குற்றங்களற்ற. வைகாசிப் பௌர்ணமியில் முக்கனிகளை அபிடேகித்துப் பாலில் வெந்த மாங்கனிகளை நிவேதிப்பவர் பாவங்கள் நீங்கிப் பரகதி அடைவர். மேலும் அன்று நாற்கால் மண்டபத்தில் இறைவனை இருத்தி, அம்மண்டபத்தைச் சூழ நல்ல நீரை நிரப்பி வசந்த விழா காண்போர் நோய்கள் அகன்று இன்பங்களைத் துய்த்துப் பேரின்பம் பெறுவர்.

ஆவலில் ஆனிப் பூரணைக் கேட்டை-
யதில், வட்ட மணி மண்டபத்தில்,
மேவரு கனிமுற்று ஆட்டி ஊட்டுநர்க்கு,
விண்ணவர் போற்று சீர் அருளி,
தா அரும் உத்திரத்து எண்ணெய் சாத்தி,
தகும் கனி வகைகள் ஊட்டுநர்க்குத்
தேவ தேவர்கள் என்பேறு அருள் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 101

**ஆவலில்** - ஆசையோடு. கேட்டை நட்சத்திரம். **தா அரும்** - கெடுதல் இல்லாத. உத்திர நட்சத்திரம். ஆனி உத்திரத்தில் பல பழச்சாறுகளால் ஆட்டி நிவேதிப்பவர்கள் தேவர்களுக்கு எல்லாம் மேலான நிலையைப்பெறுவர்.

வாடிப் பூதலத்து ஆருயிர்கள் எய்க்காது
வரம் தரும் மரகதக் கொடியை,
ஆடிப்பூரத்தில் சுக்கிர வாரத்து
அடைந்து, அன்பில் தொழும் அடியவர்க்கு,
நீடிப் பூரணம் ஆர்சுகம் இகத்து எய்த
நிறைவித்து, ஈற்றினில் இமையோர்கள்
தேடிப் போம் சத்தி உலகு அருள் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 102

**எய்க்காது** - வருந்தாமல். **சுக்கிரவாரம்** - வெள்ளிகிழமை. **ஆடி** - உலகியல் இன்பங்களை ஆரத்துய்த்து. ஆடி மாதம் பூர நாளன்றோ. வெள்ளிக்கிழமைகளிலோ பச்சைநாயகியை வழிபடுபவர்கள் இவ்வுலகங்களை முழுமையாக அநுபவித்துக் கடைசியில் சத்தியின் லோகத்தை அடைவர்.

கிளைத்து அலைத்திடு கன்மச் சிலுகு ஆர் உக்-
கிரத்து அடல் கடக்கும் மெய் வலி அற்று
இளைத்து அயர்வேனைக் காத்தருள் - சிங்கம்
இசைந்த மூலத் திருநாளில்,
வளைத்த மெய் வந்தி போல வந்தித்து,
மதுரப் பிட்டு ஊட்டுநர்க்கு இன்பம்
திளைத்த வைபோகப் போகம் தோய் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 103

**கிளைத்து** - பலவகையாகப் பிரிந்து. **அலைத்திடு** - வருத்துகின்ற.

**கன்மச் சிலுகு** - வினைகள் இயற்றும். **உக்கிரத்து அடல்** - கடுமையான போர். **சிங்கம்** - ஆவணி மூல நட்சத்திரம். **வளைத்த மெய்** - கூன் விழுந்த உடல். **வந்தி** - வைகைக் கரையில் பிட்டுவிற்பவள், திருவிளையாடல் புராணம் பிரம்படி பட்ட வரலாறு. **மதுரப்பிட்டு** - இனிய புட்டு. வைபோகம் - ஆடம்பரம். ஆவணி மூலத்தில் புட்டு நிவேதிப்பவர் தீவினைகள் அழிய இம்மை மறுமை இன்பங்களைப் பெறுவர்.

மன்னிய அருள் மெய்த் தாயினை, பச்சை
  மரகத வல்லியை, இமவான்
கன்னியை, என் கண் முன் இயை உமையைக்
  கன்னி மா மதியினில் நவ ராத்
தன்னில் அன்புடன் ஆராதனை புரிவோர்
  தகும் உலகு இன்பு எலாம் துய்த்து,
சென்னியம் அறு சீர்பெற அருள் பேரூர்ச்
  சிட்டனே! பட்டி நாயகனே! 104

மெய் அருள் மன்னிய தாய் என இயையும். **கன்னி மா மதி** - புரட்டாசி. **நவ ரா தன்னில்** - நவராத்திரியில். **சென்னியம்** - பிறவி. புரட்டாசியில் நவராத்திரித் திருவிழாவில் அம்மையை வழிபடுபவர்கள் உலகியல் இன்பங்களை நன்கு அநுபவித்து, மறு பிறவி அற்ற வீட்டின்பம் பெறுவர்.

தவள மால் விடைமேல் அம்பிகையுடன் ஓர்
  தரம் தரிசனம் தரில் என்னைத்
துவள, மால் செய்யும் மாயை சொல்லாமல்
  தொலையுமே! துலாக் கொள் பூரணையில்
உவகை உற்று அன்னம் ஆட்டுநர்க்கு ஒவ்வொன்-
  றுக்கு ஒரு கற்பம் அற்புதம் ஆர்
சிவ உலகு இன்பம் தரும் புகழ்ப் பேரூர்ச்
  சிட்டனே! பட்டி நாயகனே! 105

**தவள** - வெண்மையான. **மால்** - பெரிய. **துவள** - கலங்கும்படி. **மால்செய்யும்** - மயக்கும். **துலா** - ஐப்பசி. **ஒவ்வொன்றுக்கு** - ஒவ்வொரு பருக்கைக்கும். **கற்பம்** - ஒருபெரும் கால அளவு. ஐப்பசிப் பௌர்ணமியில் அன்னாபிஷேகம் செய்பவர்கள் அதில் உள்ள ஒவ்வொரு பருக்கைக்கும் ஒரு கற்ப காலம் வீதம் கைலாயத்தில் வாழ்வர்.

பொய் பல உடையேன்; செய்வகை அறியேன்,
பூ வரும் பாவரும் இகழ்ந்து
வை பவக் கொடியேன்; வைபவம் பொருந்த
வழங்குவாய்- கார்த்திகை மதியில்
நெய்படி விளக்கு எண் அற இடுவோர்க்கு
நிறை ஒளி உரு அளித்து அமரர்
செய்பணி கேட்கும் பதம் தரும் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 106

**பூ வரும்** - உலகில் பிறந்துள்ள. **பாவரும்** - தீயவர்களும். **வை** - வசை பாடுகின்ற. **பவ** - பாவம் நிறைந்த. **வைபவம்** - சிறப்பு. **மதி** - மாதம். **நெய் படி** - பசுநெய் ஊற்றப்பட்ட. **பதம்** - பதவி. கார்த்திகையில் திருவிளக்கிடுவோர் ஒளிவடிவம் பெற்றுத் தேவர்களாலும் போற்றப்படும் பெரு நிலை அடைவர்.

வில்சுடர் தனுவில் படர்தரும் மதியில்
மிக்க பேர்அன்பினில் விடியும் -
முன் சுப பூசை புரிந்து உன் கண் அருளில்
மூழ்கவும், முதிரும் ஆதிரையில்
நல் சுக ஆன் நெய் ஆட்டுபு சுகந்தம்
நனி திமிர்ந்து ஆடல் காண்போர்கள்
சிற் சுகத்து அன்று எய்தவும் புரி பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 107

**வில் சுடர்** - ஒளிமிக்க சூரியன். **தனுவில் படர்தரும் மதியில்** - தனுர் ராசியில் இருக்கும் மார்கழி மாதத்தில். **முதிரும் ஆதிரை** - முழுமையான திருவாதிரை நாள். **ஆட்டுபு** - அபிடேகத்து. **சுகந்தம்** - சந்தனம் முதலிய நறுமணப் பொருள்கள். **திமிர்ந்து** - பூசி. **ஆடல்** - நடனம். **சிற்சுகத்தன்மை** - ஞானானந்தம். இது மார்கழித் திருவாதிரைத் தரிசனச் சிறப்பு கூறியது.

அகரமொடு உகரம் மகரம் ஆய், அதன்உள்
அமை பொருளை, அருள் மிகையால்,
மகர மாதத்தில் பரிமிசைக் கண்டு
வணங்குநர்க்கு அப்பதம் தந்து,
நிகர் அறு பூசத்துாடு பூசிப்போர்
நீடிய சுவர்க்கம் ஆண்டு அகன்று
சிகர வீடுஉற நல்கியும் திகழ் பேரூர்ச்
சிட்டனே! பட்டி நாயகனே! 108

அகரமொடு உகரம் மகரம் ஆனது - ஓம் எனும் பிரணவம். **மகர மாதம்** - தை. **பரிமிசை** - குதிரை வாகனத்தில். அப்பதம் என்றது பிரணவாநுபூதியை. **பூசத்தூடு** - பூச நட்சத்திரத்தில். ***சிகர வீடு*** - மேலாகிய முத்தி. தை மாதத்தில் குதிரை வாகனத்தில் எழுந்தருளச் செய்து வழிபடுவோர் மந்திர சரீரம் பெறுவர். தைப் பூசத்தன்று வழிபடுபவர் வானுலக இன்பங்களைத் துய்த்தபின் மோட்சம் பெறுவர்.

**சம்பராரியை நீற்றிய விழி, வேதன்**
**தலை கொய் கை, அந்தகன்த் தாக்கும்**
**செம் பதாம்புயம் என் உள் பதித்து அஞ்சாத்**
**திருஅருள்ப்பேறு உறச் செய்வாய்-**
**கும்ப மா மதி தோய் சிவநிசிப் பூசை**
**குயிற்றுநர்க்கு, எளிதில் அன்னவர்தம்**
**தெம்பு அமை வேட்கை ஒருங்கு அருள் பேரூர்ச்**
**சிட்டனே! பட்டி நாயகனே!** 109

**சம்பராரியை** - மன்மதனை. **நீற்றிய** - சாம்பலாக்கிய. **வேதன்** - பிரமன். **அந்தகன்த்தாக்கும்** - இயமனை உதைக்கும். **பதாம்புயம்** - திருவடித்தாமரை. **கும்பமாமதி** - மாசி. ***சிவநிசி*** - சிவராத்திரி. **குயிற்றுநர்** - புரிவோர். **தெம்பு அமை வேட்கை** - ஆவலோடு கூடிய விருப்பம். மாசி மாதம் சிவராத்திரியில் வழிபடுவோர் எண்ணிய எண்ணியாங்கு எய்துவர்.

**தூண்டு அவப் புலன்வாய்ப் போகம் இன்பு என்னச்**
**சுழல்பவர் தாமும் வந்து எய்தி**
**ஆண்டு, அயனம், திங்கள் பிறப்போடு, ஈர்-**
**ஆறின் மேல் திதிகளில், எட்டில்,**
**பூண்ட மெய்ச் சோமவாரத்தில், காஞ்சிப்**
**புனல் படிந்து, ஆற்றிடில் பூசை**
**தீண்டரு வினை தீர்த்து, அருள்புரி பேரூர்ச்**
**சிட்டனே! பட்டி நாயகனே!** 110

**ஆண்டு** - வருடம். **அயனம்** - ஆறு மாதங்கள் கொண்ட காலப்பகுதி. **திங்கள்** - மாதம். பிறப்பு என்பதை முன் கூறிய மூன்றொடும் கூட்டுக, வருடப்பிறப்பு முதலியன. ஈர் ஆறின் மேல் திதி என்றது 12க்கு மேற்பட்ட திரயோதசி, சதுர்த்தசி, அமாவாசை, பவுர்ணமி ஆகிய திதிகளை. எட்டு என்றது அட்டமி. **சோமவாரம்** - திங்கட்கிழமை. **புனல்** - தண்ணீர். பூசை ஆற்றிடில் என மாறுக. சிவபூசைக்குரிய சிறப்பு நாட்கள் கூறப்பட்டன.

அவம் பொலி கொடும் பாதகம் அலால் அறம் ஒன்று
 அறிகிலர் ஆயினும், அன்பால்
தவம் பொலிதரும் கோமுனிவர் ஆதியர்கள்
 தாம் செய் பங்குனித் திருவிழா மெய்
நவம் பொலிதரக் கண்டு ஏத்திடின், அவர்க்கு
 ஞான ஆனந்த பூரணம் ஆம்
சிவம் பொலி வீடு காட்டு அருள்ப் பேரூர்ச்
 சிட்டனே! பட்டி நாயகனே! 111

**ஆதியர்கள்** - முதலியோர். பங்குனி உத்தரத் தரிசனச் சிறப்பு கூறப்பட்டது.

அரச மாவனத்தில் வதிதல் போல் அடியேன்
 அகத்தும் உற்று, ஓங்கும் நின் அருட் சீர்
பரசவைத்திட்ட திறத்தில், ஓதுநர்க்கும்
 பயன் முழுது அளித்தருள்- கதிர்கால்
இரசத சபையில் நடனம் நேர் ஞான
 இரசம் ஈந்து, இறப்பு உதிப்பு ஒழிப்பான்
சிரசு அமைத்து இருதாள் ஈந்தருள் பேரூர்ச்
 சிட்டனே! பட்டி நாயகனே! 112

**அரசமாவனம்** - பேரூர். **வதிதல்** - வசித்தல். **பரச** - போற்ற. **கதிர்கால்** - ஒளிவீசுகின்ற. **இரசத சபை** - வெள்ளியம்பலம். **இரசம்** - சுவை. இருதாள் சிரசு அமைத்து என இயையும். **ஈந்தருள்** - திருவருள் புரிகின்ற. அடியேனுக்கு இந்த மாலையை இயற்றும் நற்பேற்றை வழிங்கியதைப் போல, இதனை அன்புடன் ஓதும் அடியார்களுக்கும் அருள்பாலிக்க வேண்டும் என்னும் விண்ணப்ப வடிவமாக நூற்பயன் கூறப்பட்டுள்ளது.

## வாழி விருத்தம்
## (பன்னிருசீர் விருத்தம்)

பேரூர் வாழி, பட்டிலிங்கப்
பெருமான் வாழி! இடப்பாகம்
பெற்ற பச்சை நாயகி எம்
பிராட்டி வாழி! கருணை பொழி
சீரூர் பட்டி விநாயகப் பேர்ச்
செல்வன் செவ்வேல்ச் சேய்வாழி!
சீல அரசம்பலத்து ஆடும்
தேவன், திரு, மாதவன் வாழி!
ஏர்ஊர் மறையோர் இனம் வாழி!
இசை அஞ்செழுத்து, நீறு, அக்கம்
ஏற்ற பெரியோர் இனம் வாழி!
இறை, ஆன்குலம், வான் முகில் வாழி!
வார் ஊர் தனக் கற்பினர், புலவோர்,
மறை ஆகமம் ஆதிய வாழி!
மாறாது அவிர் மங்கலங்கள் எல்லாம்
வாழி! வாழி! வாழியவே!

**அரசம்பலத்து ஆடும் தேவன்** - அரசம்பலவாணர். **திரு** - இலக்குமி. **மாதவன்** - திருமால். **ஏர் ஊர்** - பெருமை மிக்க. **இசை** - சாத்திரங்களில் புகழ்ந்துரைக்கபடுகின்ற. **நீறு** - விபூதி. **அக்கம்** - உருத்திராக்கம். **இறை** - அரசன், இப்பொழுது ஆட்சி. **மாறாது** - தம் தன்மை கெடாமல்.



# பச்சைநாயகி மாலை

**காப்பு**

*(கட்டளைக்கலித்துறை)*

பேர்ஊர் இல்லோன் உயிர் பேர் ஊர்
அறக் கொள் பேரூரில், நல்லோர்
நார் ஊர் மனத்தில், குதிகொண்டு
அருள் பச்சை நாயகிதன்
சீர்ஊர் பதத்து அணிபாமாலை
ஒன்று அன்பில் செப்புதற்கு
பார்ஊர் புகழ் இராமானந்த
நாதன் பதம்துணையே

இயல்பாகத் தனக்கெனத்தனிப் பெயரோ ஊரோ இல்லாத சிவபெருமான் அச்சிறப்பை உயிர்களுக்கும் வழங்குவதற்காக எழுந்தருளியுள்ள தலம் திருப்பேரூர் என்பது முதலடியின் கருத்து. பேரூரிலும் மனத்திலும் என ஈரிடங்களிலும் எண்ணும்மை கூட்டுக.

**நூல்**

பிற ஆம்நெறி புக்கு உழன்றிடும்
என் கொடும் பேய் மனத்தைப்
பிறவா நெறியில் புகுமாறு
அருள் - பிறவா நெறிப் பேர்
சிறவா நிற்கும் திருஆதி -
புரி, மேல்ச் சிதம்பரம்ஆம்
நறவு ஆர் மலர்ப் பொழில் சூழ் பேரை
வாழ் பச்சை நாயகியே! 1

*பிற ஆ நெறி* - நன்னெறி அல்லாத வேறு வழி (துன்மார்க்கம்). *பிறவாநெறி* - 1. மறுபிறவியற்ற நிலை. 2. பேரூரின் பெயர். ஆதிபுரி, மேலைச் சிதம்பரம், பேரை என்பன இத்தலத்தின் வேறு பெயர்கள்.

ஆண்பிள்ளை மேல் என ஓதுசொல்
கொண்டு, அன்று, அசலமன்னன்
மாண்பிள்ளை ஆம் உன்னொடு ஆண்பிள்ளை
ஒன்று எய்தின், மங்கல நாண்

சேண் பிள்ளைத் திங்கள்ச் சடையான்
நினக்கு இடல்தேரும் அந்நாள்
நாண் பிள்ளைதானும் கொள்வான்; பேரை
வாழ் பச்சை நாயகியே! 2

**அசல மன்னன்** - மலையரசன், இமவான்

அல் உறழ் கண்டம் கொள் நம்பெரு-
மான் கங்கை ஆனவளைப்
புல்லுவன் என்று ஐயம் கொண்டோ,
அலாது அருள்ப் பொற்பு அமைந்த
இல்உற நாம்,மதியாது கொண் -
டான் எனும் ஏக்கம் கொடோ
நல் உருப் பாதி ஆனாய்? பேரை
வாழ் பச்சை நாயகியே! 3

**அல் உறழ் கண்டம்** - கரிய கழுத்து. **இல் உற** - மனைவி இருக்க.

கம்பு அதிர் கங்கையை அல்லால்,
இயற்பகை காதலியாம்
கொம்பு அனையாளையும் வேட்டே,
விறகில் குலவு அழல் போல்
கும்பல்கொள் கூடல் வசிய மின்-
னார் வளை கொள்ள, எழு
நம்பனை நம்பினையே? பேரை
வாழ் பச்சை நாயகியே! 4

**கம்பு அதிர்** - சங்குகள் ஒலிக்கின்ற. **இயற்பகை** - இயற்பகை நாயனார். **வேட்டே** - விரும்பி. **கூடல்** - மதுரை. **வசிய மின்னார்** - வைசிய குலத்து மகளிர். **நம்பன்** - சிவபிரான்.

வார் என்று வேணி கொள் கங்கையை
நீ வினவற்கு "அணங்கே
நீர்" என்று பன்மை ஒருமை
மயக்கில் நிகழ்த்தில், அதைக்
"கார்"என்று கொண்டு அமைவாய்; கற்பு-
உடையார்க்குக் காதலர்பால்
நார் என்றும் கொள் முறையே பேரை
வாழ் பச்சை நாயகியே! 5

**வார் என்று** - தண்ணீர் என்பதாக. நீர் எனச் சிவபெருமான் கூறியது நீங்கள் அதாவது பெண் அல்லது மனைவி (கேட்பது உமை ஆதலால்) என்ற பொருளில். தேவி கொண்டது தண்ணீர் என்று. **கார்** - தண்ணீர். **நார்** - அன்பு, இங்கு நம்பிக்கை.

தானப் பெருக்கம் தரும் தருப்
போன்ற நின் தாளை அரன்
வானப் பெருக்கு அறுகு ஆர் சிர
மீதினில் மற்றவைகள்
மான, பெருக்கம் உறப் புனை-
யாமை மறையும் என்னும்
ஞானப் பெருக்கம் கொடோ? பேரை
வாழ் பச்சை நாயகியே! 6

**தானப் பெருக்கம்** - கொடையின் மிகுதி. **தரு** - கற்பகம். வானப்பெருக்கு - ஆகாயத்திலிருந்த வந்த வெள்ளம் ஆகிய கங்கை.

மொச்சை உண்டான் தொழும் தாதை, நின்
காமர் முதிர் வடிவில்
இச்சை உண்டான்; நின் கை இட்டது உண்-
ணான்; திண்ணன் எச்சில் உண்டான்;
பிச்சை உண்டான்; சிறுபிள்ளை உண்-
டான்; வந்தி பிட்டை உண்டான்;
நச்சை உண்டான்; பின் என்னோ? பேரை
வாழ் பச்சை நாயகியே! 7

**மொச்சை உண்டான்** - யானையாகிய விநாயகர். **தாதை** - தந்தை. **காமர் முதிர்** - அழகு நிறைந்த. **திண்ணன்** - கண்ணப்ப நாயனார். **பிள்ளை** - சிறுத்தொண்டரின் மைந்தன், சீராளன். வந்திபிட்டை உண்டது திருவிளையாடற் புராணச் செய்தி. **நச்சை** - ஆலகாலத்தை.

சேய பங்கேருகம், வெண்தா-
மரை கொள் தெரிவையர்கள்
ஆய விலோசனம் கொள் அன்னை -
யே! மலர் அந்தணனும்
மாயனும் மற்று அவர் நாயகர்
என்ற சொல் வம்பு; அவர்க்கு
நாயகன் நாதன் கண்டாய்; பேரை
வாழ் பச்சை நாயகியே! 8

**சேய பங்கேருகம்** - செந்தாமரை, கொள் தெரிவை திருமகள். **வெண்டாமரை கொள் தெரிவை** - கலைமகள். **விலோசனம்** - விழிகள். **மலர் அந்தணன்** - தாமரையை இருக்கையாக உடைய பிரமன். **மாயன்** - திருமால். **நாதன்** - சிவபெருமான்.

தெள் அருள்ப் பாடல்சொல் ஊரன் நும்
ஊரிடம் சேர, அரன்
பள்ள உருக்கொள, பள்ளியில்த்
தோய் உனைப் பள்ளியினில்க்
கொள் அருட் சுந்தரம் கண்ட கண்
நீர் விடக் கூழ்இட நீ
நள் அகம் எற்று அமைந்தாய்? பேரை
வாழ் பச்சை நாயகியே! 9

**ஊரன்** - சுந்தர மூர்த்தி நாயனார். **பள்ளியில்** - பள்ளத்தியைப் போல. **கூழ் இட** - உணவாகக் கஞ்சியைக் கொடுக்க. **நள் அகம்** - விரும்பும் உள்ளம்.

பித்தன் என்று ஓதிய ஆரூரன்
மீதில் பிழை உளதோ?
ஒத்த குலப்பெண் மணம் போக்கி,
வேசை உதவு பெண்ணின்
கைத்தலம் பற்றுவித்து, அங்கு அவள்
ஊடல் களையும் ஒற்றாய்
நத்தம் முற்று உற்று அலைந்தால் பேரை
வாழ் பச்சை நாயகியே! 10

**போக்கி** - விலக்கி. **அவள்** - பரவை நாச்சியார். **ஒற்று ஆய்** - தூதுவனாக. **நத்தம் முற்று** - இரவு முழுவதும்.

ஒரு பாகம் தோய் அரன் செவ்வேள்
இடத்து உபதேசம் உற்றான்;
குருஆம் குமரன் குறுகிடில்,
அன்னவன் கோமளத்தாள்
பெருமான் வணங்கிட, நீ நீங்க
ஒணாமையில், பெற்ற இரு-
நருமே தொழவரும் காண் பேரை
வாழ் பச்சை நாயகியே! 11

**அன்னவன்** - அந்த முருகப் பெருமானின். **பெருமான்** - சிவபிரான். **ஒணாமையில்** - இயலாததால். **இருநருமே** - இருவருமே, நகர மெய் பெயரிடை நிலையாக மிகப் பெரும்பாலும் வினையாலணையும் பெயர்களிலேயே வரும். இங்கு எண்ணியற் பெயரில் பயின்றுள்ளது அரிய ஆட்சி. மோனை காரணம்.

வண்ணக் கரிமுகம் சால் மூத்த
பிள்ளையை, மாநிலம் தோய்
எண் அற்ற குன்றிடத்தும் கோயில்
கொண்ட இளம் சுதனை
எண்ணத் துடை ஒன்று ஒன்று உள்ளீர்;
இருவரும் எய்த, வைத்து
நண்ணற்கு, எது புரிவீர்? பேரை
வாழ் பச்சை நாயகியே! 12

**வண்ண** - அழகிய. **சுதனை** - மகனை, முருகப்பெருமான், **எண்ண** - மதிக்க, இங்குக் கொஞ்சுவதற்கு. நண்ண வைத்தற்கு என மாறுக, இருத்திக் கொள்ள.

ஓதம் மதிக்க வரும் நஞ்சம்,
அஞ்சிய உம்பர் உய்வான்,
மா தயவால் பெருமான் உண்ணுங்-
காலை, மறுத்திடவும்
ஆதரத்து உண்டதனாலோ
சுதனை அருந்தும் அன்று
நாதனுக்கு ஓதல் விட்டாய்? பேரை
வாழ் பச்சை நாயகியே! 13

**ஓதம் மதிக்க** - கடலைக் கடைய. **ஆதரத்து** - தேவர்பால் கொண்ட கருணையால். **சுதனை** - சிறுத்தொண்டரின் மைந்தனான சீராளனை. **ஓதல்** - இங்கு தடுத்துரைத்தல்.

எற்பு ஆக்கை கொண்டும், தளர்ச்சி சற்று
இன்றி வில் என்ன உயர்
வெற்பு ஆக்கிய அரன், ஓடு கொண்டு
ஊர் தொறுமே இரந்தும்,
நிற்பாக்கியன் என்று உலகர் சொல் -
லாவண்ணம் நீ மனை ஆம்
நல் பாக்கியம் படைத்தான்; பேரை
வாழ் பச்சை நாயகியே! 14

**எற்பு ஆக்கை கொண்டும்** - எலும்பு மாலைகளை உடலில் அணிந்தும், எலும்புக் கூட்டு மேனியை உடைத்தாயிருந்தும் என்பது தொனிப்பொருள். **வெற்பு** - மேருமலை. **ஓடு** - பிச்சைப் பாத்திரம். **நிற்பாக்கியன்** - நல்லூழ் இல்லாதவன், துரதிருஷ்டசாலி. **மனை** - மனைவி.

உறவு அமை நாதனைப் பிச்சாண்டி -
யாய் இரந்து உண்ண விட்டே,
அறம் ஓர் எண்ணான்கையும் நீ வளர்த் -
தாலும், இவ் அம்புவியோர்
பிறர் சிறப்பு ஓதலர்; நீ அறம்
விட்டுப் பிரான்த் தடுத்தல் -
நறவு அமை ஓதி! நன்று ஆம்; பேரை
வாழ் பச்சை நாயகியே! 15

**நாதனை** - கணவன். **பிச்சாண்டி** - பிச்சை எடுப்பவன். **எண் நான்கையும்** - முப்பத்திரண்டையும். தேவி அறம் வளர்த்தது காஞ்சிப் புராணச் செய்தி. **அம்புவியோர்** - உலக மக்கள். **நறவு அமை ஓதி** - மணம் மிக்க கூந்தலை உடையவளே, அண்மைவிளி இயல்பாயிற்று.

அல்மண் அம் கொண்ட குழல் அணங்கு
உன்னை அசலமிசை
முன் மணம் கொண்டனன் அன்று அரன்;
நின் பொன் முளரி அம் தாள்
கல் மணம் கொண்டிட வைத்து உணர்ந் -
தே முடிக்கண் புனைந்து
நன் மணம் கொண்டனன் பின்; பேரை
வாழ் பச்சை நாயகியே! 16

**அல்மண் அம் கொண்ட** - இருட்டில் மூழ்கியதைப் போன்ற அழகினைப் பெற்ற. **குழல்** - கூந்தலை உடைய. **அசலமிசை** - (இமய) மலையின்கண். **முளரி அம் தாள்** - தாமரை போன்ற அழகிய அடிகள். **கல்** - அம்மி. **மணம் கொண்டிட** - பொருந்துமாறு. **முடிக்கண்** - தன் தலையில்.

பல் பட்ட மூரல் அதனால்த்
திரிபுரம் பல்கு அழலின்-
முன்பட்ட பஞ்சில் எரித்தார் -
தம் பாகம் முயங்கியும் நீ

புல் பட்ட தோல் உடையோடு எலும்பு
ஆதிய பூண் அணியாய்;
நல்பட்டு அணி கொண்டது என்? பேரை
வாழ் பச்சை நாயகியே! 17

**முரல்** - புன்முறுவல். **அழல்** - தீ. **புல் பட்ட** - இழிந்த. **ஆதிய** - முதலிய

மகன் தந்தை சோதரன் காதலன்
நிற்கு மலை நடம் செய்
குகன் தந்தை; தந்தைக்கு அவன் குரு;
முன்வரும் குஞ்சர மா
முகன் தந்தை போற்றிடு தெய்வம்; எல்-
லோர்க்கும் முதல்வி நிற்கு
நகன் தந்தை; நும் முறை என்? பேரை
வாழ் பச்சை நாயகியே! 18

ஒப்பு : எம்பெருமான் இமவான் மகட்குத் தன்னுடைக்கேள்வன் மகன் தகப்பன் தமையன் (திருவாசகம்). **குகன் தந்தை** - முருகவேளின் தகப்பனார் ஆகிய சிவபிரான். **குஞ்சரமா முகன்** - யானை முகன். **நகன்** - மலையரசன், இமவான்

"அரி அற்றுத் தேவி இன்று ஐயன் ஐ-
யாறற்கு"என் ஆரணம் கேட்டு,
உரிமைக் குணத்து அண்ணன் நின்னிலும்
வேறு இன்று என்று உய்த்து உணராது,
எரியில் கொதித்து இகலி, பெரிது
ஊளையிடும் அவர்தாம்
நரி ஒப்பர் வால் உண்டு எனில்; பேரை
வாழ் பச்சை நாயகியே! 19

**ஆரணம்** - அரி அலால் தேவி இல்லை ஐயன் ஐயாறனாற்கே என்னும் வாகீச வேதம். **அண்ணன்** - தமையன் ஆகிய திருமால். **எரியில்** - தீயைப் போல. **இகலி** - பகைத்து. ஒப்பு : வால் இலாச் சம்பு என வாழ் மதங்கா (மாறனலங்காரம், உதாரணம் 227)

போதம் பொருந்து உன் திருமுலைப்
பாலைப் புசித்தஅளவில்,
காதம் கமழும் பொழில்க் காழி
வள்ளல், கனிந்த தமிழ்

வேதம் கொடு உன்னைத் துதியாது,
இறை புகழ் விள்ளவைத்தாய்;
நாதன் புகழ்க்கு இச்சையோ? பேரை
வாழ் பச்சை நாயகியே! 20

**போதம்** - ஞானம். **காழி வள்ளல்** - *சீகாழித் திருஞானசம்பந்தர்.*

உன்றனைப் பாடத் துவக்கம்
செயின் மனத்து ஊற்றெடுத்தே
என்றனை ஈர்ப்பது இங்கு என் தவ-
மோ? நின் இடக்கண் எனும்
குன்று அனைத்து ஆம் புளகக் கொங்கை
நாமகள் கொட்டு அருளோ?
நன்று அனைத்தும் பொலியும் பேரை
வாழ் பச்சை நாயகியே! 21

**துவக்கம் செயின்** - தொடங்கினால். **புளக** - புடைத்தெழுந்த.

தானம் புயலில் பொழி சிந்-
துரத்தில் தருக்கி, மிக
ஈனம் புணரும் கொடியோ-
ரிடை புலர் என்னை, உயர்
வானம் புகழ் நின் கழல் கொண்ட
பேரின்ப வாரியிடை
நானம் புரியப் புரி-பேரை
வாழ் பச்சை நாயகியே! 22

**தானம்** - யானை மதம். **புயலில்** - மேகத்தைப் போல. **சிந்துரம்** - யானை. **புலர்** - வாடுகின்ற. **வானம்** - வானோர். ஆகுபெயர். **வாரி** - கடல். **நானம் புரிய** - குளிக்குமாறு.

கா ஆர் உலகில் நரகில்
புவியில் கறங்கு எனவே
ஓவாது சுற்றி உழலும் என்
ஆவியை, உன் உள் மதித்து
ஆ! ஆ! எனச் சற்று இரங்கு கண்-
டாய் - பவ ஆழியின் மீள்
நாவாய் எனத் திகழும் பேரை
வாழ் பச்சை நாயகியே! 23

**கா ஆர் உலகு** - கற்பக மரம் உள்ள சுவர்க்கம். **கறங்கு** - பம்பரம். **ஆஆ** - இரக்கக் குறிப்பு. **பவ ஆழி** - பிறவிக் கடல். **நாவாய்** - படகு.

அம்மா என உனை ஓர்தரம்
　　அன்பில் அழைப்பவர்பால்
சும்மா இருக்கும் சுகோததி
　　ஆழ்த்தத் தொடர்தல் கண்டும்
இம் மா நிலத்தில் வந்து அலைந் -
　　தேன் எனை ஏன்று கொளாய்-
நம் ஆதரம் நிறையும் பேரை
　　வாழ் பச்சை நாயகியே! 24

**சுகோததி** - சுக+உததி, இன்பக்கடல். சும்மா இருக்கச் சுகம் உதயம் ஆகுமே என்பார் தாயுமானவர். **அலைந்தேன் எனை** - பயனற்றுத் திரிந்து கொண்டிருக்கும் அடியேனை. **ஏன்று கொளாய்** - அடிமையாக ஏற்றுக் கொள்வாயாக. **ஆதரம்** - விருப்பங்கள்.

ஊட திருத்தி பெற மட -
　　வாரை உயரும் மணி
மாடத்து இருத்திட வாஞ்சை கொள்-
　　வேனை, வெள் வாரிசத்தாள்
பாட, திரு திருத்தங்கிட
　　ஒப்பனை பண்ணும் நின்தாள்
நாடத் திருத்திடுவாய் - பேரை
　　வாழ் பச்சை நாயகியே! 25

**ஊட** - புலவி கொண்டபோது. **திருத்தி** - மன நிறைவு. **வெள் வாரிசத்தாள்** - வெள்ளைத் தாமரையில் இருக்கும் கலைமகள். **திரு** - இலக்குமி. **திரு தங்கிட** - அழகு நிலைக்கும்படி. **திருத்திடுவாய்** - தவறு நீக்கி ஆட்கொள்வீராக.

நிலக்கண் இயைந்தவர் யாவரும்
　　பத்திமை நேர்ந்திட, நின்
வலக்கண் அருள்சற்று இரந்தேன்;
　　எனை இன்னம் மாநிலத்தில்
அலக்கண் அமைய விடாதே; நின்
　　பாதத்து அடைக்கலம்; மெய்ந்
நலக்கண் அளித்தருள்வாய் - பேரை
　　வாழ் பச்சை நாயகியே! 26

**நிலக்கண்** - உலகத்தில், அத்துச் சாரியை கெட்டது. **பத்திமை** - இறையன்பாகிய பண்பு. வலக்கண் என்றது திருமகளை. **அருள்** - இங்கு பொருட்செல்வம். **அலக்கண்** - துன்பம். **மெய்ந்நலக்கண்** - நிலையான பேரின்பத்தில்.

பீடு உந்திய மறைக்கு எட்டா நின்
சீர்த்திப் பெருக்கை, அன்பில்
பாடும் புலவர் தமக்கு எளி-
தே- கொடைப் பைந்தருக்கீழ்க்
கூடும் புலவர்தம் வாழ்க்கையும்,
வாரிசன், கொண்டல் வண்ணன்
நாடும், பிறவும்; திருப்பேரை
வாழ் பச்சை நாயகியே! 27

**பீடு உந்திய** - பெருமை மிகுந்த. **சீர்த்தி** - மிகுபுகழ். **பைந்தரு** - பசிய மரங்கள், கற்பகம் முதலியன. **புலவர்தம்** - தேவர்களின். **வாரிசன்** - தாமரையில் வீற்றிருக்கும் பிரமன். **கொண்டல் வண்ணன்** - மேக நிறத்திருமால். இவர்கள் நாடு முறையே சத்தியலோகமும் வைகுந்தமும் ஆம்.

அன்னே! மரகத வல்லீ என்று
அன்பில் அழைப்பதற்கு
முன்னே, அவர் விழிமுன்னே
வரும் அருள்முற்று அமைந்த
பொன்னே! நவ மணியே! உனை
ஒவு அறப் போற்றும் ஒரு
நல் நேயமே தருவாய் - பேரை
வாழ் பச்சை நாயகியே! 28

**முன்னே** - முதலாவது காலமுன், அடுத்தது இடமுன். **ஒவு அற** - இடைவிடாமல்.

அவிஆம் உணவு உண்டு அரம்பையர்
ஏவலர் ஆகுநர், கட்-
செவி பூண்எனக் கொண்டவன் உள்
எழுதும் நின் சேவடியை,

குவிவு ஆம் மனத்தொடு கண்ணில் கண்டு,
ஆனந்தம் கொண்டு,நின் சீர்
நவிலாப் புலவர் அன்றோ? பேரை
வாழ் பச்சை நாயகியே! 29

**அவி ஆம்** - வேள்வியில் இடப்படும் பொருள்கள் ஆகிய. அரம்பையர் ஏவலர் ஆகுநர் என்றது தேவர்களை. **கட்செவி** - பாம்புகளை. **பூண்** - அணிகலன். **உள்** - உள்ளத்தில். **குவிவு ஆம்** - ஒருமுகப்பட்ட. ஐம்புல இன்பங்களை ஆரத் துய்ப்பவர்கள் என்னும் பொருளில் தேவர்கள் புலவர் எனப்படுவர். விண்ணகப் புலவர் இறைவி புகழை நவிலாதவர்கள் என்றதனால் அருத்தாபத்தியாக அறிஞர்களாகிய மண்ணகப் புலவர் நவில்பவர்கள் என்பது பெறப்படுகிறது.

வஞ்சம் பொருந்தும் மனத்தேன்
எனினும்,நின் மா மலர்த் தாள்க்
கஞ்சம் பொருந்தில் என்குற்றம் எல்
நேர்பனிக் காட்சி அன்றோ?
தஞ்சம் பொருந்து இமையோர்கள் இன்பு
எய்திட, சார் களத்தில்
நஞ்சம் பொருந்தினன் தோய் பேரை
வாழ் பச்சை நாயகியே! 30

**கஞ்சம்** - தாமரை. **எல் நேர்** - சூரியனுக்கு எதிரில். **தஞ்சம் பொருந்து** - அடைக்கலமாக அடைந்த. **களத்தில்** - கழுத்தில். வரலாறு வெளிப்படை.

பாட்டில் துதிக்கும் எளியேற்கு
உனது அருள் பாலித்திடாய்;
நீட்டித்து இருப்பது என்? முன்ஒரு
பாடல் நிகழ்த்தினன்பின்
காட்டில்த் திரிந்து அயர் பாதாம்-
புயம், என் கருத்தினுள்ளே
நாட்டில், சிவக்கும் என்றோ? பேரை
வாழ் பச்சை நாயகியே! 31

**நீட்டித்து இருப்பது** - காலதாமதம் செய்வது. **முன்** - முற்காலத்தில். **பாடல் நிகழ்த்தினன்** - சௌந்தரிய லகரியைத் தமிழ்ப்படுத்திய கவிராஜ பண்டிதர். பாடல் ஆகுபெயராக நூலை உணர்த்தி நின்றது.

இனி அந்நூலின் 26 ஆவது பாடல் ஆகிய வேதரஞ்சகன் எனத் தொடங்கும் எழுசீர்ச் சந்த விருத்தம் ஆகிய ஒரு பாடலுக்காக என்று புலவர் புராணம் கூறும். **நாட்டில்** - நட்டுவைத்தால்.

ஏதக் கணம் கணம்தோறும் நல்-
கி, கணத்தே ஒழியும்,
பூதக் கடம் பற்பல யோனி-
யூடும் புகுந்து இளைத்தேன்;
மேதக்க நின் திருத்தொண்டர்கள்
போல் இனிமேல் எனினும்
நாதக் கழல் புகுத்து ஆள் - பேரை
வாழ் பச்சை நாயகியே! 32

**ஏதக்கணம்** - துன்பக் கூட்டங்கள். கணம்தோறும் ஒவ்வொருநொடியிலும். **பூதக்கடம்** - உயிர் தங்கும் உடல். **யோனியூடும்** - பிறவிகளிலும். **நாதக் கழல்** - நாத தத்துவம் ஆகிய திருவடிகளில்.

சேயே என, எனைச் சொந்த-
மதாக் கொண்ட, செல்வ அருள்த்
தாயே! என் குற்றங்கள் எண்ணி, நின்
உள்ளந்தனில் சினந்து
நீயே புறம்தள்ளிடில், இனி
வேறு எவர் நெஞ்சு உவந்து, இந்-
நாயேனை ஆதரிப்பார்? பேரை
வாழ் பச்சை நாயகியே! 33

**சேயே என** - குழந்தையாக.

சகம் பெற்ற மாயை வலியால்,
மனம் மிகச் சஞ்சலிப்பேன்
அகம் பெற்ற வைப்பு என ஓங்கும் நின்
இன்ப அருள்வடிவை,
முகம் பெற்ற கண்கொண்டு காண, எந்-
நாள் அன்பின் முன்வருவாய்?
நகம் பெற்ற ஆரமுதே! பேரை
வாழ் பச்சை நாயகியே! 34

**சகம் பெற்ற** - உலகத்துக்கு இயற்கை ஆகிய. **சஞ்சலிப்பேன்** - கலங்குபவன் ஆகிய அடியேனின். **அகம்** - உள்ளம். **வைப்பு** -

புதையல். முகம் பெற்ற எனவும், கண் கொண்டு காண எனவும் வாளா கூறியது உள்ளத்தில் கற்பனையாகத் தியானிப்பது போதாது, ஊனக்கண் காண நேரில் வரவேண்டும் என வற்புறுத்துவதற்காக. **நகம்பெற்ற** - இமயமலை அரசனால் மகளாகப் பெறப்பட்ட. அமுதம் கடலில் தோன்றும் இங்கு மலையில் தோன்றியது என்பது ஒரு நயம்.

முகில் போல் இருண்ட குழல் மட-
வார்தம் முலை அருந்தத்
திகில்சாரும் நெஞ்சம் படைத்து அயர்-
வேற்கு உள்சிறிது இரங்கி,
அகில்த் தூப மாடப் பிரமா-
புரப் பிள்ளைக்கு அன்று அளித்த
நகில்ப் பால் சிறிது அருளாய் - பேரை
வாழ் பச்சை நாயகியே! 35

**முலை அருந்த** - தாய்ப்பால் குடிக்க, மறு பிறவி எடுக்க. **திகில் சாரும்** - அச்சம் கொள்ளும். **பிரமபுரப் பிள்ளை** - சீகாழித் திருஞான சம்பந்தர். உலகியல் தாய்ப்பால் அருந்துதல் நீங்கும்படித் தேவியின் நகிற்பாலை வேண்டுவது ஒரு நயம்.

பகைப்பாணம் ஏவவரும் மாரன்
மெய் பக்என எரியப்
புகைப்பார் அனையர் கொளும் தவ
வேடம் புனைய நல்கி,
திகைப்பாகி வாட அடியேனை
வைத்தது, தெள்ளியர்க்கு
நகைப்பாகவோ? புகலாய் - பேரை
வாழ் பச்சை நாயகியே! 36

**பகைப் பாணம்** - விரோதத்தை உடைய அம்பு, எய்தவரின் பகைமை கருவியின்மேல் ஏற்றப்பட்டது, உபசாரவழக்கு. **புகைப்பார்** - புகையாகும்படி எரித்த சிவபெருமான். **அனையர்** - போன்றவர்கள். **தெள்ளியர்க்கு** - அறிஞர்களுக்கு.

பொக்கம் படும் பொருள்த் தாய் அகம்
ஆம்புன் புலால் உடம்புள்
துக்கம் பொருந்தி உழல்வேனை,
நின் அருள்த் தொண்டு அடியார்

பக்கம் பொருந்த அமைத்து இனிக்
காப்பது உன் பாரம் கண்டாய் -
நக்கன் புகழ் அமுதே! பேரை
வாழ் பச்சை நாயகியே! 37

**பொக்கம்படும்** - *நிலையற்றதாகிய.* **பாரம்** - பொறுப்பு. **நக்கன்** - *சிவபிரான்.*

கொங்கு ஆர் கணை, சிலை, பாசமொடு
அங்குசம் கொண்டு அவிர் நின்
பைங் காமர் மேனி கண்டு, எந் நாள்
பணியப் பணித்தருள்வாய்?
வெம் காமவேளை எரித்தானும்
போற்ற விளங்கும் எழில்
நங்காய்! இணை அற்று அவிர் பேரை
வாழ் பச்சை நாயகியே! 38

**கொங்கு ஆர் கணை** - தேன் *நிறைந்த* மலர்கள் ஆகிய அம்புகள். ***சிலை*** - (கரும்பு) வில். **பைங்காமர்** - பசுமையும் அழகும் கொண்ட. **பணிய** - வணங்க. **வெம்** - விருப்பத்தை உண்டாக்குகின்ற.

விசை பெருக்கும் புல வேடருள்ப்-
பட்டு, வெதும்பி, அழி
தசை பெருக்கி, தளர் நாயேன்
உனது அருள்த் தாள்த் துணை தோய்ந்து
இசை பெருக்கும் தினம் ஒன்று உள-
தோ? பட்டீச்சுரனுள்
நசை பெருக்கும் குயிலே! பேரை
வாழ் பச்சை நாயகியே! 39

**அழிதசை** - ஒருநாள் அழியப்போகும் உடல். **இசை** - புகழ். **நசை** - விருப்பத்தை.

துச்சம் உறும் கனவே போன்று
ஒழியும் இத் தூலமிசை
நிச்சய புத்தி படைத்து, இறு-
மாந்து உழல் நீசன் எனக்கு,

அச்சம் இல் ஆனந்த வாழ்வு உறு-
மாறு என்று அருள்புரிவாய்?
நச்சு அரவு ஆழி கொள்வாய்! பேரை
வாழ் பச்சை நாயகியே! 40

**துச்சம் உறும்** - இழிந்த. **தூலமிசை** - உடலின்கண். **நிச்சயபுத்தி** - இது நிலையானது என்னும் எண்ணம். **நச்சு அரவு ஆழி** - விடப்பாம்பு ஆகிய மோதிரம்.

வசிக்கும் கொடு விழியார் சுகத்
தூண்டிலின்வாய் இரையைப்
புசிக்கும்படி விடுத்தே, வினை
தீர்தரும் போழ்தில், உடல்
சுசிக்கு உண்டியாக, எனது ஆ-
வியை யமதூதர் பற்றி
நசிக்கும்படி, கை விடேல் - பேரை
வாழ் பச்சை நாயகியே! 41

**வசிக்கும்** - சுண்டி இழுக்கின்ற. **சுசிக்கு** - நெருப்புக்கு.

போராடும் மன்மதன் பூங்கணை
பாயப் புலர்ந்து, மின்னார்
சீராடல் கண்டு, அவர்க்கு ஏவல் செய் -
வேன், நின் திருவடிகள்
ஆராதனம் புரிந்து, ஆனந்தம்
எய்த, அருள்வது என்றே?
நாராயணன் தங்கையே! பேரை
வாழ் பச்சை நாயகியே! 42

**ஆராதனம் புரிந்து** - வழிபட்டு.

ஒளிகொண்டு என் உள்ளத்து ஒளிகொண்ட
நின் அடி உன்னி, அன்பில்
களிகொண்ட நெஞ்சும் துளி கொண்ட
கண்ணும், நின்கஞ்சம் அன்ன
வெளிகொண்ட தாளும் வெளிகொண்டு
காண விளங்கிடுவாய்-
நளிர் கொண்ட, தண் பணை சூழ் பேரை
வாழ் பச்சை நாயகியே! 43

**ஒளி கொண்டு** - பேரொளி பெற்று விளங்குதலை இயல்பாகப் பெற்று. **ஒளிகொண்ட** - ஒளிந்துகொண்டுள்ள, மறைந்துள்ள. **உன்னி** - நினைத்து. **களி** - மகிழ்ச்சி. **துளி** - கண்ணீர்த் திவலை. **வெளிகொண்ட** - தூய. **வெளிகொண்டு** - புறத்தில், ஊனக் கண்களால். **நளிர்** - குளிர்ச்சி.

ஈனத் தரணியினுள் சுழல் -
வேனை எடுத்து, அருளால்
கானத்து அரு மறைக்கு எட்டா நின்
சீர்த்தி கழறவைப்பாய்-
வானத்து அமரரும், வால் நத்-
தனும் மகிழ்வால் நத்தும் ஓர்
ஞானத் தனிச்சுடரே! பேரை
வாழ் பச்சை நாயகியே! 44

**ஈன** - இழிந்த. **தரணியினுள்** - உலகியலுள். **கானத்து அரு மறை** - இசைப்பாடல்களால் ஆகிய அரிய வேதங்கள். **வால் நத்தனும்** - ஒளிர்கின்ற சங்கினை ஏந்திய திருமாலும். **நத்தும்** - விரும்பும்.

தேனே! மதுரச் செழுங்கனி -
யே! சிற்சுகப் பொலிவு ஆர்
வானே! மவுன வெளியே!
வெளியில் வளர் நிறைவே!
ஊனே! எனது உயிரே! இன்பம்
ஆர் ஒளிக்குள் ஒளியே!
நானே உனை நம்பினேன்! பேரை
வாழ் பச்சை நாயகியே! 45

**மதுர** - இனிய. ***சிற்சுக*** - மெய்யறிவால் உண்டாகும் இன்பம்.

காலம் கடந்த சிவயோகர்
உள்ளம் களிப்ப, அருள்ச்
சீலங்கள் தந்தருளும் பத
கஞ்சத்து இரு நிதியே!
கோலம் கடந்த பெருஞ் சுகம்
எய்திடக் கூட்டிடுவாய்-
ஞாலங்கள் தந்தவர் தாழ் பேரை
வாழ் பச்சை நாயகியே! 46

***சீலங்கள்*** - ஒழுக்கங்களை. **பத** - திருவடி ஆகிய. **இரு** - பெரிய. **கோலம் கடந்த** - வடிவம் ஆகிய உடலுக்கு அப்பாற்பட்ட. **ஞாலங்கள் தந்தவர்** - உலகங்களைப் படைத்த பிரமன்.

தேன் கண்டு அன மொழிச் செல்வி! நின்-
றன் மணச் சேவை இமக்-
கோன் கண்டு, வான் கண்ட பின்னே,
மலையம் குலவு முனி
தான் கண்டு உவக்கப் புரிந்தாய்;அத்
தன்மையில் சற்று அருளால்
நான் கண்டு உவக்கப் புரி - பேரை
வாழ் பச்சை நாயகியே! 47

**கண்டு** - கற்கண்டு. **இமக்கோன்** - இமவான், மலையரசன். **வான்** - வானோர்கள். **மலையம் குலவு முனி** - பொதிகையில் வாழும் அகத்தியர்.

உற்று ஆய்பவர் உளத்து ஓவாது
பேரின்பம் ஊற்றும் மறை
முற்றுஆய், சராசர கோடிகள்
ஈந்தும் முலை முதிரப்
பற்றாய்! அடியார்தம் பற்றாய்!
எனது பவம் ஒழித்து ஆள்-
நற்றாய்! நினக்கு அபயம்; பேரை
வாழ் பச்சை நாயகியே! 48

**மறை முற்று** - வேதங்களின் முடிவு. ***சராசர கோடிகள்*** - கோடிக்கணக்கான நிலைத்திணை இயங்குதிணை உயிர்கள். ***முதிரப் பற்றாய்*** - முதிர்ச்சி அடையப் பெறாதவளே. ***பற்றாய்*** - பற்றுக்கோடு ஆக இருப்பவளே. **பவம்** - பிறவி.

பண்ணில் பொலி செந்தமிழ் கொடுஉன்
சீர் துதி பண்ணிடுவான்
எண்ணில் சுகம் மிக்கு இசைவது என்-
றால், இனி என் இதயக்
கண்ணில் கண்டு, ஊன் அமை கண்ணில் கண்டு,
ஓங்க, நின் காட்சி நல்க
நண்ணில் புகல்வது என்னே! பேரை
வாழ் பச்சை நாயகியே! 49

**பண்ணில் பொலி** - இசையைப் போல விளங்குகின்ற. **நண்ணில்** - அடைந்து விட்டால்.

கனியே! இனிய கற்கண்டே!
கணபதி கந்தன் வரும்
தனியே! தனி முதற்கு ஓர் துணை-
யே! மெய் தழைத்த மனோன்-
மணியே! நவ மணியே! கண்-
மணிக்குள் வளரும் மின்னே!
நனி ஏத்தும் அன்பர்க்கு அருள் பேரை
வாழ் பச்சை நாயகியே! 50

**மனோன்மணி** - உயிர்களின் மலங்களை அகற்றிச் சிவானந்தத்தை உண்டாக்கும் அருள்ச் சக்தி, உன்மனா சத்தி என வழங்கப்படுவாள்.

இல்ப்பால் அமைய விடாள் மாயை
என்னை எடுத்து இடுக்கி,
வன் பாலையாம் உலகில் சேர்த்து,
இகல் தத்துவப் பெயர் தோய்
துற்பாலர் கைக் கொடுத்தாள்; சோக
தாகம் துதைந்து இளைத்தேன்;
நற்பால் அளித்தனை ஆள் - பேரை
வாழ் பச்சை நாயகியே! 51

**இல்ப்பால்** - முத்தி வீட்டிற்குள். **விடாள்** - விடாதவள் ஆகிய. **இகல்** - போரிடுகின்ற. **துற்பாலர்** - தீய மைந்தர். **துதைந்து** - மிக நெருக்குண்டு. **நற்பால்** - நல்ல கதி, மோட்சம். **அளித்தனை** - கொடுத்து, முற்றெச்சம்.

மால், அக்க அங்கன் முதலோர்
துயர் அற மாந்து நஞ்ச
நீலக் கண்டப் பெருமானுடன்
ஒப்பு அகல் நீ வதியும்
ஓலக்கம் காணப் புரியினும்,
சீர்த்தியை ஓதுதற்கு
நா லக்கம் சற்று அல்லவோ? பேரை
வாழ் பச்சை நாயகியே! 52

**அக்க அங்கன்** - கண்கள் நிறைந்த உடலை உடைய இந்திரன். **மாந்து** - உண்ட. **ஒப்பு அகல்** - இணையற்ற. **வதியும்** -

எழுந்தருளியிருக்கும். **ஓலக்கம்** - கொலுக்காட்சி. **நா** - **நாக்கு. லக்கம்** - நூறாயிரம்.

கன்று வன்துன்பப் பனிப்பு அற்று
ஒழிய, என் கண் எதிரே
என்று பல்லாயிரம் போலும்நின்
சேவையை ஈந்து,என் வினை
குன்றும் வண்ணம் புரிந்து, என் சோ-
தனைகள் குயிற்றிடினும்
நன்று நன்றே; அஞ்சிடேன்; பேரை
வாழ் பச்சை நாயகியே! 53

**கன்று** - வாட்டுகின்ற. **பனிப்பு** - நடுக்கம். **என்று** - சூரியன். **என் சோதனைகள்** - எத்தகைய சோதிப்புகள். **குயிற்றிடினும்** - செய்தாலும்.

ஊன் ஓர் பொருள் எனவே காட்டும்
மாயையினுள் க்கிடந்து,
நான் ஓர் எளியன் படும்பாடு
அனைத்தையும் நன்கு உணர்ந்தும்
ஏனோ தயவு இலர்போல் இருந்-
தாய்?சற்று இரங்கி அருள்
ஞானோதயம் பெறச் செய் - பேரை
வாழ் பச்சை நாயகியே! 54

**ஊன்** - உடலை. **ஓர்** - ஒப்பற்ற. இங்குச் சிறப்புடைய. **ஞானோதயம்** - ஞான + உதயம், மெய்யறிவின் தோற்றம்.

மாண்மலர் மேல்க்கொள் ஐந் தாருக்கள்
நாணம் மருவ விரைத்
தாள் மலர் காட்டும் தருவே!
திரு அருள்ச் சாகரமே!
வாள் மலர்க் கண் கொண்ட
வாரிச மாதர் வகிர்ந்து கட்டும்
நாள் மலர் ஞானக் குழல் பேரை
வாழ் பச்சை நாயகியே! 55

**மாண்** - சிறப்புடைய. **தாருக்கள்** - (கற்பகம் முதலிய) மரங்கள். **விரை** - நறுமணம் நிறைந்த. **வாள்** - ஒளிமிக்க. **வகிர்ந்து கட்டும்** -

கால்களாகப் பிரித்துப் பின்னிவிடும். **குழல்** - கூந்தல்.

நினை அறிவாகி என் நெஞ்சக-
மீதில் நினைக்கில், உடன்
அனை அறியாத ஓர்சூலில் நின்
சீர் எழுமாயின், அரன்
தனை அறியா இன்பம் தேக்கு நின்-
னோடு ஒன்றும் தன்மையினில்
நனையடி ஏன் பணியான்? பேரை
வாழ் பச்சை நாயகியே! 56

***அறிவாகி*** - உணர்ந்து. **சூலில்** - கருப்பத்தைப் போல. **தனை அறியா** - தன்னை மறந்து, தற்போதம் நீங்கிய. **தேக்கு** - நிறைகின்ற. **நனை அடி** - தேன் பிலிற்றும் மலர் போன்ற திருவடி.

புண்இயல் மாயைத் துயர் நின்னொடு
ஓத என் புந்தியிடை
எண்ணினன் பாடல் இசைத்திடு
காலையில், என்னது உள்ளத்து
உள்நிறை துன்பு அகன்று ஓடுவ-
தால்,என் உளத்தின் உள்ளே
நண்ணியதே உரைப்பேன்; பேரை
வாழ் பச்சை நாயகியே! 57

**புண் இயல்** - வருத்துவதைத் தன் இயல்பாகக் கொண்ட. **புந்தியிடை** - இங்கு மனதில், என்னை? நினைத்தல் மனத்தின் தொழில் ஆதலின். **எண்ணினன்** - கருதி, முற்றெச்சம். **காலையில்** - நேரத்தில்.

அலைமங்கை மால்மார்பு அலை மங்கை
ஆகிட, ஆதரம் சால்
கலைமங்கை உள்ளம் கலைமங்கை
ஆக, கவின் இமய -
மலைமங்கை ஈசன் மலைமங்கை
ஆகினை; மற்று எவர்க்கும்
நலைமங்கை நீகாண்; அருள்ப்பேரை
வாழ் பச்சை நாயகியே! 58

**அலை மங்கை** - பாற்கடலில் உதித்த திருமகள். **அலை மங்கை** - அசைகின்ற பெண், வினைத்தொகை. ***ஆதரம் சால்*** - அன்பு மிக்க.

**உள்ளம் கலை மங்கை** - மனத்தைப் பலவாறு குலையச் செய்கின்ற. **மலைமங்கை** - 1. மலைமகள், உமை. 2. உள்ளத்தை மயக்கும் பெண். **எவர்க்கும்** - எவரையும் விட. **நலை** - நல்லை.

தீயேனை, மாயை மயக்கத்தில்
ஆழ்ந்து ஒரு திக்கும் அற்ற
பேயேனை, எண்ணுக்கு அடங்காத
துன்பப் பெருக்கினனை,
தாய்!ஏனை மானிடர்க்கு எய்தாத
சுத்த சன்மார்க்கம் உய்த்து, இந்
நாயேனைக் கைக் கொண்டருள் - பேரை
வாழ் பச்சை நாயகியே! 59

**திக்கும்** - கதியும். **தாய்** - அன்னையே, அண்மை விளி. **ஏனை** - பிற.

**ஊணை** மதித்துக் கடல் மதித்து
ஆலம் உற, சுரர் தம்
நாணை மதிக்கிலர் நாரியர்
நாணை மதித்து அழுங்கி,
மாண் ஐ மதிச் சடையார்க்கு ஓத,
உண்டார்; மறுத்திலை நின்
நாணை மதித்து; நங்காய்! பேரை
வாழ் பச்சை நாயகியே! 60

**ஊணை மதித்து** - உணவை (இங்கு அமுதம்) உத்தேசித்து. **கடல் மதித்து** - பாற்கடலைக் கடைந்து. **ஆலம் உற** - நஞ்சு வெளிப்பட. **தம் நாணை** - தங்கள் பெருமையை, சுயகவுரவத்தை. **மதிக்கிலர்** - எண்ணாதவர்கள் ஆகி, முற்றெச்சம். **நாரியர்** - தங்கள் மனைவிமார்களின். **நாணை** - தாலியை. **அழுங்கி** - வருந்தி. **மாண்** - மாட்சிமை மிக்கவர் ஆகிய. **ஐ** - தலைவர் ஆகிய. **மதிச்சடையார்க்கு** - பிறை சேர்ந்த சடையை உடைய சிவபிரானுக்கு. **நாணை** - தாலி பாக்கியத்தை. இது, வேதரஞ்சகன் மால் புரந்தரன் வேக சண்ட குபேரனோடு எண்திசை பாலர் பொன்றவும் ஆதிஅந்தம் இலாதது ஓர் நாதர் பொன்றிலர்; ஏது உன் மங்கல நாண் உறும் திறம் என்னும் சௌந்தரிய லகரிச் செய்யுளை நினைந்து கூறியது.

காட்டு இயல் மாக்களின் காயங்-
களுக்கு இடுகாடுகளாய்
நாட்டு இயல் மாக்கள் சன்மார்க்கப்
பயிரை நசிக்கின்ற ஆல்.

வீட்டு இயல் வேட்டம் புரியப்
புரி - அருள் வெள்ளிமன்றில்
நாட்டியன் மெச்சி அணை பேரை
வாழ் பச்சை நாயகியே! 61

**காட்டு இயல்** - கானகங்களில் திரிகின்ற. **மாக்களின்** - விலங்குகளின். **நாட்டு இயல் மாக்கள்** - நாட்டின்கண் உள்ள பகுத்தறிவற்ற மனிதர்கள். **நசிக்கின்ற** - அழிக்கின்றனர். விலங்குகள் என்றதற்கேற்ப அஃறிணை வினைமுற்று அமைத்தார். **ஆல்** - அசை. **வீட்டு இயல்** - முத்தி பெறும் தன்மையை. **வேட்டம் பெற** - வேட்டை ஆட, விரும்பிப் பெற முயலுமாறு. **நாட்டியன்** - கூத்தன்.

போகம் பரவு உன் முலை ஆர்
அமுதம் புசிக்குநர், தெய்-
வீகம் பரவும் அடியார்க்கும்
நல்கும் விறலர் பரி
பாகம் பரவ ஒருவர்க்கு
அருள் - இருபாலும் உற்ற
நாகம் பரவும் புகழ்ப் பேரை
வாழ் பச்சை நாயகியே! 62

**போகம் பரவு** - இன்பம் நிறைந்த. போகமார்த்த பூண்முலையாள் என்கிறது பச்சைப் பதிகம். **புசிக்குநர்** - உண்டவரும். **அடியார்க்கும் தெய்வீகம் நல்கும் விறலர்** - வலிமையை உடையவரும் ஆகிய திருஞானசம்பந்தரின் பரிபாகம். **பரவ** - பக்குவநிலை பெறுமாறு. **ஒருவர்க்கு** - (எனக்கு இல்லாவிட்டாலும் உலக நலம் கருதி வேறு) ஓர் அடியாருக்காவது. இருபாலும் - மேல் கீழ் ஆகிய இரு திசைகளிலும். நாகம் - முறையே சுவர்க்கம், பாதலம்.

மரகத வல்லி! நின்றன் திரு
நாமம் வழுத்திடுவார்
துரகதம் யானை இரதத்தில்
ஊர்குநர் தொண்டு கொண்டே,
அர கதப் புன் சமயத்தார்தம்
கொற்றம் அறுத்து, இருள் தோய்
நரகு அதம் ஆக்குநர் காண்; பேரை
வாழ் பச்சை நாயகியே! 63

**துரகதம்** - குதிரை. **ஊர்குநர்** - அரசர்களின். **அர** - அற, போலி, மிகுதியான. **கத** - சினத்தை உடைய. **கொற்றம்** - வெற்றி. **அதம்** - அழிவு.

மன்உயிர்க் கும்புகட்கு எய்திடும்
துன்ப வகைகள் எல்லாம்
என் உயிர்க்கு உற்றன போல் எண்ணி,
உற்றோர் இடர் களைந்து,
பொன் உவந்து ஏத்தும் நின் தாளூடு
அணைய, என் புந்தியுள்த் தோய்
நன்னுதல்! சற்று அருள்வாய்; பேரை
வாழ் பச்சை நாயகியே! 64

கும்பு - கூட்டம். **உற்றோர்** - துன்புற்றவர்களின். **பொன்** - திருமகள். **புந்தியுள்** - அறிவில். **நல் நுதல்** - அழகிய நெற்றியை உடையவளே, அண்மை விளி.

பால் மறைத்தே, சிறு சேய்க்கு நல்-
கா அன்னை பண்பு எனவே
ஏன் மறை ஆகமம் ஏத்து உன்
கருணை சற்று எண்ணுகிலாய்?
தான் மறைத்தாய்; ஒருவர்க்கு ஈயில்
எண் இலர்தாம் உய்வரே?
நான் மறை ஏத்தும் புகழ்ப் பேரை
வாழ் பச்சை நாயகியே! 65

**ஈயில்** - கொடுத்தால். **எண் இலர்** - கணக்கற்றவர், பலர்.

"அடியார் சிறந்தவரோ? தெய்வ-
மோ" என்னும் ஐயம், இந்தப்
படி ஆர் படியாரிடத்தினு-
மே சற்றும் பற்றல் இன்றிக்
குடியோடும் நின்தனப் பால் வெளி
ஆகில்; குலவும் மன்றில்
நடி ஆர்வன் தோயும் நங்காய்! பேரை
வாழ் பச்சை நாயகியே! 66

படி ஆர் - உலகில் உள்ள. **படியாரிடத்தினும்** - கற்காதவர்கள் - பாலும். **குடியோடும்** - அகன்றுவிடும். அம்மை அருள் யாராவது ஒருவரிடம் வெளிப்பட்டால் ஆண்டவனைவிட அடியாரே மேலானவர் என்பது உறுதியாகிவிடும் என்பது கருத்து. **நடி ஆர்வன்** - கூத்தாடும் விருப்பம் உள்ள சிவபிரான்.

"தம்மால் இயல்கை கரத்தல் நல்-
லோர்க்குத் தருமம் அன்று" என்று
அம்மா! பெரியர் புகன்றிடக்
கேட்டனன்; ஆதலினால்
மைம் மால் ஒத்து ஆடல் புரிய நிற்கு-
ஒப்பு இல் வரம் அளிக்க,
நம்மால் முற்றாது என்பையோ? பேரை
வாழ் பச்சை நாயகியே! 67

**மை மால் ஒத்து** - மேக நிறத்தை உடைய திருமாலைப் போல. **முற்றாது** - இயலாது.

நீப மலர்ப் புயத்தான் குஞ்-
சரமுகன் நேர் அருள்ச் சீர்த்
தாபதர் தம் குழுவூடு இருத்-
தற்குத் தகேன் எனினும்,
பாப உவர்ச் சுழிப் பட்டு உழ -
லும் கொடும் பாவி என்னை,
ஞாபகம் செய்தி - அன்னே! பேரை
வாழ் பச்சை நாயகியே! 68

**நீபம்** - கடம்பு. புயத்தான் என்றது முருகவேளை. **குஞ்சர முகன் நேர்** - யானை முகன் ஆகிய இவர்களைப் போல. **தாபதர்** - தவம்புரிவோர். **தகேன்** - தகுதியற்றவன். **உவர்ச்சுழி** - கடலில் தோன்றும் நீர்ச் சுழி. **ஞாபகம் செய்தி** - நினைவில் கொள்.

இழுது எரி உற்றென்ன நெஞ்சு உரு-
கி, துணர் இட்டு உவந்து,
பழுது அறு செந்தமிழால் உனைத்
தோத்திரம் பண்ணி, அன்பில்
தொழுதிலனேனும், நின் ஆலயத் -
தைச் சுற்றிலேன் எனினும்,
நழுவ விடேல் - அன்னையே! பேரை
வாழ் பச்சை நாயகியே! 69

**இழுது** - வெண்ணெய். **எரி** - தீ. **துணர்** - மலர்க்கொத்து, இங்கு பூக்கள்.

உள்ளத்தில் குற்றம் ஒரு கோடி
எய்தினும், உற்றுப் பெற்ற
பிள்ளைக்கும் தாய்க்கும் ஓர் பேதம் உண்-
டோ? பிழை அன்றி என்பால்
எள் அத்தனை நலம் இன்று; இன்று
மெய்ம்மை இசைத்தனன்; ஆல்.
நள்ளற்கு அருள்புரிவாய் - பேரை
வாழ் பச்சை நாயகியே! 70

**பேதம்** - மனமாற்றம். **ஆல்** - அசை. **நள்ளற்கு** - என்பால் நட்புக்கொள்ள, ஆட்கொள்ள என்பது கருத்து.

செம் மலராள் தொழும் தாய்! நின்
கருணைத் திருவுளத்தில்
சம்மதித்து, எத்தகு தண்டம் செய் -
தாலும் சகிப்பன் கண்டாய்;
மெய்ம் மருவும் பிணிக்கு ஔடதம்
ஈயின் வெறுப்பார் உண்டோ?
நம் மயல் போக்கத் திருப் பேரை
வாழ் பச்சை நாயகியே! 71

**செம்மலராள்** - திருமகள். **தண்டம்** - தண்டனை. **மெய்ம் மருவும்** - உடலில் ஏற்பட்டுள்ள. **மயல்** - மயக்கம்.

எவ்வாறு எனைப் புரிந்தாயினும்,
யாக்கை எனக்கு எனவே
செவ்வாரிசன் படையாது, நின்
தாமரைச் சேவடிக்கண்
ஒவ்வு ஆசுஇல் மெய்க்கதி ஈந்தனை
காப்பது இங்கு உன்பரம் காண்;
நவ்வு ஆகிய பதத்தாய்! பேரை
வாழ் பச்சை நாயகியே! 72

**யாக்கை** - உடல். **செவ்வாரிசன்** - செந்தாமரையில் வீற்றுள்ள பிரமன். **ஒவ்வு** - பொருந்துகின்ற. **ஆசு இல்** - குற்றமற்ற. **மெய்க்கதி** - நிலையான வீட்டுப்பேறு. **ஈந்தனை** - வழங்கி, முற்றெச்சம். **பரம்** - பொறுப்பு. **நவ்வு** - மரக்கலம்.

வினை வடிவு ஆகும் இக் காயத்துக்கு
எவ்இடர் மேவினும், யான்
நினை மறவா வரம் தந்து ஆள்;
உலக நிரயமிசை
எனை ஓர் கணம் விட்டிடேல்; சகி-
யேன்; இமையோர் மலரால்
நனை அருள்ச் சேவடியாய்; பேரை
வாழ் பச்சை நாயகியே! 73

**வினை வடிவு ஆகும் இக் காயத்துக்கு** - இருவினைகளின் விளைவாக ஏற்படுகின்ற இந்த உடலுக்கு. **இடர்** - துன்பம். **உலக நிரயமிசை** - உலகமாகிய நரகத்தில். **கணம்** - நொடி.

நலம் கிளர் மெய்த் தொண்டு அடியவர்
யாரும் நின்தாள் மலர்த்தாள்க்
கலம் கிடைத்து ஏறினர்; நான் ஏழை
ஞான மெய்க் கண் இழந்து,
சலம் கிளர் வல் வினைக் காயத்தை
மெய் எனத் தட்டழிந்து,
நலங்கினன் காண்; அன்னையே! பேரை
வாழ் பச்சை நாயகியே! 74

**கலம்** - மரக்கலம். மெய்ஞானக்கண் என மாறுக. சலம் வஞ்சனை மிகுந்த. **நலங்கினன்** - மெலிந்தேன்.

நீலமணிக் குன்றம் போல என்-
தாய் இங்கு நீ இருந்தும்,
சாலம் இயற்று பொய்த் தத்துவ
வேடர்கள் தம்மிடை யான்,
ஆல அராக் கௌவும் தேரை ஒத்து
எய்த்தனன்; ஆ! இதுதான்
ஞால வழக்கும் அன்றே? பேரை
வாழ் பச்சை நாயகியே! 75

**சாலம்** - ஏமாற்றுவித்தை. **ஆல அரா** - நச்சுப்பாம்பு. **ஞால வழக்கு** - உலகியல் நடைமுறை.

புல் ஆரும் மான் முதலாம் உயிர்
ஊன்கள் உள்போடு அகட்டுப்
பொல்லார் தலைக்கு இடிபோல் கவி
பாடி, நின் பொன் அடிக்கண்
வல்லார் பலருடனும் புகு -
மாறு உளம் வாஞ்சை கொண்டேன்;
நல்லாய்! சிறிது அருள்செய் - பேரை
வாழ் பச்சை நாயகியே! 76

**ஆரும்** - உண்கின்ற. **உயிர்** - இங்கு விலங்குகள். **ஊன்கள்** - மாமிசம். **அகட்டு** - வயிற்றினை உடைய. **வல்லார்** - தவ வலிமை உள்ளவர்கள்.

எத்தனை காலம் இன்னம் கழிந்
தாலும்,நின் ஈடுஇல் அருட்
சித்தம் இரங்கின் அல்லால் உய்யு
மாறு தெளிகிலன் யான்;
மெத்தருள்ச் சாகரம் நீ என் இத்
தோல்வியை வீட்டிடுவாய்-
நத்து அன்னையே! சிவையே! பேரை
வாழ் பச்சை நாயகியே! 77

**ஈடுஇல்** - இணையற்ற. **வீட்டிடுவாய்** - நீக்கிவிடுவாயாக.

தெய்வம் ஒன்று என்னத் தெளியா
அறிவு இலர் செப்பும் மொழி
மெய் வழக்கு ஆயில் நன்றே; ஒன்று
இளைத்துறின், வேறு அருள்ச்சீர்
செய்வதற்கு எய்திடும்; ஒன்று என்ற
சொல் சித்தித்திட்டு அலவோ
நைவு அளித்திட்டது இங்ஙன்? பேரை
வாழ் பச்சை நாயகியே! 78

**ஒன்று** - ஒன்றே எனத் தேற்றேகாரம் விரிக்க. **ஒன்று இளைத்துறின்** - ஒரு தெய்வம் வலுவிழந்து விட்டால். **வேறு** - வேறு ஒரு தெய்வம். **சித்தித்திட்டு அலவோ** - ஆழமாக உணர்ந்து அக்கருத்து கையகப்பட்டதனால் அல்லவா. **நைவு** - மெலிவு.

முத்துஆரக் கொங்கை மட மாதர்
வாஞ்சையுள் மூழ்குபு, வீண்
வித்தாரம் பேசி, வெளி வேடம்
காட்டி, மண் வித்தமிசைப்
பித்து ஆகி, வாடிடும் பேயேன் உன்
பாதம் பெறுவதுண்டோ?
நத்து ஆர் தடம் பணை சூழ் பேரை
வாழ் பச்சை நாயகியே! 79

**வாஞ்சை** - ஆசை. **வித்தாரம்** - ஆடம்பரமான பேச்சு. **வித்தமிசை** - செல்வத்தின்கண். **பித்து ஆகி** - பெருவிருப்புக்கொண்டு. **நத்து ஆர்** - சங்குகள் நிறைந்த. **தடம்** - இடம் அகன்ற. **பணை** - வயல்கள்.

மாமிச பிண்டங்களை ஆண் பெண்
என்ன மதித்து, மதன்
பூ மிசை பாயத் தளராது,
உனது அருள்ப் புண்டரிகப்-
பூ மிசை சூடப்புரி, நமன்
போற்றப் புகுவதற்கும்
நாம் இசை ஞான அருள்ப் பேரை
வாழ் பச்சை நாயகியே! 80

**மதன் பூ** - காமனின் மலர்க்கணைகள். **புண்டரிகப் பூ** - தாமரை போன்ற திருவடிகளை, உவம ஆகுபெயர். **மிசை** - தலையின்மேல். **நாம் இசை** - அஞ்சுகின்ற.

மனை மக்கள் வாழ்க்கை சதம் என்று
நம்பி, இம் மாநிலத்தில்
பனை ஒத்த துன்பப் படுவார்க-
ளோடு எண்ணப் பட்டு அவமே
வினையில்த் தவிக்க விட்டாயன்றி,
மெய்ச்சுக வேலையிடை
நனையச் செய்தாய் இலையே? பேரை
வாழ் பச்சை நாயகியே! 81

**சதம்** - நிலையானது. **அவமே** - வீணாக. **மெய்ச் சுகவேலை** - நிலையான இன்பமாகிய கடல்.

பைங்காசை மா மலர்மேனியி-
னான் உள்ப்பரிவு அமைந்த
தங்காய்! அம்மட்டினில் தங்காய்;
அவன் பணி சங்கரன்தன்
பங்காய்! அளவு அறும் பண்பாய் நின்
சீர்த்தி பகர அருள்-
நங்காய்! மறைக்கும் மறைபேரை
வாழ் பச்சை நாயகியே! 82

**பைங்காசை மா மலர்** - *பச்சை நிறமுள்ள காயாம்பூ.* **தங்காய்** - *1.தங்கையே 2. நின்றுவிடமாட்டாய். அவன் என்றது திருமாலை.* **பங்காய்** - பாகம் பெற்றவளே. **மறைக்கும் மறை** - வேதங்களாலும் உணர முடியாதவள் ஆகி.

''சோறு உதவாத் தெய்வம் பின்னே
மிக உயர் சொர்க்கம் எனும்
பேறு உதவுங்கொல்?'' என்று ஓதும்
பழமொழிப் பெற்றி நம்பி,
வீறு உறும் நம்பி விலகாமல்,
நெல் விளைவித்து நல்க
நாறு நட்டாய்கொல்? அம்மே! பேரை
வாழ் பச்சை நாயகியே! 83

***வீறு உறும்*** - *சிறப்பு மிக்க.* ***நம்பி*** - *சுந்தரமூர்த்தி நாயனார்.* ***நாறு*** - *நாற்று.*

''மாதா என்று அல்ல; பிதா, குரு,
தெய்வமும், மற்று அனைத்தும்
நீதான்'' என்று எண்ணி, நம்பும் தமி-
யேன்மிசை நெஞ்சு உவந்தே
ஏதாகினும் ஒரு பேறு அளித்-
தாய்இலை; ஏங்கவிட்டாய்;
நாதாந்தியே! முறையோ? பேரை
வாழ் பச்சை நாயகியே! 84

***நாதாந்தியே*** - *நாத தத்துவத்தையும் கடந்து நிற்பவளே.*

தேன் என்று உயர் செந்தமிழ் கொண்டு
உனைத் துதி செய்திடினும்,
ஏன் என்று கேள்வி முறை அற்று
இருந்திடில், எய்த்து அடியேன்
ஊன் என்று நின்று மடிவது அல்-
லால், உனது உண்மை கண்டு
நான் என்று கூடுவதோ? பேரை
வாழ் பச்சை நாயகியே! 85

**எய்த்து** - இளைத்து. **ஊன் என்று** - உணர்வற்ற வெறும் மாமிச பிண்டமாக.

பாலக் கனவு, எவ்வனக் கனவு
ஆகி, அப்பால் விருத்தக்
கோலக் கனவு எய்தியது; இனி
வேறு உடல் கூட்டிடவே
காலக் கனவு வரும்; வரும்-
முன் உன் கருணை வைத்து, இஞ்
ஞாலக் கனவு ஒழிப்பாய் - பேரை
வாழ் பச்சை நாயகியே! 86

**பாலக்கனவு** - குழவிப்பருவக் கற்பனைகள். **எவ்வன** - வாலிபப் பருவம். **விருத்த** - முதுமை. **கோல** - வடிவம். **கால** - இயமனின். **ஞாலக் கனவு** - உலக இன்பம் என்னும் சொப்பனம்.

வாடப் புரியும் மடவார்
வலைப்பட்டு, மண்ணொடு பொன்
தேடப் புரிகின்றிலை; அருள்
கொண்டு, நின் கீர்த்திகளைப்
பாடப் புரிந்தனை; என் மனத்து
உன்னைப் பகல் இரவு
நாடப் புரிந்தனை; ஆள் - பேரை
வாழ் பச்சை நாயகியே! 87

**வாடப் புரியும்** - வருத்தப்படவைக்கும். **ஆள்** - ஆட்கொள்வீராக.

மாடு ஆடு காடு மகற்கு ஈட்-
டிடும் அன்னைமார்களும் சேய்
தேடாது அழித்திடின், வற்புறுத் -
திப் புத்தி செப்பிடுவார்;
கூடா நெறிச் செலின், நீ கூவி,
நல்லருள்க் கூட்டிடவே
நாடாதிருப்பது என்னே? பேரை
வாழ் பச்சை நாயகியே! 88

**மாடு** - செல்வம், பொன்வெள்ளி மணி பணம் முதலியன. **ஆடு** - எல்லாவகையான விலங்குகளுக்கும் உபலட்சணம். **காடு** - வயல், தோட்டம், தோப்பு முதலிய விளை நிலங்களுக்கு உபலட்சணம்.

ஐயிடைப் பட்டு அயர் ஈப் போல,
வன் பவ ஆக்கை எனும்
பொய்யிடைப் பட்டுப் புழுங்குகின் -
றேன் வினை போக்கி, அன்பின்
கையிடைப்பட்ட மெய்த்தொண்டருள்
கூட்டக் கனிந்து அருளாய்-
நை இடைப் பட்டு உடையாய்! பேரை
வாழ் பச்சை நாயகியே! 89

**ஐயிடைப்பட்டு** - கோழையில் சிக்கி. **அயர்** - வருந்துகின்ற. **பவ ஆக்கை** - பிறவியால் வந்த உடம்பு. **பொய்யிடைப்பட்டு** - நிலையற்ற ஒன்றில் சிக்கி. **புழுங்குகின்றேன்** - மனம் கலங்குபவன் ஆகிய அடியேனின். **அன்பின் கையிடைப்பட்ட** - பத்திநெறியில் ஈடுபட்ட, **கை** - ஒழுக்கம். **நை இடை** - மெலிகின்ற இடுப்பில்.

ஊன் முகக் காயம் இதில் அமைந்-
தே, உணர்வு என்று அமைந்த
மேல்முகக் கண்கொண்டு, உனைப்பேணி,
சிற்சுக வேலையிடை
தான்முகந்து, ஆவிப் பயிர் தழைப்-
பக் கவிதான் பெயச் செய் -
நான்முகன் ஏத்தும் புகழ்ப் பேரை
வாழ் பச்சை நாயகியே! 90

**ஊன்முகக் காயம்** - மாமிசத்தை முதன்மையாக உடைய உடம்பு. **உணர்வு** - அநுபவ ஞானம். **மேல்முகக் கண்** - உயர்ந்த நிலை ஆகிய ஞான விழி. **சிற்சுக வேலை** - ஞானானந்தமயமாகிய கடல். **ஆவிப் பயிர்** - உயிராகிய தாவரங்கள்.

தசை ஆர் மெய் நான் என்று, அதற்கு இன்பம்
போல் துயர் தந்தது அன்றி,
இசை ஆன்ம நிச்சயம் தேர்கின் -
றிலேன்; மறையின் முடியின் -
மிசை தோய் நின் சேவடி காண்பது உண்-
டோ? பட்டி வித்தகனுள்
நசை தோய் அருள்வடிவோய்! பேரை
வாழ் பச்சை நாயகியே! 91

**தசை ஆர் மெய்** - மாமிசத்தால் ஆன உடல். **நான் என்று** - உயிர் ஆகிய ஆன்மா எனத் தவறாகக் கருதி. **ஆன்ம நிச்சயம்** - உயிரின் உண்மையான நிலை இன்னது என அறியும் அறிவு. **நசை தோய்** - விருப்பத்தை உண்டாக்குகின்ற.

நந்து ஓத நீர் உண்டு எழு கந்-
தரம் கண்முன் நண்ண மகிழ்
பைந்தோகை போல், உன் பொன் பாதாம்-
புயம் கண்முன் பார்த்து உலப்புஇல்
சந்தோட சாகரத்தில் மூழ்க,
என்று தயை புரிவாய்?
நம் தோடம் நீக்கும்படி பேரை
வாழ் பச்சை நாயகியே! 92

**நந்து ஓதம்** - சங்குகள் வாழ்கின்ற கடலின். **கந்தரம்** - மேகம். **பைந்தோகை** - மயில். **பாதாம்புயம்** - திருவடித்தாமரை. **உலப்பு இல்** - அழிவற்ற. **சந்தோட சாகரம்** - இன்பக்கடல். **தோடம்** - குற்றங்கள்.

பொன் மணி மார்பன்தன் அம்மணி-
யே! விடப் போனகம் கொள்
அல்மணி கண்டத்தன் உன் மணி-
யே! என் அகக் கமலத்து
ஒல் மணியே! எங்கள் கண்மணி-
யே! அருள் ஓம் மணியே!
நல் மணியே! அணியே! பேரை
வாழ் பச்சை நாயகியே! 93

**பொன்மணி மார்பன்** - திருமகளும் கௌத்துபம் என்னும் இரத்தினமும் இடம் பெற்றுள்ள மார்பை உடைய திருமால்.

**அம்மணியே** - தங்கையே, கொங்கு வட்டார வழக்கு. **விடப் போனகம்** - ஆலகால விடமாகிய உணவு. **அல்மணி** - கரிய இரத்தினம் போன்ற. **கண்டத்தன்** - கழுத்தை உடைய சிவபெருமான். **உன்** - எப்பொழுதும் நினைத்துக் கொண்டே இருக்கின்ற. **ஒல்** - பொருந்துகின்ற.

ஏது ஏது நான் சொல்லி ஏத்தினும்,
நீ இரங்காமல், இன்னம்
சூதே துவங்கினை; பாணித் -
திருந்திடில், சூழ்ந்து, அடியேன்
மீது ஏதும் செய்ய அறிகின்-
றிலேன்; அருள் வேலை எனும்
ஞாதேயம் ஆர் அன்னையே! பேரை
வாழ் பச்சை நாயகியே! 94

**ஏத்தினும்** - புகழ்ந்தாலும். **பாணித்திருந்திடில்** - தாமதம் செய்தாயெனில். **சூழ்ந்து** - ஆராய்ந்து. **மீது** - அதற்குமேல். **வேலை** - கடல். **ஞாதேயம் ஆர்** - (தாய் என்னும்) உறவு அமைந்த. வேலை என்னும் அன்னை, ஞாதேயம் ஆர் அன்னை எனத் தனித்தனி இயையும்.

மதிகொண்ட வேணியர் நீ உளத்து
ஊடல் மருவிடும் அத்
ததி, கொண்டு அணிந்திடு பூ, அடி-
யேன் சிரந்தன்னில் வைத்துக்
கதி கொண்ட வாழ்க்கைக் கதிகொண்-
டிட அருள் - காஞ்சிவள
நதி கொண்ட ஆதிபுரப் பேரை
வாழ் பச்சை நாயகியே! 95

**மதி** - பிறைச்சந்திரன். **வேணியர்** - சடையை உடைய சிவபிரான். **அத்ததி** - அப்போது. **பூ** - மலர் போன்ற திருவடி. **கதிகொண்ட** - விரைவாகக் கிடைத்த. **வாழ்க்கைக் கதி** - மனிதவாழ்வின் முடிந்த இலக்கு ஆகிய வீட்டுப்பேறு. **காஞ்சி** - நொய்யல்.

வானத்து அமையினும், மாநிர-
யத்தின் மருவினும், இத்
தானத்து அமையினும், புள் விலங்கு
ஆகித் தழைத்து இருண்ட

கானத்து அமையினும், ஓர் குறை
இன்று;உன் கழல்த்துணையே
நான் நத்து பத்தி அருள் - பேரை
வாழ் பச்சை நாயகியே! 96

**வானத்து** - சுவர்க்கத்தில். **மா** - கரிய. **நிரயத்து** - நரகத்தில். **இத்தானத்து** - இந்த நிலஉலகத்தில். **புள்** - பறவை. **கானத்து** - காட்டில். **நத்து** - விரும்புகின்ற.

புயல் நிகர்த்தே கவி கோடி பெய்து
ஊன் நுகர் புல்லர் தமக்கு
இயமன் ஒப்புஆய், அன்பர்க்கு அன்னை
ஒப்பு ஆகி இருந்து, விண்ணோர்
வியன் உறு பேர் அருள் ஆடல்கள்
செய்ய விரும்பும் என் கோள்
நயம் அல்லவோ? இசையாய் - பேரை
வாழ் பச்சை நாயகியே! 97

**புயல் நிகர்த்தே** - மேகத்தைப் போல. **ஊன் நுகர்** - புலாலை அருந்துகின்ற. **புல்லர்** - இழிந்தோர். **வியன்உறு** - வியக்கும்படி. **கோள்** - கொள்கை. **நயம்** - நல்லது. **இசையாய்** - இரட்டுற மொழிதலாகக் கூறியருள், என் கொள்கை நிறைவேறச் செய் என இருபொருளும் கொள்க.

"உன்றனை எவ்விதத்தும் கை
விடேன்" என்று உரைத்த நின் வாக்கு
ஒன்றனைக் குன்று இலக்காம் என்று
நம்பி, உறும் அடியேன்
என்றனைக் குன்ற அலைப்பது என்-
னே? எனக்கு எய்ப்பில் வைப்புஆம்
நன்று அனைத்தும் தருவான் பேரை
வாழ் பச்சை நாயகியே! 98

**எய்ப்பில் வைப்பு** - சேமநிதி. **தருவான்** - வழங்குவதற்காக.

ஆணிப் பொன்னே! பொன் புயத்தான்
பணியும் பொன் அம்புயத்தாள்
மாணிக்கமே! அருள் பொங்கு கண்
தெய்வ மலர்த் தருவே!

காணிக்கையாய் எனைத் தந்தேன்;
அருள்புரி - காமர் வண்டு
நாண் இக்கு அவிர் கரத்தாய்! பேரை
வாழ் பச்சை நாயகியே! 99

**பொன் புயத்தான்** - பொன்மலை ஆகிய மேருவை வில்லாகக் கொண்டுள்ள சிவபிரான். **பொன் அம்புயத்தாள்** - அழகிய தாமரைத்திருவடி. **தரு** - மரம். **காமர்** - அழகிய. **வண்டு நாண்** - மதுகரங்களை வில்லின் நாணாகக் கொண்டுள்ள. **இக்கு** - கரும்புவில்.

அன்னே! அடைக்கலம் செம்பவ -
ளக் குன்றதில் பொருந்தும்
தன் நேர் மரகதவல்லி!
அடைக்கலம்; சைல மன்னன்
மின்னே! அடைக்கலம்; நாயேன்
எனைக் கை விடாது, அருள்ஆர்
நல் நேயத் தொண்டரொடு ஆள் - பேரை
வாழ் பச்சை நாயகியே! 100

**தன் நேர்** - தனக்குத்தானே நிகரான, பிறர் இணை ஆகாத. **சைலமன்னன்** - மலை அரசன்.

அளித்தேன் உடல் பொருள் ஆவியை;
என்னை அருகு அமைய
விளித்தே, பிறப்பு இறப்பு என்று இயல்
மையல் விலகும் உண்மை
தெளித்து, ஏன்று கொண்டு, அருள்; நின் ஆணை
வேறு ஒரு திக்கும் இலேன்;
நளித் தேன் மலர்ப் பொழில் சூழ் பேரை
வாழ் பச்சை நாயகியே! 101

**விளித்தே** - அழைத்து. **மையல்** - மயக்கம், அறியாமை. **தெளித்து** - தெளிவாக உணர்த்தி. **ஏன்றுகொண்டு** - தொண்டனாக ஏற்றுக்கொண்டு. **நளி** - குளிர்ச்சியான.

## வாழ்த்து

வாழி நின் பேரருள்! வாழி மெய்த்
தொண்டர்கள்! வான் பொழிந்து
வாழி நற்பேரை! வளர் பட்டி -
லிங்க மகிழ்நனுடன் -
வாழி! என் உள்ளத்தில் நீங்காது,
பேரின்பம் மல்க, என்றும்
வாழி அருள்ப் பச்சை நாயகி
ஆகும் மரகதமே!

**மகிழ்நன்** - கணவன்.



# பச்சைநாயகி திருப்புகழ்

தானதன தத்த தானனத் தனதானா

சீலமறை மிக்க நாடி, அப் -
பாலன் என எய்த்து, உள் ஒயும் மெய்த்
தேவர், இசை பட்டிநாயகப் பெருமானார்
தேடி உள் இருத்தி நாடு பொற்பு
ஓவிய விளக்க ஞான மெய்த்
தீபம் எனஉற்ற காரணப் படிவோடே
பாலரின் மதித்து, வாரிசத்
தாள்கருது பத்தியாளரைப்
பாலனம் இயற்று உன்நீடுஅருள்த் தகைதானே
பாடி மகிழத் தயா விழித்
தூய அருள் கொட்டினாய்; உளப் -
பால் அமைய நத்து என் ஆவல்இட்டு அருள்வாயே-
சால அமிழ்து ஒத்த பாடலில்ப்
பேணும் நயம் மிக்க ஊரன்முன்ச்
சார் பொழுதில் இச்சை நாயகற்கு இசைவாய்நீள்
சாலிவயல்புக்க நீள் மலர்ப்
பாதம் இசைவுற்ற பேர் அருள்ச்
சாகர! அருள்ப் பராபரப் பெருவாழ்வே!
காலவன் ஒல் பட்டி கோமுனித்
தூயர் வழிபட்டு நாடகக்
காதல் நிறை அற்புதாகரத்து இசை பேரூர்
காமர் நிறை ஒப்பு இல் கோயிலில்க்
கூடி அருள் பச்சைநாயகிக்
காரண அருள்ச் சுகோதயப் பெரியாளே.

***சீலமறை*** - அறிவு நூலாகிய வேதங்கள். **மிக்கு நாடி** - மிகவும் ஆராய்ந்து. **அப்பாலன்** - தம் அறிவின் எல்லைக்கு அப்பாற்பட்டவன். **எய்த்து** - இளைத்து. **உள் ஒயும்** - மனம் தளரும். **பொற்பு** - அழகிய. **ஓவிய** - சித்திரம் போன்ற. அத்தன் மனத்து எழுதிய உயிரோவியம் என்பார் குமரகுருபரர். **காரணப் படிவு** - உலகத் தோற்றத்திற்கு மூலமாகிய உருவம். **பாலரின்** - உம் மக்களைப் போல. **பாலனம் இயற்று** - காக்கின்ற. ***தயாவிழி*** - கருணை பொழிகின்ற கண்கள். உம்மைப் புகழ்ந்து பாடும் வரம் அருளியுள்ளீர்; என் மனக்கோவிலுள்

என்றும் எழுந்தருள வேண்டும் என்பது வேண்டுகோள். **நத்து** - விரும்புகின்ற.

**சால** - மிக்க. **ஊரன்** - சுந்தரமூர்த்தி நாயனார். **சாலி** - நெல். **புக்க**-புகுந்த. **இசைவுற்ற** - பொருந்தியுள்ள. **ஒல்** - (பேரூரில்) வந்து பொருந்திய. **அற்புத ஆகரத்து** - இசை வியப்புக்களுக்கு இருப்பிடமாகப் பொருந்தியுள்ள. **காமர் நிறை** - அழகு மிக்க. **சுகோதய** - இன்பத்தைத் தோற்றுவிக்கின்ற.



# பட்டி விநாயகர் பதிகம்

*காப்பு வெண்பா*

பார் ஊர் புகழ்ப் பேரூர்ப் பட்டி விநாயக மெய்ப்
பேர் ஊர் தெய்வத் துதிப்பா பேசுதற்கு – நார் ஊர்
மனம் அகலாது ஓங்கும் இராமானந்த வள்ளல்
வனசமலர்ச் சேவடி காவல்

**பார் ஊர்** - உலகில் உள்ள எல்லா ஊர்மக்களும். **மெய்ப் பேர்** - உண்மையான புகழ். **ஊர்** - பரவியுள்ள. **நார் ஊர்** - அன்பு நிறைந்த.

*நூல்*

*(கட்டளைக் கலிப்பா)*

துதிக்கை மாமுகமும், திருக்கண்களும்,
சோதி மேனியும், சுந்தரக் கைகளும்,
மதிக்கை தீர் பதம் ஆதியும் என் சிறு
மனத்தினுள் மறவாது அருள் செய்குவாய் –
கதிக்கை கொண்டு, தன்னுள் படிவார்க்கு எலாம்
காஞ்சனம் கதிர் மாமணி ஈந்து, அயன்
விதிக்கை மாற்று அருட் காஞ்சியம் பேரையூர்
மேய பட்டி விநாயக மூர்த்தியே! 1

**மதிக்கை தீர் பதம்** - இவ்வளவு சிறப்பு வாய்ந்தது என அளவிட்டுக் கூறமுடியாதபடி பெருமை வாய்ந்த திருவடிகள். **ஆதியும்** - முதலியனவும். **கதிக்கை கொண்டு** - மிகுந்து. **படிவார்** - மூழ்குவோர். **காஞ்சனம்** - பொன். **கதிர்** - ஒளிமிக்க. **அயன்** - பிரமனின். **விதிக்கை** - ஊழ்வினையை. **மாற்று** - நீக்குகின்ற. **காஞ்சி** - நொய்யல்.

கரவு தோய் புன் புலன்வழித் தோன்று பொய்க்
காட்சியில் கலங்காது, உனை நாடியே
வரவு போக்கு அற்று அமைந்திடும் மெய்அருள்
வாரிமூழ்கிட வைப்பது என்று? ஓதுவாய்;
பரவும் அன்பர் பவக்கொடும் பாலையுள்
பட்டிடாமல் அப்பாலைக்கு அப்பால் உற
விரவு தானம் பொழிந்து அருள்ப் பேரையூர்
மேய பட்டி விநாயக மூர்த்தியே! 2

**கரவு தோய்** - வஞ்சகம் கொண்ட. **வரவு போக்கு** - பிறப்பு இறப்பு. **வாரி** - கடல். **பவம்** - தீவினை, பிறவி எனினும் ஆம். **தானம்** - யானை மதம்

நாரையூர் வரு நம்பிதன் பூசை போல்
நாயினேன் பணிகொண்டு, நின் ஞான மெய்ச்
சீரை ஊர்தொறும் சென்று சென்று ஏத்திடச்
செய்யில், இன்பம் திகழ்ந்து அவம் தீருமே;
காரை ஊர் மகவான் அயன் மால் முனோர்
கண்டு உவந்திடு காட்சிகொள் தெய்வமாய்
வீரை ஊர் புயல் ஊர்பொழில் பேரையூர்
மேய பட்டி விநாயக மூர்த்தியே! 3

*சீரை* - பெருமையை. **காரை ஊர் மகவான்** - மேகத்தை ஊர்தியாகச் செலுத்துகின்ற இந்திரன். **வீரை ஊர் புயல்** - கடலை உண்கின்ற மேகம். **ஊர்** - தவழ்கின்ற.

மாய வஞ்ச விழி மட மாதரை
வாவிப் பற்றிடும் மாநிலம் தோய்பதப்
பேயனேனைக் கணித்து அருள்செய்யில் உன்
பேரருள்க் கடல்ப்பேர் சிறப்பு எய்தும் ஆல்;
தூய தொண்டர் இடி நிகர்க்கும் துதி
சோத்திரம் கொள் சுரர்கள் ஐந்தாருவின்
வீஅகத்து உவப்பால் பொழி பேரையூர்
மேய பட்டி விநாயக மூர்த்தியே! 4

**வாவி** - தாவி. உண்மையான பேய்களின் கால்கள் நிலத்தைத் தீண்டா; எளியேனின் கால்கள் தீண்டுகின்றன; இதுவே வேறுபாடு என்பது குறிப்பு. **கணித்து** - நோக்கி. **சோத்திரம்** - காது. **ஐந்தாருவின்** - சந்தானம், அரி சந்தானம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம் என்னும் ஐவகைத் தெய்வீக மரங்கள், **வீ** - மலர்களை.

கண்இலாக் கவிபோல் உலகுஆம் இருள்க்
கானில் தாவிக் களைக்கும் என் நெஞ்சினைத்
தண் நிலாவு உன் பத அருள் வீட்டினில்
தங்கி இன்பம் தழைந்திட எண்ணுவாய் -
பண்ணில் ஆம் தமிழ்ப் பாடல் விண்டு ஏத்தும் மெய்ப்
பத்தர் நெஞ்சகப் பண்பில் குவிந்து, உயர்
விண்நிலாவும் சிகரிகொள் பேரையூர்
மேய பட்டி விநாயக மூர்த்தியே! 5

**கவி** - குரங்கு. **கானில்** - காட்டில். **தண்** - குளிர்ச்சி. **தழைந்திட** - செழித்திட. **பண்ணில் ஆம்** - இசையோடு இயைந்த. **சிகரி** - கோபுரம்.

நல் தவப் பெரியோர் புகழ் மெய்கண்ட
நாதன் உய்ய வெண்பா எண்பான் நான்கும் முன்
சொற்ற பேர் அருளோய்! அஞ்சல் என்று ஒரு
சொல் அளிக்கில் என் சோகம் முற்று ஓடுமே;
பற்று அறும் தவக் கோமுனி, காலவன்,
பட்டி மாமுனி, நாரதன் ஏத்து அருள்
வில் தழைத்து விளங்கு இயல் பேரையூர்
மேய பட்டி விநாயக மூர்த்தியே! 6

மெய்கண்ட தேவநாயனாரின் சிவஞான போதத்தில் சூர்ணிகையாக அமைந்துள்ள 84 வெண்பாக்களும் பொல்லாப்பிள்ளையாரால் அருளப்பட்டது என்பர். கோமுனி, காலவ முனி, பட்டி முனி, நாரதன் பேரூரில் வழிபட்டு நற்பேறு பெற்றவர்கள். **வில்** - ஒளி, இங்கு புகழ்.

சூகரத்து இழிவு ஆம் மல போகமே
துய்த்து, இகத்தில் சுழன்று, அயர்வேற்கு அருள்
மா கரம் பொருந்து உன் வடிவு ஈந்து, அவிர்
வான் உளோர் தொழ வைப்பது என்று? ஓதுவாய்;
மோகம் அற்ற பிருகுவின் நல் சுதை
மோகம் உற்று, அரக்கப் படிவு எய்திய
மேகவாகனற்கு இன்பு அருள் பேரையூர்
மேய பட்டி விநாயக மூர்த்தியே! 7

**சூகரத்து** - பன்றியைவிட. **அயர்வேற்கு** - தளர்கின்ற அடியேனுக்கு. மா-பெரிய. **கரம்** -இங்கு தும்பிக்கை. **வடிவு ஈந்து** - திருஉருவத்தைக் காட்டி, சாரூபம் அருளி எனினும் ஆம். **என்று** - எந்நாள். **சுதை** - மகள். **படிவு** - வடிவம். **மேகவாகனன்** - இந்திரன். பிருகு முனிவரின் மகளால் இந்திரன் அரக்க உருவம் பெற்ற செய்தி பேரூர்ப் புராணத்தில் முசுகுந்தன் முகம் பெறு படலத்துள் காணப்படுகிறது.

தந்தை தாய் மகவு என்று உழற்றும் சக
சாலம் மெய் எனத் தட்டழியாமல், என்
சிந்தையுள் குதிகொண்ட நின் ஞான மெய்ச்
சேவடித் துணை சென்னியில் சூட்டுவாய் -
பந்தை நேர் தன மாதர் அவாமுதல்
பற்று அறும் தவப் பண்பினர் வேட்கும் மண்
விந்தை கொண்டு விளங்கு அணிப் பேரையூர்
மேய பட்டி விநாயக மூர்த்தியே! 8

**மண்விந்தை கொண்டு** - தலப்பெருமை அமைந்து, தலத்தைக் கூறியதால் மூர்த்தி தீர்த்தப் பெருமைகள் உபலட்சணமாகக் கூறப்பட்டவாறு.

பாவ வெம் சுரத்தில் புக ஈர்க்கும் என்
பாழ் மனத்தை, நின் பாதத்து அமையவைத்து
ஓவம் என்று உடலம் திகழ் நிட்டையில்
ஓங்க வைக்குநர் உன் அலது உள்ளரோ?
ஆவல் நல்கி அலைக்கும் பிறதலத்து
அண்ணிடாது, அருளால் பிறவாநெறி
மேவ வம்மின் என்பால் எனும் பேரையூர்
மேய பட்டி விநாயக மூர்த்தியே! 9

*சுரம்* - *பாலைவன வழி.* **ஓவம்** - *சித்திரம்.* **அண்ணிடாது** - செல்லாமல்.

வாதிக்கும் வினையால் தளர்வேன் றனை
வாதிஒப்ப மதித்து அருள்வள்ளல்நீ
சோதிக்கும்படி எண்ணிடில் என் பெரும்
சோகம் மாற்றும் துணை எவர்? சொல்லுவாய்;
தாதுஇக்கு உந்து தடத்தில் வரால் மடி
தாக்கக் கன்றினைத் தம்உள் கருதுபு
மேதிக் கும்பு பெய் பால்நிறை பேரையூர்
மேய பட்டி விநாயக மூர்த்தியே! 10

வாதிக்கும் - துன்புறுத்துகின்ற. வாதி - எதிரி. இக்கு தாது உந்து தடம் என மாறுக, கரும்பு மகரந்தங்களை உதிர்க்கும் இடம் என்றவாறு. மேதிக்கும்பு - எருமைக் கூட்டம்.

ஒன்று அதே அருள்ப் பேரூர்; வழி அதற்கு
உம்பர் கீழ் திசை ஆறு எனும் மூலர்தம்
இன்தமிழ்ச் சொற்கு இலக்கியப் பேரையூர்
மேய பட்டி விநாயக மூர்த்தியைக்
கன்று அகத்துயர் தீர்சுகம் எய்திடக்
கந்தசாமி கனிவில் துதித்த பா
ஒன்று அகத்துடன் ஓதவல்லார் தமக்கு
ஓவு இல் இன்பம் உதவிடும்; உண்மையே. 11

இங்கு சுட்டப்படுவது "ஒன்றது பேரூர்; வழி ஆறு அதற்கு உள" எனத் தொடங்கும் *1558* ஆவது திருமந்திரப்பாடல். **கன்று** - வெதும்புகின்ற **அகத்துயர்** - உடலால் உண்டாகும் வருத்தம். **ஒன்று அகத்துடன்** - ஒன்றிய உள்ளத்தோடு. **ஓவு இல்** - நீங்காத.

# பட்டிப்பெருமான் பதிகம்

*(சந்தக் கலிவிருத்தம்)*

மதி கொண்டு அவிர் சடையும், சிவை மருவும் திரு உருவும்
கதி கொண்டு அமை தாளும், விழி கண்டு இன்புற வருவாய் -
விதி கொண்டு அமைதரும் எண்அறு வியன்ஆர் பதிக்கு எல்லாம்
பதி கொண்டு அமைதரு பேரை எம் பட்டிப் பெருமானே! 1

**மதி** - பிறை. **சிவை** - உமை. **கதிகொண்டு அமை** - அடைக்கலமாக ஏற்றுத் தன்பால் இறுத்திக் கொள்கின்ற. **விதி கொண்டு** - ஓர் ஊர் அமைய வேண்டிய முறைமைக்கு ஏற்ப. **எண் அறு** - கணக்கற்ற. **வியன் ஆர்** - பெருமை மிக்க. **பதி கொண்டு** - தலைமை பெற்று

வினையே திரள் உருவத்தினுள் வெம்பித் தளர்வேன் உன்
நனைவாரிசத் திருத்தாள்த் துணை நண்ணும் தினம் எதுவே?
பினைதீர் கதி தரல் காட்டிடு பிறவாப் புளி, இறவாப்
பனை மேவிய திருப்பேரை எம் பட்டிப் பெருமானே! 2

**நனை வாரிச** - தேன் நிறைந்த தாமரை போன்ற. **நண்ணும்** - பொருந்துகின்ற. **பினைதீர் கதி** - மறுபிறவி நீங்கிய வீட்டின்பம்.

வடு என்ற கண்கொடு நெஞ்சினை வடுவே புரிமடவார்
மடு என்றும் நல்கிடு துன்புஇருள் மடுவீழ்தரல் ஒழியாய் -
கடு ஒன்று அரவு, உடுவின் பதி, கடுக்கைத் துணர் அமையப் -
படு புன் சடையாய்! பேரை எம் பட்டிப் பெருமானே! 3

**வடு என்ற** - மா வடுவைப் போன்ற. **வடுவே புரி** - குற்றத்தையே செய்கின்ற. **மடு** - கடிதடம். **இருள்மடு** - அறியாமையாகிய குளம். **கடு**-நஞ்சு. **உடுவின் பதி** - விண்மீன்களுக்குத் தலைவன் ஆகிய சந்திரன், பிறை. **கடுக்கைத் துணர்** - கொன்றைமலர்க் கொத்து.

முதுமைத் திருமறை பற்பல முகம்கொண்டு உரைப்பஅருநின்
புதுமைப் புகழ் இடையீடு அறப் புகன்றே தொழப் புரியாய் -
விதுவில் திகழ் அன்னம் துயில் விண் மன்னவன் விழி நேர்
பதுமப் பணை பொலி பேரை எம் பட்டிப் பெருமானே! 4

**முதுமைத் திருமுறை** - பழமையான வேதங்கள். **உரைப்பரு** - கூறி முடிக்க முடியாத. புதுமைப் புகழ் என்றது அது நாளும் புதிது புதிதாகத் தோன்றிக் கொண்டேஇருப்பதால். **விதுவில் திகழ்** - சந்திரனைப் போல் வெண்மையான. **விண்மன்னவன் விழி** - இந்திரனின் கண். **பதுமப்**

**பணை** - தாமரை நிறைந்த வயல்கள். அன்னம் துயில் பதுமம், விழிநேர் பதுமம் எனத் தனித்தனி இயையும்.

**வியக்கும் திருஞானச் சுதை, மிளிரும் சிவைகளபக்**
**குயக்குன்று அணை புயக்குன்று அமை குழகா! என அன்பால்**
**நயக்கும் புலவர்க்கு ஐந்தரு நாட்டோர் பணிதரு சீர்**
**பயக்கும் திருவருள்ப் பேரை எம் பட்டிப் பெருமானே!** 5

**ஞானச்சுதை** - மெய்யறிவாகிய பால். **சிவை** - உமாதேவி. **குயக்குன்று**-நகில்களாகிய மலைகளை. **குழகா** - சிவபெருமானே. **ஐந்தரு நாட்டோர்** - கற்பக நாட்டுத் தேவர்கள். புலவர்க்கு என்புழி நான்கன் உருபு இரண்டன் பொருளில் வந்தது.

**அறவா! விட அரவம் புனை அப்பா! உனைக் கணமும்**
**மறவா வரம் ஒன்று அல்லது மற்று ஏதையும் வேண்டேன்;**
**பிறவாநெறி விழையாது இருள்ப் பிற ஆம் நெறியிடை வீழ்**
**பறவாதர்கள் அகல் பேரை எம் பட்டிப் பெருமானே!** 6

**அறவா** - தரும வடிவானரே. **இருள்** - அறியாமை ஆகிய. **பிற ஆம் நெறி** - வேறு வழிகள். **பறவாதர்** - பேராசைக்காரர்கள். **அகல்**-வந்து அடையாமல் விலகிச் செல்கின்ற.

**திரணம் புரை சிறியேன் ஒரு திக்கு ஏதும் இலேன்; உன்**
**சரணம் சரண் ஆனேன்; புறம் தள்ளாது அருள்; வள்ளால்!**
**கிரணம் பொலி நவமாமணிக் கிரிநேர் சிகரிகள் மைப்**
**பரணம் புனைதரு பேரை எம் பட்டிப் பெருமானே!** 7

**திரணம் புரை** - ஒரு துரும்பைப் போன்ற. **திக்கு** - கதி. **சரணம்** - திருவடி. **சரண்** - அடைக்கலம். **கிரணம்** - ஒளிக்கதிர். **மை** - மேகங்கள் ஆகிய. **பரணம்** - கவசம்.

**வஞ்சம் பொலி கொடு மாயை செய் வருத்தம், சிறு நாயேன்**
**நெஞ்சம் பொருந்திய பூரணன் நினக்கு ஓதுதல் மிகையே;**
**பஞ்சம் பெறு தருவில்ப் பரபஞ்சம் பெறும் ஆவிப்**
**பஞ்சம் கெடுத்து அருள்பேரை எம் பட்டிப் பெருமானே!** 8

**பூரணன்** - முழுமையானவர். **பஞ்சம் பெறு தருவில்** - ஐந்து என்னும் எண்ணிக்கையைப் பெற்ற கற்பகம் முதலிய மரங்களைப் போல. **பரபஞ்சம் பெறும்** - உலகமக்கள் பெறுகின்ற, ப்ரபஞ்சம், ஆகுபெயர். **ஆவிப் பஞ்சம்** - ஆன்மாக்களுக்கே உரிய இல்லாமை (வறுமை).

**கெடுத்தருள்** - போக்குகின்ற. தருவில் ஆவிப் பஞ்சம் கெடுத்தருள் என இயையும்.

துயரே தரும் வினை ஆர் உடல்ச் சுகமே விழைந்து உழல்வேன்
அயன்மால் அறிவு அரியாய்! நினை அடைந்து இன்பு உறுவேனோ?
பயமே நிகர் தகை கொண்டு எமபயம் நீத்து அருள் காஞ்சிப்
பயம் ஆர் ஒலி பொலி பேரை எம் பட்டிப் பெருமானே! 9

**பயமே நிகர் தகை** - அமுதத்தைப் போன்ற தன்மை. **காஞ்சி** - நொய்யல். **பயம் ஆர் ஒலி** - தண்ணீர் பாயும் ஓசை.

அரிதன் சுதர், இயமன் தொடர்பால் வாடும் என் ஆவிக்கு
உரிமைக் கதி நின்தாள் அலது உளதோ? அருள் உதவாய் -
விரியும் கலியினும் மிக்கு அருள் விரவிக் குறைவு இன்றிப்
பரிதித்தகை பெறு பேரை எம் பட்டிப் பெருமானே! 10

**அரிதன் சுதர்** - திருமாலின் மைந்தர்களாகிய பிரமனும், காமனும். **கலியினும்** - கலிகாலத்திலும். **பரிதித்தகை பெறு** - சூரியனின் தன்மையை பெற்று விளங்குகின்ற, ஒளிமிக்க அதாவது புகழ்நிறைந்த என்றபடி.

கரவு ஒன்று புன்புல வேடுவர் கைப்பட்டு அயர்வேனை
உரம் ஒன்று மெய்த் தொண்டு அன்பர்களோடு கூட்டினை ஆளாய் -
சரதத்தவர் ஏனோர்களும் தரிசித்திட மறுகில்
பரதம் பொலிதரு பேரை எம் பட்டிப் பெருமானே! 11

**கரவு ஒன்று** - வஞ்சகம் பொருந்திய. **உரம் ஒன்று** - மன உறுதி மிக்க. **கூட்டினை ஆளாய்** - சேர்த்து ஆட்கொள்ளுவீராக. **சரதத்தவர்** - மெய்யான தவசிகளும். **மறுகில்** - தெருவில்.

பீடு உந்து உமை தனம் போல், பசுப்பெறு கன்று அடிச் சுவடும்
கோடும் புனை குழகா! உனைக் கூடும்படி குறியாய் -
நீடும் புலிசையில் உற்று அருள்நிறை ஆளுடை நம்பி
பாடும் புகழ் பொலி பேரை எம் பட்டிப் பெருமானே! 12

**பீடுஉந்து** - பெருமை மிக்க. **பசுப்பெறு கன்று** - காமதேனுவின் கன்று. குழகன் கன்றின் குளம்புச் சுவடு ஏற்றது தல வரலாறு. **குறியாய்** - நியமிப்பீராக. **புலிசை** - சிதம்பரம். **ஆளுடை நம்பி** - சுந்தரமூர்த்தி நாயனார். இது தில்லைத் தேவாரத்தில் அவர், மீகொங்கில் அணி

காஞ்சிவாய்ப் பேரூரர் பெருமானைப் புலியூர்ச் சிற்றம்பலத்தே பெற்றாம் அன்றே என அருளிச் செய்ததை நினைந்து கூறியது.

இராமானந்தப் பெயர்ச் சற்குரு என வந்து, அருள் ஈந்து, இன்
பாமாலை கொண்டு அணி பேரை எம் பட்டிப் பெருமானைச்
சாம் ஆறு அறுத்து ஆளக் கந்தசாமிச் சுதன் துதிபா
ஆம் ஆதரத்து உரைப்பார் சிவன் அருளுக்கு உரியாரே. 13

**சாம் ஆறு** - இறப்பின் வழி. **துதி பா** - தோத்தரிக்கும் பாடல், வினைத்தொகை. **ஆம் ஆதரத்து** - அன்புடன்.



# திருப்பேரூர்ப் பதிகம்

**காப்பு வெண்பா**

பார் ஊர் அரசம்பலம் தோய் திருப்பேரூர்
ஏர் ஊர்தரும் காலவேச்சுரன் மெய்ச் - சீர்ஊர்
துதிப் பதிகம் நல்கத் துணை ஆம் அவன்தாள்
கதிப் பதி ஆகும் பங்கயம்.

**பார் ஊர்** - உலக மக்கள் வந்து கூடுகின்ற. **அரசம்பலம்** - பட்டீச்சுரர் கோவிலுக்கு வடபுறம் உள்ள சிவாலயம், காலவேச்சுரம். **ஏர் ஊர் தரும்** - அழகு மிக்க. **கதிப் பதி** - புகலிடமாகிய வீடு.

**நூல்**

***(எண்சீர் விருத்தம்)***

பரசு உகந்த திருக் கைகளும், பதும மலர்முகமும்,
பவள வரை நிகர் வடிவும், பாத மலர்த் துணையும்,
விரசு உகந்த அகிலாண்ட நாயகி தோய் இடமும்
விளங்கிட வந்தருள் கருணை விமலன் இடம் வினவில்
அரசு உகந்த அம்பலத்தில் ஆடல்புரிந்து, உயிர்கட்கு
ஆன முத்தி வாழ்வு அருளும் ஆரணம் ஆகமம் சால்
சிரசு உகந்த இசைப் பிறவாநெறி, நலம்சால் மேலச்
சிதம்பரம் என்று ஓங்கும் அணித் திருப்பேரை ஊரே. 1

*பரசு* - மழுவை. **உகந்த** - விரும்பி ஏற்ற. **வரை நிகர்** - மலையைப் போன்ற. **விரசு** - நெருங்கி இருத்தலை. **இடம்** - இடது பாகம். **ஆரணம்** - வேதம். ***சிரசு உகந்த*** - வேத ஆகமங்களின் உச்சியில் உள்ள, அவற்றின் மெய்ப்பொருள் ஆகிய. **இசை** - புகழ் மிக்க.

பிறப்பு இசை ஆர்உயிர்க்கு எல்லாம் பொதுத்தந்தை ஆகும்
பிரமன் இயற்று அரும்தவ மெய்ப் பெரும் பயன் என்று உதித்த
சிறப்பு இசையும் காலவ மாமுனிக்கு அருள் பேர் இன்பச்
சிவபெருமான் எம்பெருமான் சேரும் இடம் வினவில்
துறப்பு இசை மாதவப் பெரியோர் செங்கமலப் பாதத்
துணை அணையும் துகள் மணந்து, தோய்குநர்க்கு முத்தித்
திறப்பு இசையும் நலம் கூட்டும் மகிமை மலி மேலச்
சிதம்பரம் என்று ஓங்கும் அணித் திருப்பேரை ஊரே. 2

**பிறப்பு இசை** - பிறவி எடுத்துள்ள. காலவ முனிவர் வரலாறு பட்டிநாயக மாலையில் காண்க. **துறப்பு இசை** - துறவு நிலையை ஏற்றுள்ள. **தோய்குநர்க்கு** - தன்னுள் வசிப்பவர்களுக்கு. **முத்தித் திறப்பு** - பேரின்ப வீட்டின் வாயில் திறத்தல்.

வஞ்ச மகமாயை வலைப்பட்டு அயரும் ஆன்ம
வகை முழுதும் பெரும் கருணைத் தகைவிழியால் நோக்கி
அஞ்சலிர் என்று ஆண்டருள் சாந்நித்தியம் மிக்கு அமையும்
அகிலாண்ட நாயகி தோய் அமலன் இடம் வினவில்
மஞ்சு அணை பூஞ்சோலைமிசை அஞ்சுகம் ஏழ்இசை ஆர்
மறை கொள் சுகத்துறை அமைய, வானவருள் இறைவன்
செஞ்சரணப் பத்தி பெறத் தேக்கு புகழ் மேலச்
சிதம்பரம் என்று ஓங்கும் அணித் திருப்பேரை ஊரே. 3

**மக மாயை** - பெரிய மாயை, மகா என்பதன் குறுக்கல் விகாரம், மகமாயை களைந்திட வல்ல பிரான் என்பார் அனுபூதியுடையார். **அஞ்சலிர்** - பயப்படாதீர்கள். **சாந்நித்தியம்** - திருவருட் பொலிவு. **மஞ்சு அணை** - மேகங்கள் தவழ்கின்ற. **அஞ்சுகம்** - கிளிகள். **மறைகொள்** - (வேதியர்கள் ஓதக் கேட்பதாகிய) வேதத்தைக் கேட்டல் ஆகிய. **சுகத்துறை** - இன்ப நிலை. **வானவருள் இறைவன்** - தேவராசன், இந்திரன்.

மாலவனும் பிரமனும் முன் கோமுனி பட்டிமுனி
வடிவுடன் பேர் ஏற்று, இசைந்து, மாதவச் சீர் ஓங்கும்
காலவனோடு உற்று, உளம் மெய் கனிந்து, கரைந்து ஏத்தக்
காமர் நடக் காட்சி அருள் கடவுள் இடம் வினவில்
ஞால அநுபோகம் இசை தூலம் உறு கன்ம
நரர்களுக்கும், சுரர் வியக்கும் ஞான சுகானந்தச்
சீல அநுபூதி நிலைமேல் அமைக்கும் மேலச்
சிதம்பரம் என்று ஓங்கும் அணித் திருப் பேரை ஊரே. 4

**வடிவுடன் பேர்** - உருவமும் பெயரும். **காமர்** - அழகிய. வரலாறு பட்டிநாயக மாலையில். **ஞால அநுபோகம் இசை** - உலகியல் இன்பதுன்பங்களைத் துய்ப்பதற்கு ஏற்ற. **தூலம் உறு** - உடலைப் பெற்றுள்ள. **கன்ம நரர்கள்** - இருவினை வயப்பட்ட மனிதர்கள். உம்மை இழிவு சிறப்பு. **சுரர்** - தேவர்கள். **சுகானந்த** - இன்பமயம் ஆகிய, ஒருபொருட்பன்மொழி. ***சீல அநுபூதி*** - இயல்பான அநுபவம், சகச நிட்டை என்பதைப் போல.

கொங்கு அளவும் பூங்கோதை எங்கள் அம்மை தவ மெய்க்
கோலம் விழிகொடு நோக்கிச் சாலவும் உள் வியந்து,
பங்கு அளவும் மணக் காட்சி யாவரும் கண்டு ஏத்தப்
பரிந்து அருளால் புரிந்தருள் எம்பரமன் இடம் வினவில்
மங்களம் மிக்கு அமை தடத்தில் ஆடும் மடமாதர்
வதனம் விழிகளும் மலரும் வண்டும் ஐயம் காட்டிச்
செங்களபம் ஈண்டு உடல்பால் கலக்கும் மேலச்
சிதம்பரம் என்று ஓங்கும் அணித்திருப்பேரை ஊரே. 5

**கொங்கு அளவும்** - தேன் நிறைந்த. கௌரி தவமும் திருமணமும் தல புராண வரலாறு. **பங்கு அளவும்** - உடலின் இடப்பாகத்தில் பொருந்துகின்ற. **வதனம்** - முகம். **வதனம் விழி** : தாமரை வண்டு, நிரனிறை. **ஐயம் காட்டி** - இதுவோ அதுவோ என மயக்குவித்து. **செங்களபம் ஈண்டு** - வாசனைச் சாந்து பூசப்பெற்ற.

வம்பு இசையும் மலைமகள் மெய்த் தனத்தினுடன் கரம்சால்
வளைத் தழும்பும் கொண்டது என வானவர் ஆன்கன்றின்
கொம்பு இசையும் சுவட்டுடன் கால் குளப்பு அடியும் கொண்ட
கோல முடி பெற்ற அருட் குழகன் இடம் வினவில்
கம்பு இசையும் கந்தரத்தார் ஆடவர் பேரின்பக்
கடல் மூழ்கி, வெம் காமக் கனல் ஒழிக்கும் மகிமைத்
தெம்பு இசையும் மெய்ப் பிறவா நெறி இசைவு ஆர் மேலச்
சிதம்பரம் என்று ஓங்கும் அணித் திருப்பேரை ஊரே. 6

வம்பு - முலைக்கச்சு. நகில்த் தழும்பும் வளைத்தழும்பும் கொண்டது காஞ்சிபுரத்தில். **வானவர் ஆன்** - காமதேனுவின். **கோல முடி** - அழகியதலை. **கம்பு இசையும்** - சங்கினைப் போன்ற. **கந்தரத்தார்** - கழுத்தை உடைய மகளிரும். **வெம்** - கடுமையான. பேரூரின்கண் ஆடவரும் பெண்டிரும் பேரின்பத்தில் மூழ்கிச் சிற்றின்பத்தை முற்றிலும் மறந்து விடுவர் என்றவாறு.

மருந்து இசை பேர் இன்ப நறும் தமிழ்கொடு தோத்தரித்து
வணங்கு அடியார்தம் இருகண்வாய் அகத்தில் ஊட்டும்
விருந்து இசை மெய் அகிலாண்ட நாயகி தன் வலப்பால்
மிளிர் காலவேச்சுரப் பேர் விமலன் இடம் வினவில்
அரும்திசை விண் புகும்புகழ் நாரதன் மகதிவீணை
அமைதரு தந்திரிகள் மணந்து அழுந்து இலயம் ஆகித்
திருந்து இசையில் பொருந்து இசை சால் மகிமைமலி மேலச்
சிதம்பரம் என்று ஓங்கும் அணித் திருப்பேரை ஊரே. 7

**மருந்து இசை** - அமுதத்தைப் போன்ற. **இருகண்வாய்** - இரண்டு கண்களின் வழியாக. **அகத்தில்** - உள்ளத்தில். **திசை** - திக்குகளை உடைய நிலஉலகத்திலும். **விண்** - வானுலகிலும். **மகதி** - நாரதருடைய வீணையின் பெயர். **தந்திரிகள்** - நரம்புகள். **திருந்து இசை** - செப்பம் பெற்ற சங்கீதம். **இசை சால்** - புகழ் மிக்க.

**சீர் ஊரும் திருநாவலூராளி நயம்தோய்**
**செய்யுள் மணந்து இசை அடிகள், செய்யுள் மணந்து இசைய**
**நார் ஊரும் அம்மை மரகதத்துடன் போய் நாற்று**
**நட்டு, அவனுள் பேர் இன்பம் நட்டவன் ஊர்வினவில்**
**கார் ஊரும் அணி மாட மீதில் உலாக் காட்சி**
**கண்ட மடவார் கண் மனம் கொண்டருள மகிமைத்**
**தேர் ஊரும் வீதி நறும் புகை விண் இசை மேலச்**
**சிதம்பரம் என்று ஓங்கும் அணித் திருப்பேரை ஊரே.** 8

**திருநாவலூராளி** - சுந்தர மூர்த்தி நாயனாரின். **செய்யுள் மணந்து இசை** - தேவாரப் பாடலின் பக்திமணம் கொண்ட. **அடிகள்** - திருப்பாதங்கள். **செய்யுள்** - வயிலினிடத்து. **மணந்து இசைய** - மனம் ஒப்பிப் பொருந்தும்படி. **நார் ஊரும்** - அன்பு நிறைந்த. அவன் என்றது சுந்தரரை. **நட்டவன்** - ஏற்படுத்தியவர். **கார் ஊரும்** - மேகங்கள் திரிகின்ற. **கண்மனம்** - விழிகளையும் உள்ளத்தையும், உம்மைத் தொகை. **விண்இசை** - ஆகாயத்தில் பொருந்துகின்ற.

**கந்தனையும் ஒற்றை உற்ற தந்தனையும் அளித்து, எம்**
**கட்டம் ஒழித்து, அகத்து உவகைக் கடல் அளித்து, இங்கு இயற்றும்**
**வந்தனை ஏற்று, அகிலாண்ட நாயகியோடு அமையும்**
**மாண் அரசம்பலவாண வரதன் இடம் வினவில்**
**சந்தனமும், அகில் குறடும், பணியும், மணித்திரளும்,**
**தமனியமும் திரைக்கரத்தால் தடங்கரையில் ஒதுக்கும்**
**சிந்து அனைய அணிக் காஞ்சி நதிவளம்சால் மேலச்**
**சிதம்பரம் என்று ஓங்கும் அணித் திருப்பேரை ஊரே.** 9

**தந்தன்** - கொம்பை உடைய விநாயகர். **மாண்** - சிறப்பு மிக்க. **வரதன்**-அடியார் வேண்டும் வரங்களை அளிப்பவன். **குறடு** - மரக்கட்டை. **பணி** - பாம்பு. **தமனியம்** - பொன். **திரைக்கரம்** - அலைகள் ஆகிய கைகள். **சிந்து அனைய** - கடலைப் போன்ற. **அணி** - அழகிய.

கருத்து அமையும் சிவயோகக் கௌசிகனுள் கங்கைக்
காசிநகரத்தில் நடக் காட்சி அளித்து, அன்பின்
பொருத்தம் மிகத் தவம் புரியப் புரிந்து வரம் ஈந்த
புண்ணியன் செஞ்சடைகொள் பிறைக் கண்ணியன் ஊர் வினவில்
உருத் தரித்த சுரர் நீர் எம்மை ஒப்பீர் என்ன
உபதேசம் ஆற்றும் இயல் சுப தேசப் பொலிவுஆர்
திருத்தருக்கள் உதிப்பு இறப்பு அற்று அமை மகிமை மேலச்
சிதம்பரம் என்று ஓங்கும் அணித் திருப்பேரை ஊரே. 10

**கௌசிகனுள்** - விசுவாமித்திரரின் மனவெளியில். **பிறைக் கண்ணியன்** - பிறைமதியாகிய தலைமாலையை உடையவர். மாதர்ப் பிறைக் கண்ணியானை எனத் தொடங்கும் நான்காம் திருமுறை மூன்றாம் திருப்பதிகத்தின் பதினோரு பாடல்களிலும் அப்பர் பெருமான் இந்த உருவகத்தை ஆளுகிறார். **உரு தரித்த** - உடலைப் பெற்ற. **சுரர் நரர் நீர்** - தேவர் மனிதர் ஆகிய நீங்கள். **ஒப்பீர்** - இணை ஆக மாட்டீர்கள். **சுப தேச பொலிவு** - மங்களகரமான தலம் என்னும் அழகு. **திரு தருக்கள்** - (பிறவாப்புளி, இறவாப்பனை ஆகிய) தெய்வீக மரங்கள்.

பரவை விழிப் பரவை கொண்கன் இசை நய மாதுரியப்
பாக்கியம் மிக்கு ஏற்ற திருப் பாட்டு இசைப்பார்க்கு இருமை
வர வைபவ நலம் முழுதும் தேக்கு கருணைக் கண்
வரதன் அரசம்பலம் தோய் பரதன் இடம் வினவில்
அரவை எருக்கினை நகு வெண் தலையுடன் கொக்கு இறகை
அமரர்கள் என்பினைத் தோலை அணிகலனாக் கொளலில்
சிரவை உறு சிற்றடியேன் பாப் புனைவான் மேலச்
சிதம்பரம் என்று ஓங்கும் அணித் திருப்பேரை ஊரே. 11

**பரவை விழி** - கடலைப் போன்ற கண்களை உடைய. **பரவை கொண்கன்** - பரவை நாச்சியாரின் கணவராகிய சுந்தரர். **இசை** - பாடிய. **திருப்பாட்டு** - ஏழாம் திருமுறையைத் தேவாரம் என்பதோடு திருப்பாட்டு என்னும் சிறப்புப் பெயராலும் வழங்குவர். **வர வைபவ** - தெய்வ ஈகையால் கிடைக்கும் சிறப்பு ஆகிய. **பரதன்** - நடராசப்பெருமான். **பாப் புனைவான்** - பாடல்களை ஏற்று அணிந்து கொள்பவருக்கு உரிய.

# அரசம்பலவாணன் திருப்புகழ்

தனதந்தன தானதானன                                        தனதானா

பயன்ஒன்றும் இலாது மாயை செய் -
திடுதுன்ப விநோத வாழ்விடை
படிகின்ற பொய் வீணரோடு உறவு        அமையாதே,
படியின்புடை தோயும் மானிட
செனர், அம் தரு நீழல் மேவினர்,
பணிதங்கு உலகோர்கள் ஆவல்செய்        திடுசீர்சால்
வியன் ஒன்றியதாம் இதால் இதம்
அகிதம் தொடராது தோய் இரு
வினையும் சமம் ஆகியே மல        வகை தேய்வான்
விரிஇன்பு அருள் மேவலே புரி
செயல் என்றவர் ஓதும் வாய்மையின்
விதிகொண்டு உனையே பராவிட        அருள்கூர்வாய்-
நயன் ஒன்றிய போதன் ஆர் அருள்
சுதன் அன்பொடு அநேக நாள் புரி
நலம் மிஞ்சிய பூசையே கொடு, உள்        மகிழ்வாய்,நீள்
நயனங்கள் அறாமலே பொழி
புனல் முங்கு அபிடேகம் ஆடுபு
நடனம் தெரிவான் மெஞ்ஞான உள்        விழி ஈவாய்!
அயன் ஒன்று ஒருகாலும் ஏழையேன்
முடிஇங்கு எழுதாதவாறு இனிது
அருள் மங்களம் ஈயுமாறு எதிர்        குருஆவாய்!
அணி தங்கிய பேரையூரினில்
இசை மிஞ்சிய காலவேசுர!
அரசம்பல வாணனே! சிவ        பெருமானே!

**படிகின்ற** - மூழ்குகின்ற. **படியின்புடை** - உலகத்தில். **செனர்** - மக்கள். **அம்** - அழகிய. **தரு நீழல் மேவினர்** - கற்பக நாட்டுத் தேவர்கள். **பணி தங்கு உலகோர்கள்** - பாம்புகள் வசிக்கும் பாதாள வாசிகள். **வியன்** - பெருமை. இதால் என்றது இறைபணியை. **இதம் அகிதம்** - நன்மை தீமை. **இருவினையும் சமம் ஆகியே** - இருவினையொப்பு. **மலவகை தேய்வான்** - மலபரிபாகம் பெற. **பராவிட** - புகழ. **போதன்** - பிரமன். **சுதன்** - மகன், காலவன். **நயனங்கள்** - கண்கள். **முங்கு** - மூழ்கும். **ஆடுபு** - ஆடி. **தெரிவான்** - கண்களில் தெரிவதற்காக. **ஞான உள் விழி** - மனத்தில் அமைந்த மெய்யறிவுக்கண். **முடி** - தலையில். **இசை மிஞ்சிய** - புகழ் மிகுந்த.

# நடராசர் பதிகம்

**காப்பு வெண்பா**

பேரூர் நடராஜப் பெம்மான் உவப்பொடு அணி
சீர் ஊர் துதிப் பதிகம் செப்புதற்கு - நார்ஊர்
மனப் பிரகாசத்து அன்பர் வாரிசப் பூ மானும்
வனப் பிரசத் தாள்த் துகள் காவல்.

**உவப்பொடு** - விருப்பத்துடன். **மனப் பிரகாசத்து** - உள்ளத்தின் ஒளியை அஃதாவது பக்தியை உடைய. **வாரிசப் பூ மானும்** - தாமரை போன்ற. **வன** - அழகிய. **பிரச** - தேன் நிறைந்த, வன பிரச வாரிசப்பூ மானும் தாள் என இயையும். **தாள்த் துகள்** - அடிப்பொடி, பாத தூளி.

**நூல்**

***(எண்சீர் விருத்தம்)***

திங்கள் அணிச் செஞ்சடையும், முக்கண்ணும், தவளத்
திருநீறு மலி பவளத் திருமேனிப் பொலிவும்,
மங்களப் பேர் அருள் முறுவல்ச் செவ்வாயும், கரமும்,
வாரிசத் தாள்த் துணை மலரும் வயங்க அணிகுலவும்
பைங்களபக் குரும்பை முலைப் பார்வதி வாமத்தில்
பரிவின் அமைந்துற இடபப் பரிமிசை வந்து அருள்வாய் -
நங்கள் அவா நிறை காஞ்சி நதி வளம்சால் பேரூர்
நயந்த வெள்ளிமன்றில் இசை நடராஜ மணியே! 1

**தவள** - வெண்மையான. **கரமும்** - கைகளும், சாதியொருமை. **பைம் களப** - பசிய வாசனைச் சாந்து பூசப்பெற்ற. **வாமத்தில்** - இடப்பாதியில். **பரிவின்** - அன்போடு. **இடபப்பரி** - விடை வாகனம். **நங்கள்** - நம்முடைய. **அவா நிறை** - ஆசைகளை நிறைவிக்கும் அதாவது தேவைகளைப் பூர்த்தி செய்யும்.

பித்துஇயலும் உலகியலில் பெற்றவர், தம் மைந்தர்
பெற்றியின் இன்மொழி செயல்கள் பேசி உணர்த்திடல் போல்,
சத்திகளாய் நிலைதோறும் விளங்கி, முயக்குவித்து,
சத்தன் எனப் புரிந்து, வினைத் தடைகள் அறப் போக்கி,
சித்திகளாய் அவிர்ந்து, அவர்பால் கூட்டி, இன்ப ஞான
சித்தன் எனச் செய்து, மருள்ச் செயல்கள் அறுத்து, அப்பால்
நத்தி அணைவித்து, மலம் கெடுத்து, அருளப் பேரூர்
நயந்த வெள்ளி மன்றில் இசை நடராச மணியே! 2

**மைந்தர் பெற்றியின்** - மக்கள் மாட்டு. **நிலைதோறும்** - (இறைவன் ஆகிய தன்) நவந்தரு பேத நிலை ஒவ்வொன்றிலும். **சத்திகளாய்** - சக்தி பேதங்கள் ஒன்பதாக நிலைபெற்று. **முயக்குவித்து** - சத்திகளின் செயல்களை நுகரவைத்து. **சத்தன்** - சத்தியை உடையவன் அதாவது அதன் தாக்கத்தைப் பெற்றவன். **சித்திகள்** - அட்டமா சித்திகள் முதலியன. அவர் என்றது வினைத் தடைகள் அறப் பெற்றோரை. **சித்தன்** - சித்திகள் கைவரப் பெற்றவன். **மருள்ச் செயல்கள்** - அறிவை மயக்கும் காரியங்கள். **அப்பால்** - (இவ்வாறு இருவினையொப்பு. மலபரிபாகம் ஏற்பட்ட) பிறகு. **மலம் கெடுவித்து** - ஆணவத்தைச் செயலிழக்கச் செய்து. **அருள** - வீட்டின்பத்தை வழங்க. இதனால் இறைவனின் திருக்கூத்து என்பது கேவல நிலையில் உள்ள ஆன்மாவைச் சகல நிலைக்கு ஆளாக்கி, இறுதியில் மோட்சம் கொடுப்பதன் குறியீடே என்பது விளக்கப்படுகிறது.

இச் செய்யுளில் விளி மட்டும் உள்ளது. எளியேனை ஆட்கொள்ள வேண்டும் என்னும் விண்ணப்பத்தை அவாய் நிலையால் பெற்றாம்.

காலவனும், கோமுனியும், பட்டி முனிவனும் முன்
கண்டு பரமானந்தக் கடலினிடை மூழ்கும்
சீல அநுபூதி நிலைபெற்று அமையப் புரிநின்
திருநடம் நான்கண்டு உவக்கச் செய்வது எந்நாள்? செப்பாய்;
சால அநுகூலம் இசைத்து உயிர்களைக் காத்திட, உள்
தழைத்த அநுசூத உருச் சமைந்துறும் தற்பரனே
ஞால அநுபவத்தினர்க்கும் கதி அருளப் பேரூர்
நயந்த வெள்ளி மன்றில் இசை நடராச மணியே! 3

**சீல அநுபூதி** - ஞானமயமான இறையநுபவம். **சால** - மிகுந்த. **அநுகூலம் இசைந்து** - உதவிகளைச் செய்து. **உள் தழைத்த** - உள்ளத்தின்கண் விளங்குகின்ற. **அநுசூத உரு சமைந்துறும்** - எப்பொழுதும் பிரியாத வடிவத்தை அமைத்துக் கொண்டு விளங்கும். **தற்பரனே** - பரம்பொருளே. **ஞால அநுபவத்தினர்க்கும்** - (புலன்களையும் மனத்தையும் கடந்த ஞானாநுபூதி வாய்த்த தவசிகளுக்கு மட்டும் அல்லாமல்) உலகியல் நிலையில் தேவரீரைத் தரிசித்து ஐம்பொறிகளால் துய்க்கப்படும் நலங்களைப் பெறும் இளம்பருவ அடியார்களுக்கும், உம்மை இழிவு சிறப்பு.

அனக மறைமுதல் கலைகள் அளந்து தளர்ந்து, அறியா
அகண்ட பரிபூரணன் நீ ஆகினும், அன்பு அடியார்
மனம் நிலைத்த பத்திமை கண்டு, எளிது அருளும் கருணை
வள்ளல் எனும் பெரியோர் சொல் வாய்மையை யான் உணரக்

கனவில் ஒருகால் அளித்த காட்சி, கன்மம் மாயை
கருவி கரணங்கள் எலாம் கரைந்து, இருள் போய் ஒழிய
நனவில் ஒரு கால் காண நல்கிடுவாய் - பேரூர்
நயத்த வெள்ளி மன்றில் இசை நடராச மணியே! 4

**அனக மறை** - குற்றமற்ற வேதங்கள். **அளந்து** - ஆராய்ந்து. **காட்சி** - காட்சியை, இது சுவாமிகளின் சொந்த அநுபவம். **கன்மம்** - இருவினைகள். **மாயை** - மாயாமலம். **கருவி கரணங்கள்** - ஐம்பொறிகளும் அந்தக்கரணங்களும். **கரைந்து** - மறைந்து. **இருள்** - ஆணவ மலம். கனவில் வழங்கிய தரிசனத்தை ஊனக் கண் காண நனவிலும் தந்தருள வேண்டும் என்றவாறு.

அவகாம அல்லினிடை தலைகால் காணாதே
அங்கனையார் உடல்ப் போகத்து அழுத்தும் வினை அற மெய்த்,
தவகாம வல்இயல்ச்சீர் தாங்கி நின்றேன் உனது
தரிசனம் கண்டு ஆனந்த சாகரத்தின் மூழ்கச்
சிவகாமவல்லி அருள் ஞானாநுபூதிச்
சிறப்பு அமையக் கடைக்கண் அருள் செலுத்திடுதல் வேண்டும்-
நவகாம வல்லி படர் தருவில் உயர் பேரூர்
நயத்த வெள்ளிமன்றில் இசை நடராச மணியே! 5

**அவ** - தீமை பயக்கின்ற. **காம அல்லினிடை** - காமமாகிய இருளில். **அங்கனையார்** - மகளிர். **போகத்து** - துய்ப்பில். **காம** - விருப்பம் மிக்க. **வல் இயல் சீர்** - வைராக்கியத்தை. **நின்றேன்** - நின்றவன் ஆகி, முற்றெச்சம். **சாகரம்** - கடல். **நவ** - புதிய. **காமவல்லி படர் தருவில்** - காமவல்லி என்னும் கொடியால் சுற்றப்பட்டுள்ள கற்பக மரத்தைப் போல. **உயர்** - வள்ளன்மையில் சிறந்த.

வான் ஆகி, வளிஆகி, அனல் ஆகி, நீர் ஆய்,
மண் ஆகி, உயிர் ஆகி, மதி ஆகி, கதிர் ஆய்,
மான் ஆகி, மோகினி ஆய், விந்துவுடன் கலை ஆய்
வன்னம் இசை பதம் ஆகி, மந்திரம் ஆய், வினை தோய்
ஊன் ஆகும், உடல் ஆகி, உலகு ஆகிப், பொறி ஆய்,
உணர்வு ஆகி, இருள் ஆகி, ஒளி ஆகி, பிற ஆய்
நான்ஆகி நின்றநிலை உணர்த்திடுவாய் - பேரூர்
நயத்த வெள்ளி மன்றில் இசை நடராச மணியே! 6

**வளி** - காற்று. **அனல்** - தீ. **மதி** - சந்திரன். **கதிர்** - சூரியன். இதுவரையில் கூறப்பட்டது இறைவனின் அட்டமூர்த்தம். **மான்** - மகத் தத்துவம், இது புத்தி என்றும் வழங்கப்படும். **மோகினி** - அசுத்த மாயை, இது

தூல உடம்புக்கு முதற்காரணம். **விந்து** - சுத்தமாயை. **கலை** - வித்தியா தத்துவங்கள் ஏழில் ஒன்று, இது ஆணவ மலத்தின் வலிமையைச் சற்றுக் குறைக்கும். வன்னம் இசை பதம் - எழுத்தும் அவற்றால் ஆன சொல்லும். **மந்திரம்** - ஆறு அத்துவாக்களுள் ஒன்று, தன்னை நினைப்பவரைக் காக்கும் மறைமொழி. **ஊன்** - மாமிசம். **பொறி** - ஐம்புலன்கள். **இருள்** - அறியாமை, தனுகரண புவன போகங்கள் அற்ற ஆன்ம நிலை. **ஒளி** - மெய்யறிவு, முத்தி நிலை. **பிற** - கூறப்பட்டனவற்றைத் தவிர வேறுபொருள்களும். **நான்** - இப்பிறவியில் உள்ள அடியேன், முன்சொன்ன உயிர் பொதுவாக ஆன்மா, இது இப்போதைய நிலை. இதில் கூறப்பட்டுள்ள தத்துவங்களின் விளக்கத்தை விரிந்த சாத்திரங்களில் காண்க.

பூட்டிய ஐம்புலம் பொதி பொய்க்கூட்டு இயல் வன்சிறையுள்
　　புழுங்கிடும்என் உளம் களிப்பப் பொங்கும் இசை மதுரப்
பாட்டுஇயல் சேர்திரு நாவலூர்க் கோமான், அன்பில்
　　பார்த்து உவந்து, திருத் தில்லைப்பதி மறையோர் தேர,
வீட்டு இயலப் புரியும் நலம் நாட்டிய நாட்டியச் சீர்
　　விதந்து, உளத்து அற்புதம் திகழ, விரி, காஞ்சிக் கொங்கு
நாட்டு இயல் மாது அவிர் வதனத் திலகம் எனும் பேரூர்
　　நயந்த வெள்ளி மன்றில் இசை நடராச மணியே! 7

**பூட்டிய** - கட்டிவைத்த. வன் சிறை என்றது உடலை. வீட்டு இயலப் புரியும் நலம் நாட்டிய நாட்டியம் - உயிர்களுக்கு முத்தியையருளும் நன்மையைக் காட்டுகின்ற ஆனந்த நடனம், ஆறாம் பாடலும் உரையும் காண்க. **கொங்கு நாட்டு இயல் மாது** - கொங்கு நாடாகக் கூறப்படுகின்ற பெண்ணின். **வதனம்** - முகம், இங்கு நெற்றி. **திலகம்**-பொட்டு.

விள் இருக்கு முடிகள் எலாம் உரைத்திடும், சொல் அற்று
　　விம்மி அடங்கிடும் மௌன வெளி வருமேல், வெளி ஆய்
எள் இருக்கும் இடம்முழுதும் ஏற்று அமைநெய் போல
　　இயல் பரிபூரண அருட் பேர் இறையே! பொய்மாலைச்
சள்இருக்கும் மனக்கொடியேன் உள் இருக்கும் உயிர்க்குள்
　　சார் உயிராய் நின்றிடும் நின்தயை அறிவேன் கொல்லோ?
நள் இருக்கும் திரு அருள்க் கண் நல்கிடுவாய் – பேரூர்
　　நயத்த வெள்ளிமன்றில் இசை நடராச மணியே! 8

**விள்** - சொல்லப்படுகின்ற. **இருக்கு முடிகள்** - மறைகளின் முடிபுகள், வேதாந்தம். **வெளி ஆய்** - வெளிப்பட்டு, காட்சியளித்து. **சள்**

**இருக்கும்** - சிக்கல்களில் மாட்டியுள்ள. **நள் இருக்கும்** - நட்பு உடைய, இங்கு கருணை மிக்க.

வான் அறிய எட்டாத முடியினை, பாதலத்தின்
வரம்பு அறியா வரம் பொலி தாள் வாரிசத்தை, அயன்மால்
தான் அறியத் துவக்கி, எண் இல் ஆண்டு அறிந்து ஆண்டு அறிந்த
தானம் அன்றி அறியாமலத் தளர்ந்து, அயர்ந்தார் என்னில்
தேன் நறிய மலர்க் கூந்தல் சிவகாம வல்லிச்
செல்வி கடைக்கண் நோக்கத் திருவருளால் அன்றி
நான் அறிய மாட்டுவனோ? உளம் இரங்காய் - பேரூர்
நயத்த வெள்ளி மன்றில் இசை நடராச மணியே! 9

**வரம்பு** - எல்லை. **வரம் பொலி** - ஈகை மிக்க. **வாரிசம்** - தாமரை. திருமாலும் பிரமனும் அடிமுடி தேடிய வரலாறு வெளிப்படை. **எண் இல் ஆண்டு** - கணக்கற்ற வருடங்கள். **அறிந்து** - தேடி. **ஆண்டு** - அப்போது, அங்கு எனினும் ஆம். **தானம்** - இடம். **நறிய** - நறுமணம் மிக்க.

புலம் காணப் புரிந்து, உடல்க்கண் பொருந்தி, அழிபுவன
போக வகைகளைக் காணப் புகுத்து, அவைதோய் துன்பக்
குலம் காணப் புரிந்து, அவற்றைக் கடக்கும்வழி காணக்
கூட்டாத மனமாயைக் கோரணிக் கூத்து அறும் மெய்ப்
பலம் காணப் புரிந்த தவப்பெரியர் உளம்கவர்ந்து அப்-
பால் அமைக்கும் திருநடனப் பரசுக ஆனந்த
நலம் காணப் புரிதர உள் நாடிடுவாய் - பேரூர்
நயந்த வெள்ளி மன்றில் இசை நடராச மணியே! 10

**புலம் காணப் புரிந்து** - (கேவல நிலையில் இருக்கும்போது) அறிவிக்க அறியும் ஆற்றலை அளித்து. **அழி** - நிலையற்று அழியும் தன்மையுள்ள. **குலம்** - கூட்டம். **கோரணிக் கூத்து** - கேலிக்கூத்து. **பலம்** - பயன். **அப்பால்** - முத்தி.

# நடராசர் தோத்திரம்

*(இரட்டையாசிரிய விருத்தம்)*

உப்பு இட்ட பாண்டமதை ஒப்பிட்ட மாயஉடல்
ஓகோ! வருங்கணத்தில்
உலவுமோ உலவுமோ உணர்கிலேம் என்று அன்பர்
உளம் உருகி நெக்கு நெக்கு
துப்பிட்ட நின்அருள்க் கடல் மூழ்கியே சுக
சொரூபம் ஆகினர்கள்; வினையேன்
தொல்லை வாழ்க்கையினை நச்சியே வீண்நாட்களைத்
தொலைத்துளேன்; உய்வது என்றோ?
ஒப்பிட்டு உரைப்பதற்கு ஒருபொருள் இலாமலே
உறு தூல சூக்குமத்தும்
ஒன்று அண்ட நிரைமுழுதும் ஒளிகுலவியே தொண்டர்
உடல் உயிர் எலாம் கவர்ந்து, உள்
வைப்பு இட்ட சேமநிதியாய், மாயை இருள்சிறிதும்
மருவுறாது, இன்ப மயம் ஆர்
மறைமுடியின் மேவுமணி! அணிகுலவு பேரை மணி!
மகிமை நடராஜ மணியே! 1

**உப்பு இட்ட பாண்டமதை ஒப்பிட்ட** - உப்பை வைத்திருந்த மண் சட்டிக்கு நிகரான. **வரும் கணத்தில்** - அடுத்த நொடியில். உலவுமோ - 1. நடமாடுமோ, 2. அழிந்துவிடுமோ. துப்பிட்ட - துணையான. **சுக சொரூபம்** - இன்ப வடிவம். **நச்சி** - விரும்பி. **தூல சூக்குமத்தும்** - பரு, நுண்பொருள்களிலும். **அண்ட நிரை** - அண்டங்களின் வரிசை. **வைப்பு** - சேமித்து வைத்தற்கு உரிய. **இட்ட** - விரும்பப்படுகின்ற.

கேவலத் தொடு சகல வாதனைப் பட்டு அருள்க்
கிரணம் மலி சுத்த நிலையம்
கிடையாது தத்தளித்திடும் நாயினேற்கு நின்
கிருபை பெறும் மெய் அடியரை
ஆவல் உள்ப் பெற்றபடி கூட்டி வைத்திட்ட அவ்
அன்பினொடு ஞானம் என்னும்
அரும் துணைவரைத்தந்து காத்தருள்தி; வேறு ஒன்றை
அருள் சிரமம் நிற்கு ஈந்திலேன்;

காவகத்து உறும் அமரர், சித்தர்கள், இயக்கர் இயல்
கந்தருவர் இசைபாடியே
கடிமலர்த் திரள்மாரி பொழிய நல்த் திருவீதி
கவின்மங்களம் பொருந்தி
வாவல் அற்று அமை மனப் பரம யோகத்தர்
வாழ்த்த மெய்த் திருநடம் செய்
மறைமுடியின் மேவுமணி! அணிகுலவு பேரைமணி!
மகிமை நடராஜ மணியே! 2

**கேவலம்** - ஆன்மா ஆணவ மலத்தோடு கூடி இருக்கும் நிலை. **சகலம்** - அவ்வுயிர் தனுகரணபுவன போகங்களோடு கூடி இருக்கும் உலகியல் நிலை. **கிரணம் மலி** - ஒளி நிறைந்த. **சுத்த நிலையம்** - மாசற்ற வீடு. **காவகத்து** - தேவலோகத்தில். **கடி** - நறுமணம் மிக்க. வாவல் அற்று (குரங்கு போல) தாவுகின்ற தன்மையை நீத்து. **அமை** - அமைதியாக அடங்கியுள்ள.

வெண்திரைக் கங்கையொடு கொன்றை தாதகி கொள்நறு
வேரிபொங்கித் துளிப்ப
விது ஒஞ்சும் வாள்முகத்திடை ஒன்று புன்னகை
விளங்க மதியால் எழுந்த
தெண்திரையின் அமுதம் நிகர் விழிகளும் தொண்டருள்த்
தித்திக்கும் இன்பநடனச்
சேவடிகள் கண்டு கண்டு இன்பு உருவமாக அருள்
செய்யும் நாள் என்று? புகல்வாய் -
வண்டுஇரை தடத்து அமர மங்கையரும் மானிட
மடந்தையரும் ஆடி, நின்சீர்
மான்மியம் மிகப் பாடி, உள்க், கருதியே, மூல
மல பாகம் உற்று அமைந்து,
வண்திரைஇல் ஆனந்த வாரிதியில் மூழ்கிட
வயங்கு பிறவாநெறி எனும்
வளமைபொலி பேரைமணி! மறை முடியின் மேவுமணி!
மகிமை நடராஜ மணியே! 3

**வெண்திரை** - வெண்மையான அலைகள். **தாதகி** - ஆத்தி. **வேரி** - தேன், **விது ஒஞ்சு** - சந்திரனும் நாணும்படி எழில் மிக்க. **வாள்** - ஒளி. **மதியால்** - மத்து இட்டுக் கடைந்ததால், முதல்நிலைத் தொழிற்பெயர்.

**தெண்** - தெளிந்த. **இரை** - ஒலிக்கின்ற. **தடத்து** - நீர்நிலைகளில். **மான்மியம்** - பெருமை. **மூலமலபாகம்** - மல பரிபாகம், ஆணவம் அடங்குவதற்கு ஏற்ற பக்குவம். **வண்** - வளப்பம் மிக்க, மிகுதியான. **வாரிதி** - கடல்.

பங்கயத்து இலகும் அயன் அச்சுதன் கலை ஆன
பட்டிமுனி கோமுனிவனும்,
பத்திமலி காலவனும் மெய்த்தவம் இயற்றியே
பார்த்து உவப்புறும் நின்நடம்
வெம் கடத்து உழல் நாயினேன் வேண்டல், விழைபாலர்
விளையாட விது அழைக்கும்
விதம் எனினும், வேண்டுவார் வேண்டல் அருள் நின் கருணை
மெய்த்தகைக்கு ஒக்கும் அன்றோ?
பங்கம் ஆர் பணையில் வனசம் சங்கம் ஈனும் மணி
பால்ஒளி விரித்து, மருளார்
பரபோகம் வேள்த் தவர்க்கு உறுபதவி ஒத்துஅருள்ப்
பரபோகம் வேட்டுளாரும்
மங்களம் பெறுபதியின் மீதுற்ற பதியிதிடை
மருவுதிர்கள் என்று அழைக்கும்
மகிமைமலி பேரைமணி! மறைமுடியின் மேவுமணி!
மகிமைநடராஜ மணியே! 4

**பங்கயத்து** - தாமரையில். **அச்சுதன்** - திருமால். **கலை** - அம்சம், கூறு. **வெம் கடத்து** - கொடிய உடலில். **விதுவை** - சந்திரனை. வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய் என்பது வாகீச வேதம். **பங்கம் ஆர் பணை** - சேறு நிறைந்த வயல். **வனசம்** - தாமரை. **சங்கம்** - சங்குப் பூச்சி. **மணி** - முத்து. **பால் ஒளி** - பால் போன்ற வெளிச்சம். **மருளார்** - மனமயக்கம் அடையாதவர்கள் ஆகி, முற்றெச்சம். **பர போகம்** - முத்தி இன்பம். **வேள்தவர்க்கு** - விரும்புகின்ற தவசிகளுக்கு, வேள்தவர் என்னும் வினைத்தொகையின் விரித்தல் விகாரம். **அருள்ப் பர போகம்** - அருள்நெறிக்கு அன்னியமான உலகியல் இன்பங்கள். **வேட்டுளார்** - விரும்பியவர். **பதியின் மீதுற்ற** - தலங்களுக்குள் சிறந்த. **பதி இதிடை** - இந்த ஊரில்.

# அகிலாண்ட நாயகி பதிகம்

**காப்பு**

*(கட்டளைக் கலித்துறை)*

புகில், ஆண்டு அமை அரசம்பலக்
கோயிலைப் போல்எனது
திகில் ஆண்ட நெஞ்சிலும் வாழத்
திருஉளம் செய் கருணை
அகிலாண்ட நாயகி தோத்திரப்
பாடல் அறைய அவள்
முகில் ஆண்ட சோதித் திருமேனி
என் விழிமுன் நிற்குமே

**புகு இல்** - தான் திருமணம் செய்து கொண்டு புகுந்த வீடு, புக்ககம் ஆகிய. **ஆண்டு** - அந்த இடத்தில், திருப்பேரூரில். அரசம்பலக் கோயில் - வடகயிலாயம் என வழங்கப்படும் காலவேச்சுவரர் ஆலயம். **திகில் ஆண்ட** - அச்சம் மிகுந்த. வாழத் திருவுளம் கொண்ட தயவு மிக்க அகிலாண்ட நாயகி என்க. **அறைய** - ஒளிமயமான. இந்தக் காப்பு வத்து நிர்த்தேசத்தின் பாற்படும்.

**நூல்**

*(எழுசீர் விருத்தம்)*

பொங்கு புன்முறுவல் அரும்பு அருள் வாயும்,
பொலி துணை விழிகளும், காமர்
தங்கு வாள் முகமும், சதுர்க் கரங்களும், மின்
தழைத்த இட்டிடை இசை ஞானக்
கொங்கு உறு கலசத் துணைகளும், பதமும்
குடிகொடு, என் மனத்து இடம்கொண்ட
வெம்குணம் குடிவாங்கிடச் செய்வாய் ; பேரூர்
வேண்டு அகிலாண்ட நாயகியே ! 1

**பொலி** - எழில் மிக்க. **துணை** - இரண்டு. **காமர்** - அழகு. **தங்கு** - நிலைத்துள்ள. **சதுர்க் கரங்கள்** - நான்கு கைகள். **மின் தழைத்த** - மின்னலைப் போன்ற. **இட்டிடை** - குறுகிய இடுப்பு. **கொங்கு உறு** - நறுமணம் கொண்ட. துணைக் கலசங்களும் என மாறுக, இவை நகில். **வெம்குணம்** - கொடிய பண்புகள். **குடி வாங்கிட** - நீங்கும்படி.

துதித்திடல் மறந்து, மாயைவல் வினையில்
சுழன்று அயர்வேற்குள் நின் வடிவம்
பதித் திடம் பொலியப் பதித்த வான் கருணைப்
பரப்பினுக்கு எல்லை இன்று உணர்ந்தேன்;
நிதித் திற மறுமை நிலைஉயிர்க்கு இடச் சாந்-
நித்திய வடிவு அமைந்து, அயன்கை
விதித் திறம் ஒழிப்பக் கதித் திறப் பேரூர்
வேண்டு அகிலாண்ட நாயகியே! 2

**அயர்வேற்குள்** - மயங்குகின்ற அடியேனின் மனத்தில். ***பதித்திடம் பதிய*** - பரம்பொருளின் தகைமை இத்தகையது என்னும் நிச்சய புத்தி அழுத்தமாக உண்டாக. **பதித்த** - ஏற்படுத்திய. **வான்** - பெரிய. எளியேன் எனக்குள் பதித்ததால் கருணைக்கு எல்லை இல்லை என்பதை இந்நாள் கண்டு கொண்டேன். இன்று என்பதனை இரட்டுற மொழிதலாக இல்லை. இந்நாள் என இரு பொருளும் இணைத்துக் கொள்க. ***நிதித்திறம்*** - தேவையான செல்வப் பொருட்களின் மிகுதியையும், இது இம்மையில். **சாந்நித்திய வடிவு அமைந்து** - கண்ணால் தரிசிக்கும்படித் திருவுருவைப் பெற்று. **அயன்கை விசித்திரம்** - பிரமன் தன் கைகளால் எழுதும் தலையெழுத்தின் வலிமை. ***கதித்திற*** - வீட்டுப்பேற்றை உறுதியாக வழங்குகின்ற.

அகத்து உலகு ஆசைப் பேய்பிடித்து ஆட்ட
அமைந்தவர்க்கு இசை நிராசையினார்
சகத்து உறவு ஒழித்து உள்ச் சுகத்து உடையாரைச்
சார் பெரு வாழ்வு அளித்து அருள்வாய் !
நகத்து உறவு உற்ற காவலன் ஆவல்
நல்த் தவச் சுதை உருஆம் தெய் -
விகத் தனிச் சுடரே! அணித் திருப் பேரூர்
வேண்டு அகிலாண்ட நாயகியே ! 3

**அகத்து** - உள்ளத்தில். **இசை** - பொருந்திய. ***நிராசையினர்*** - தம் விருப்பங்கள் நிறைவேறாமல் ஏமாற்றம் அடைந்தவர்கள் ஆகிய. **சகத்து** - உலகினர்களுடைய. சுகத்துஉள் என மாறுக, இன்பம் நிறைந்த மனம். **நகத்து உறவு** - மலைகளின் தொடர்பு. **காவலன்** - மலையரசன், இமவான். **சுதை** - மகள்.

அரும் தவக் காலவற்கு அருள் மகிமை
அமை காலவேச் சுரனோடு
இருந்த அக் காட்சி என் இரு காட்சி
எய்துமாறு அருள்கை நிற்கு அரிதோ?

மருந்து அணிக் குதலை ஞான ஆனந்த
வாக்கியம் ஆகும் மாதுரிய
விருந்து அளித்து, அன்பர்க்கு அருள்செயப் பேரூர்
வேண்டு அகிலாண்ட நாயகியே ! 4

**காலவர்** - காசிப முனிவரின் மைந்தர். **இருகாட்சி** - இரண்டு கண்கள். **மருந்து அணிக் குதலை** - அமுதப்போன்ற இனிமை மிக்க மொழி. **மாதுரிய** - இனிய.

பெற்றிடும் உயிர்த்தாய் நின்தனத்து உறுபால்
பெட்டிடல் விட்டு இகப் பாசப்
பற்றுஇடு மனப்பால் குடித்து அயர்எனைக் கண்
பார்த்திலாய் போன்றுஉறல் முறையோ?
முற்றிடும் அன்பால் அரகர மகுடம்
முழக்கிடுவார்க்கு உறத் தன்னை
விற்றிடும் மகிமை உற்றிடும் பேரூர்
வேண்டு அகிலாண்ட நாயகியே ! 5

**உயிர்த்தாய்** - (அழியும் உடலுக்கு அல்லாமல் நிலையான) ஆன்மாவிற்கு அன்னை ஆகிய. **பெட்டிடல்** - விரும்புதல். **இகப்பாசப்பற்று** - உலகியல் ஆசை ஆகிய கட்டு.

மைஉறழ் விழியார் யாவரும் உன்மெய்
வடிவின் அங்கிசம் என என்னுள்
ஐயுறவுஅற ஓர்ந்து உய்யுமாறு அருள் வீறு
அமை கடாட்சத்தில் நோக்கிடுவாய் ;
பொய்உறவு அமையும் இதுவரை என்னப்
புகன்று தன்புகல் அமைவார்க்குள்
மெய்உறவு அமையப் புகு திருப் பேரூர்
வேண்டு அகிலாண்ட நாயகியே! 6

**மை உறழ்** - அஞ்சனம் செறிந்த, மையைப் போல் கரிய எனினும் ஆம். **அங்கிசம்** - அம்சம், கூறு. **ஐயுறவு அற** - சந்தேகம் இல்லாமல். **கடாட்சம்** - கடைக்கண். **அமையும்** - போதும். **புகன்று** - சொல்லி, இங்கே உள்ளத்தில் முடிவு செய்து கொண்டு. **புகல்** - அடைக்கலம்.

நலம் பொலி தரும் அம்பலத் திரட்கு எல்லாம்
நாயகமாத் திகழ் அரசம்-
பலம் பொலி கோயில்க் கொண்ட நீ எனக்கு உள்ப்
பலம் பொலிந்திடப் பரிந்து அருளாய் ;

சிலம்பு ஒலிப் பாதத் துணைஎனக் காஞ்சித்
திருநதிப்பால் பொன் மாமணி தோய்
விலம்பொலிக் காட்சி வளத் திருப் பேரூர்
வேண்டு அகிலாண்ட நாயகியே! 7

**அம்பலத் திரட்கு** - அரங்கங்களின் தொகுதிகளுக்கு. **நாயகம்** - தலைமை. **உள்ப்பலம்** - மனத்தைரியம், உறுதி. **வில் அம் பொலி** - ஒளிமிக்க தண்ணீர் விளங்குகின்ற. **காட்சி வள** - தோற்றத்தின் சிறப்பினை உடைய.

மண்படும் மாய உடல் அபிமானம்
மருவுபு மாடை பெண் என்னப்
புண்படும் என் நெஞ்சினுக்கு இடு மருந்துஉன்
பொன்னடி அன்றி ஒன்று உளதோ ?
எண்படு போகத்து இச்சை முற்று அகற்றி
இனிப் பிறவாது அருள் ஞான
விண்படு பதியாம் அதிநலப் பேரூர்
வேண்டு அகிலாண்ட நாயகியே ! 8

**அபிமானம்** - பற்று. **மருவுபு** - பொருந்தி. **மாடை** - செல்வம். **எண்படு போகம்** - பெண், ஆடை, அணிகலன், உணவு, வெற்றிலை பாக்கு, நறுமணப்பொருள்கள், இசை, உயர்ந்த படுக்கை என்னும் எட்டு வகையான இன்பத்துய்ப்புக்கள்; இனி அனைவராலும் நினைக்கப்படுகின்ற இன்பங்கள் எனினும் ஆம். **ஞானவிண்படு பதி** - மெய்யறிவாகிய வெளியாக அமைந்துள்ள திருத்தலம்.

பண் நிலாவு இயல் செந்தமிழ் கொடு உன் புகழ்ச்சீர்
பலபடப் பாடிஉள் அன்பால்
மண்ணில் ஆர் உயிர்கட்கு இடர் ஒழித்து இன்பம்
வழங்கும்மெய் வாழ்வு அளித்து அருள்வாய் ;
எண்இலா நலம் கண்டோர்க்கு இடும் தூல
இலிங்கம் ஆம் சிகரி உண்மை உற
வெண்நிலா முடி கொண்டு இசை திருப் பேரூர்
வேண்டு அகிலாண்ட நாயகியே ! 9

**பண் நிலாவு** - இன்னிசை பொருந்திய. **இடர்** - துன்பம். **எண் இலா** - கணக்கற்ற. **இடும்** - உண்டாக்கும். **தூல** - பருப்பொருள் ஆகிய. **சிகரி** - கோபுரம். **உண்மை உற** - கற்பனையாக அல்லாமல் மெய்யாகவே. **இசை** - அமைந்துள்ள.

தன்னை நேர் கருணை அன்னை! நின் ஞான
சந்நிதிப்பால் எடுத்து உணர்த்தல்
என்னை ? யான் என்னை ஈந்தனன் ; உன்னை
ஈந்திடத் திரு உளம் இசைவாய்;
முன்னைவல் வினைதீர் திருநடக் காட்சி
முதிர் தவத்துறையில் மூழ்கினர்க்கு
மின்னைநேர் ஒளிமெய் பெறஅருள் பேரூர்
வேண்டு அகிலாண்ட நாயகியே ! 10

**தன்னைநேர்** - தனக்குத்தானே நிகர் ஆன, இணையற்ற. **ஞான சந்நிதிப்பால்** - மெய்யறிவுமயமான திருமுன்னர். தந்தது என்றன்னை; கொண்டது உன்றன்னை என்பது மணிவார்த்தை. **முன்னை** - பழைய. **முதிர்** - முற்றிய. **மின்னைநேர்** - மின்னலைப்போன்ற. **ஒளிமெய்** - சோதி உடல்.

பண் இசைக் கொங்கு நாட்டிடை உயிர்கள்
பண்ணிய புண்ணியப் படிவாய்
விண் இசை சுரரும் ஏத்து அணிப் பேரூர்
வேண்டு அகிலாண்ட நாயகியை
நண் இசைச் சிரவை பொலி கவுமாரர்
நாடு இராமானந்தக் குரு தாள்
எண் இசைக் கந்தசாமி ஏத்திடு பா
இசைப்பவர்க்கு உறும் சுக இனமே 11

**பண் இசை** - பெருமை மிக்க. **படிவு ஆய்** - வடிவம் ஆக. **விண் இசை சுரர்** - வானோர். **ஏத்து** - போற்றுகின்ற. **நண் இசை** - பொருந்திய நற்பண்புகளை உடைய, இது கவுமாரர்க்கு அடை. **நாடு** - விரும்புகின்ற. **எண்** - இடையறாது நினைத்தல், எண்ணல், முதனிலைத் தொழிற்பெயர். **எண் இசை** - தியானித்தலைப் பொருந்திய.

# அகிலாண்ட நாயகி திருப்புகழ்

தனதாந்த தானனத் தனதானா

கருவாய்ந்த நாகம்ஒத் திசை தீங்கு தோய் சினக்
கனல்மீந்த வீணருள்க் குமையாதே,
கவண் ஏந்தும் ஓர்சிலைத் தகைபோன்று பாழ்உடல்க்
களின்மாந்து போகமுள்ப் பதியாதே,
சடுஒங்கு மாதவத்திடை தேங்கு பூரணத்
தகைவான் பராபரத்து உறுமாறே,
தளர்வேன்றன் மாமுடிப் புடை தாங்க வாரிசச்
சரண் ஊன்ற நீ உளத்து அருள்கூராய்;
கெடு வீம்பனால் வளர்த்திடு தீங்கிலாதிமக்
கிரிவேந்தன் ஓகைமெய்ச் சுதை ஆவாய்;
கிளர்வேன்ற பாடல்சொற் றுஉறி ஊர்ந்துளானைஅக்-
கினி பாய்ந்திடா தெடுத் தருள்வாழ்வே;
அடு தீங்கு தோய்புலப் பகை நீங்குமாறுளத்
தடிவேண்டு மாதவத் திறல் ஈவாய்;
அணி ஆர்ந்த பேரையில்ப் பொலிமாண் கொள் ஆலயத்து
அகிலாண்ட நாயகிப் பெரியாளே!

**கருவாய்ந்த நாகம் ஒத்து** - கரிய நிறப் பாம்பினைப் போல. **சினக்கனல் மீந்த** - கோபத்தீ மிகுந்த. **குமையாதே** - அழியாமல். கவண் ஏந்தும் ஓர் சிலைத்தகை போன்று - கவணில் வைத்துச் சுழற்றப்படும் ஒரு கல்லைப் போல. **பாழ் உடல்களில்** - (இவ்வுலகில் பல பிறவிகளிலும், மறுமையில் சுவர்க்கத்திலும், வினைகளால் கிடைப்பவை ஆகிய) பயனற்ற உடம்புகளால், வண்ணம் நோக்கிய வலித்தல் விகாரம். **மாந்து போகமுள்** - துய்க்கின்ற இன்பங்களுக்குள், போகமுள் என்புழி அத்துச் சாரியை கெட்டது. **பதியாதே** - அழுந்திவிடாமல். **சடு ஒங்கு** - ஆறு சமயங்களாகக் கூறப்படுகிற. **தேங்கு** - நிறைந்துள்ள. **வான்** - மேலான. **மாமுடிப்புடை** - தலையின்கண், மா என்றது பெருமையைக் குறிக்காது குறிப்பால் இழிந்த என நின்றது. **வாரிசச் சரண்** - தாமரைத் திருவடி.

கெடு வீம்பன் என்றது தக்கனை. **இமக்கிரி வேந்தன்** - இமவான். **ஓகை** - மகிழ்ச்சி அடையும். **சுதை** - மகள். **கிளர்வு ஏன்ற பாடல்** - கிளர்ச்சி மிக்க கவிதை, இது அபிராமி அந்தாதி. **உறி ஊர்ந்துளான்** - அபிராமி பட்டர், வரலாறு வெளிப்படை. **அக்கினி பாய்ந்திடாது** - தீக்குள் விழுந்துவிடாதபடி. **அடு** - போரிடுகின்ற. **உளத்து** - மனத்தில். **அடி** - திருவடி. **அணி ஆர்ந்த** - அழகு மிக்க. **பொலி** - விளங்குகின்ற. **மாண்கொள்** - சிறப்பு வாய்ந்த.

# முருகப் பெருமான் திருப்புகழ்ப் பதிகம்

**காப்பு வெண்பா**

சீர் ஊர் இனத்துள் சிறப்பு உற்று இலங்கு புகழ்ப்
பேரூர்த் திருப்புகழ்ப்பாப் பேச நல்கும் - நார் ஊர்
மவுனாகரக் குரவன் வான்பதம் தோய் நெஞ்சக்
கவுமாரர் பாதத் துகள்.

**மவுன ஆகர** - ஞானத்திற்கு இருப்பிடமாகிய, மோனம் என்பது ஞானவரம்பு. **குரவன்** - குருநாதர். **வான்** - உயர்ந்த

**நூல்**

தானான தந்த தந்த தனதானா

வேதாகமங்கள் என்றும் ஊடாடி நன்கு உணர்ந்தும்
மேல் ஓதல் இன்றி நின்ற முடிஆம் நீள்
வீறு ஆரும் இன்பம் மிஞ்சு உன் வாரீச மென்பதங்கள்
மீது ஆதரம் கொடு ஒன்றி மகிழாதோர்,
ஆதாரம் என்பது இங்கு உறா மாயை கொண்டு உழன்ற
ஆபாச வண்டர் புன்சொல் வழியே போய்,
ஆனாத துன்பில் நெஞ்சம் ஆழ்வேனை அன்பில் உன்றன்
ஆள்ஆக இன்று இரங்கி அருள்வாயே -
வேதா அகந்தை கொண்டு பேணாது அகன்ற அங்கண்
மேல் ஓம் எனும் பதம் கொள் பொருள் தேரா
வீணா! சகம் செய் பண்பு கூடாது நின்கண்; என்று
வேசாற அன்று அறைந்த கரவேளே!
பேதாதி அங்கம் முந்தி மேலோரிடம் கலந்து
பேர் ஆடல் சந்ததம் செய் குருநாதா!
பீடுஆய மங்களங்கள் நாள்தோறும் மிஞ்சுகின்ற
பேரூர் விளங்க வந்த பெருமாளே! 1

**ஊடாடி** - திளைத்து. **வாரீசு** - வாரிசம், தாமரை, நீட்டல் விகாரம். **ஆதரம்கொடு** - அன்பு கொண்டு. **ஆதாரம்** - நிலைத்த தன்மை. **ஆபாச வண்டர்** - தீமையும் கொடுமையும் உடையவர்களின், மகிழாதோர் ஆகிய வண்டர் என இயையும். **ஆனாத** - குறையாத. **ஆள்** - அடியவன். **வேதா** - பிரமன். **அகந்தை** - செருக்கு. **அங்கண்** - அப்போது. **பதம்** - சொல். **சகம் செய்** - உலகத்தைப் படைக்கும். **நின்கண்** - உனக்கு. **வேசாற** - வருந்தும்படி. **கர** - கைகளை உடைய

பிரமனைக் குட்டிய வரலாறு வெளிப்படை. பேத ஆதி அங்கம் முந்தி - சிவ பேதங்கள் ஆகிய முதன்மையான வடிவங்களுள் முற்பட்டு, சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், ஈசன், உருத்திரன், திருமால், பிரமன் என்பன சிவபேதங்கள் ஆகும். சந்ததம் - எப்பொழுதும். **பீடு ஆய** - சிறப்பு மிக்க.

**தானான தத்த தந்த தனதானா**

**ஊன் ஆர் புலைக் குரம்பை மீது ஆவல் மிக்க ஒன்றி,**
**ஊண் ஆடை பொன்கலன்கள் பெறமால்ஆய்,**
**ஓவாது அவத்தை கொண்டு, மாயாமயக்கில் நெஞ்சம்**
**ஊதாரி பட்டு உழன்று மடியாதே,**
**தேன்ஆர் பொழில்க் கொள் குன்று தோறேகி, அற்புதம் கொள்**
**தேவாமுதத்து அமிழ்ந்த கவிசூல்ஆர்**
**சீமூதம் ஒத்து விண்டு, நான் ஆம் உணர்ச்சி பொன்று**
**சீர் மேவிடற்கு இரங்கி அருள்வாயே**
**கான்ஆர் குறத்தி கொங்கை மால்ஆய் எனைக் கலந்து**
**காவாய் எனப் பணிந்து மகிழ்வோனே!**
**காகோதரத் துசன்கண் ஓர்தூது எனப் படர்ந்த**
**கார்மேனி அச்சுதன் தன் மருகோனே!**
**மானார் அகட்டில் மைந்தன் ஆகாது இரக்கம் மிஞ்சி**
**மா வீடு அளிக்க வந்த குருநாதா!**
**வானோர் துதித்து இறைஞ்சு பேரூரிடத்தில் இன்ப**
**வாழ்வாய் மிகச் சிறந்த பெருமாளே! 2**

**ஊன்** - மாமிசம். **புலை** - கெட்ட. **குரம்பை** - உடல். **மால் ஆய்** - ஆசைப்பட்டு. **ஊதாரி பட்டு** - அழிந்து. **சீமூதம்** - மேகம். **விண்டு** - உரைத்து. **நான் ஆம் உணர்ச்சி பொன்று சீர்** - தற்போதம் நீங்குதலாகிய சிறப்பு. **கான்** - காடு, இங்கு தினைப்புனம். **காகோதரத் துசன்கண்** - பாம்பைக் கொடியாக உடைய துரியோதனனிடம். கண்ணன் தூது வெளிப்படை. **மானார்** - மகளிரின். **அகட்டில்** - வயிற்றில். **மா** - பெருமை மிக்க.

**தனதன தானான தந்த தனதானா**

**கருமுகில் போலே இருண்ட குழல் மடவார் மால் அடைந்து**
**கதிவழி நாடாது உழன்று கெடுவார்தோய்**
**கணம் அதிலேயான் அடைந்து ஓர் பயன் அறியாது ஏதம்ஒன்றல்**
**கருதலை பாராமுகம் கொடு உறல் சால்போ?**

அருணையில் நீள் கோபுரம் கொள் சுகவடிவான் ஆர்வம் மிஞ்ச
அருள்புரி மா போத இன்பம் உறுமாறே
அவிர் வடிவேலொடு தண்டம் இலக என்நேர் ஆகி நின்றுஉன்
அழகிய பாதாரவிந்தம் முடிசூடாய்
வெருள் இமையோர் தேர அன்று திருநெடுமால் ஓதும் இன்ப
விமரிசம் மேன்மேல் விரிந்த குமரேசா!
விரிகடல் ஆலாலம் உண்ட சிவபெருமான் நீடும் அங்கி
விழிவழி தேசு ஆர் புலிங்கம் என ஏய்வாய்!
மருள் வடிவே நான் எனும் பொய் உலகியல் மால் ஒவி, அன்பின்
மலர் அடியூடு ஆக வந்த குருநாதா!
மடிவு உறும் நாள் காதில் நம்பன் மறை எழுவாய் ஆகும் இன்ப
மறைபுகல் பேரூர் அமர்ந்த பெருமாளே! 3

**கதி வழி நாடாது** - முத்திக்கான நெறியை விரும்பாமல். **கணம்** - கூட்டம். **ஏதம் ஒன்றல்** - குற்றம் பொருந்துதலை. **கருதலை** - சிந்திக்காதவன் ஆகி, முற்றெச்சம். **சால்போ** - சான்றாண்மை ஆகுமா. **சுக வடிவான்** - கிளி உடலைக் கொண்ட அருணகிரிநாதர். **வெருள்** - (சூரனை நினைந்து) அஞ்சுகின்ற. **விமரிசம்** - புகழ்மொழிகள். **அங்கி விழிவழி** - தீக்கண்ணிலிருந்து. **தேசு** - ஒளி. **புலிங்கம்** - நெருப்புப் பொறி. **மால் ஒவி** - மயக்கத்தை நீக்கி. அடியேன் மயக்கத்தை ஒழித்துப் பத்தியோடு திருவடிக்கண். அமைவதற்காக எழுந்தருளிய தேசிகரே என்பது கருத்து. ஓர் உயிர் இறக்குங்கால் அதன் செவியில் இறைவன் உபதேசம் செய்வார் என்பது தலபுராணச் செய்தி.

தன தானன தானன தானன தனதானா

பொருளே பெரிதாம் என நேடி, நல்
அறம் ஆதிய சீர் நினையாது, அழி
புவி மீது உழல்வார் புகல் வாசகம் மதியாதே,
புனை மேகலையாரிடை மேவிய
மதவேள் அலர் வாளிகளால் மயல்
புணர் தீவினை கூடி விவேகம் உள் அழியாதே,
அருளே வடிவு ஆகும் உன் வேலினை
இடையீடு அற நாடிடு தீவிரம்
அமை தூய தபோதனர் வாரிச மலரேநேர்
அடியூடு அமை தூளி என் நீள் முடி -
மிசை சூடி, ஓர் ஆகம் உறா நலம்
அடியேன் உறுமாறு அருள் ஓர்தினம் எதுதானோ?

சுருள் ஓதி கொள் வாரண மாது உளம்
மிக வாடிட, வேடர்கள் மாது அடி
தொழுது ஓகைகொடு ஆடிய பேர்அருள்உடையானே!
சுகம் நீடியபா உரமீது அணி
அருணாசல நாதனை ஓவறு
சுகம் ஆம் வடிவோடு புயாசலம் உற ஆள்வாய்!
தெருள் ஏதும் இலாது உலகூடு உழல்
சிறியேனையும் மா கவுமாரர்கள்
செறிவூடு அமைவான் அருள்கூரிய குருஆவாய்!
தெளிதேன் உமிழ்தாமரை ஓடைகள்
எறிகூன் வளை பால்மதி போல் ஒளி
திகழ்பேரையில் வாழ்குமரா! சுரர் பெருமாளே! 4

**தபோதனர்** - தவத்தையே செல்வமாகக் கொண்டவர்கள். **தூளி** - தூசி. **ஆகம் உறா நலம்** - மறு பிறவி இல்லாத நன்மை. **சுருள் ஓதி** - சுருண்ட கூந்தல். **வாரண மாது** - தெய்வயானை. **வேடர்கள் மாது** - வள்ளிநாயகி. **ஓகை** - மகிழ்ச்சி. **சுகம் நீடிய பா** - இன்பமயமான திருப்புகழ். **உரம்** - மார்பு. **ஓவறு** - நீங்காத. **சுகம் ஆம்** - கிளி ஆகிய. **புயாசலம்** - தோள்களாகிய மலை. **தெருள்** - அறிவுத்தெளிவு. **செறிவூடு** - கூட்டத்தில். **கூரிய** - புரிந்த, கூர்ந்த எனற்பாலது வண்ணம் நோக்கிக் கூரிய என நின்றது. **கூன் வளை** - வளைந்த சங்குகள். **பால் மதி** - வெண்மையான சந்திரன்.

தனன தன தானான தந்த தனதானா

தமனிய மகா மேரு என்ற
தன மகளிர் மீது ஆவல் கொண்டு
சலன மிகையால் வாடி நொந்து தொலையாதே
சகுண வழிபாடு ஈனம் என்று
கதறி உடலூடே கிடந்து
தளர் கொடியர் தாம் ஓது புன்சொல் மதியாதே
அமரர் முனிவோர் மேல் விதந்து
புகழ்உன் வடிவே ஆகி நின்று, இவ்
அகிலமிசை தோய்வோர்கள் இன்பம் உறுமாறே
அபரிமிதம் ஆர் ஆடல் கண்டு
மகவு எனஇனோர் தாய் தனம்கொள்
அமுதம் நுகரா வீடு இணங்க அருள் தாராய் -

குமர குரு நாதா! கடம்பு
மதுபம் முரல் கூதாள மன்றல்
குலவு புயபாரா! நடம்கொள் மயில்வீரா!
குகுகுகுகு கூகூகு என்று
சிறை அடி கொடே கூவுகின்ற
கொடிகொள் குகவேளே! மெய் அன்பர் துணை ஆவாய்!
மமதை இணை தீர் பேர் அகந்தை
கொடு புவியில் மாய்வேனும் இன்பம்
மருவு கதிதோய்வான் விளங்கு குருநாதா!
வனசமிசை வாழ் வேதன் எண்கை
புகல்இல் அருள் மேலோர் விளம்பும்
மகிமைபொலி பேரூர் அமர்ந்த பெருமாளே! 5

**தமனிய மகாமேரு என்ற** - பொன்னால் ஆகிய பெரிய மேருமலையைப் போன்ற. **தன** - நகில்களை உடைய. **சலனம்** - மனக்கலக்கம். **சகுண** - இறைவனின் திருவுருவம். **ஈனம்** - இழிவானது. **அகிலமிசை** - உலகத்தில். **அபரிமிதம்** - எல்லையற்ற. **இனோர்** - இன்னம் ஒரு. **மதுபம் முரல்** - வண்டுகள் மூசுகின்ற. **மன்றல்** - வாசனை. **மமதை** - ஒரு பொருள் என்னுடையது எனக் கொள்ளும் செருக்கு. **அகந்தை** - நான் பெரியவன் என நினைக்கும் அகம்பாவம். யான் எனது என்னும் செருக்கு அறுப்பான் வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும் என்பார் வள்ளுவர். அடியேன் அவற்றை அறுக்காததால் புவியில் மாய்வேன் என்கிறார். **கதி தோய்வான்** - வீடு அடைவதற்காக. **வேதன்** - பிரமனின். **எண் கை** - எட்டுக் கரங்களால் எழுதப்படும் தலைவிதியில். **புகல் இல்** - புகுதல் அற்ற.

தனனதன தத்ததன தனனதன தத்ததன
தானா தனத்தனன தானா தனத் தனன தனதானா

மதுகரம் மிகத் துழனி புரி கடிமலர்க் குழல்கொள்
மானார் மை இட்டு மிக மான்நேர் மருட்சி பெறு
மதர் விழிகளை, திலகம் இலகும் ஒளி பெற்று இனிய
வாரீச நலத் துணரை, ஆலோனை ஒத்த நகை
வதனமதனைப் பவள அதர அணியைக் கருதி
மால்ஆய் அழல்க்கொள் மெழுகேபோல மிக்கு உருகிமதியே போய்

மழை முகில் இளைப்பு ஒழிய வதிதரும் அடுக்கு அணிகொள்
வான் நீடும் உப்பரிகை மீது ஆதரத்தவர்கள்

வெறிகொள் கலவித்துயரை இணைஇல்சுகம் உற்றபர
மேல்வீடு எனப் பகரும் மாயாவினைக் கொடியர்
மனித உரு ஒத்து உறலில், இனம் என நினைத்து, நிதம்
வாளா அலைத்திடும் என் நீள் பாழ் விதிக் கொடுமை தவிராதோ?

சதுர் மறைகொள் ஒப்பு இல் முடிநிகர் மகிமை பெற்று, உனது
தாள் வாரிசத்தின் மணம் மாறா வளப்பம் நிறை
வரை முடிதொறு உற்று, அமரர் துயர் அகல அச்சுதன்முன்
வாயால் உரைத்த புகழ் ஓர் கோடியைக் கடல்கொள்
சலதரம் எனப் பெய்து உறும் இரவு பகல் அற்ற நிலை
சால் ஞான அற்புத வைபோக ஆர்கவிக்குள் உற விடுமாறே

தவள நிற அத்தி தவம் நிறைதர வளர்த்த மகள்
சார் ஏனலில்ப் பறவை தோயாது அளித்து உலவு
குறமகளின் மத்தியினில் முகில் எதிரில் நட்டமிடு
கோலாகலச் சிகியின் மீதே என்முன் கடிது
தரிசனம் அளித்து விதி விதி அழிய உச்சிமிசை
தாள் சூடிடக் கருணை நீர் தோய உள்க் கருதல் எதுநாளே?

பதுமன் அரி உக்கிரமொடு அளவுஇல்பகல் எய்ப்பிலது
பாதாளம் முற்றிலும் விண் மீதாயும் எட்டரிய
அடிமுடி படைத்தவர்தம் இணைஇல் உயர் பத்தன் உறும்
ஆயாசம் முற்று ஒழிகுவான் வீணை கைக்கொடு இயல்
பளு அமை பெருத்த சுமை விறகு விலை செப்பி இசை,
பாடு ஆதரத்து இனிய சாதாரியற்கு அருள்செய் குருநாதா!

பரவை தரு புத்தமிழ்தம் அனைய தமிழைக் கொடு ஒரு
பாஓதுநற்கு மகளா மேவி உள்க் கனிவொடு
அறுமதி வரைக்கும் அவனதுபின் அவிமுத்த நகர்
ஆனாஉவப்பின் உறு காமாரி சத்தி சிவை
பரை கவுரி அத்தி உரியவர் உளம் உருக்கும் முதிர்
பாகுஆம் மொழிப்பரை உள்ஆனா உவப்பு அடையும் முருகோனே.

விது உற அளித்தவிருதய அரிகை பற்று மிடல்
வீறு ஆழியைத் தன் அகல் மார்பூடு அணித் தகையில்
அணிபவனை, ஒப்பு இல் பல கொடுமை புரி வெற்பை, அவன்
ஆதாரம் மிக்க துணை ஆனாரை அட்ட ஒளி
விரவு அயில் பொறுத்த புயமிசை மழை எனக் கவிபெய்
மேலான தத்தையொடு காலாயுதக் கொடியும் அணிவோனே!

விரிமலர் விருக்க இனம், அரசவனம் ஒப்புஇல் உயர்
வேதா உருத்திரன் நல் மால்ஆம்உமைக் குமரன்
உரு என மிசைக் கவிகை முறையில் வளர்வுற்று அலர் பெய்து
ஓவா மதுக்கொடு அபிடேகாதரத் தொழில் செய்
வியனொடு இசை பறவையினம் மிகு துதி முழக்கி நிகழ்
வேதாமகத் துறைகொள் பேரூரிடத்தில் வளர் பெருமாளே! 6

**மதுகரம்** - வண்டுகள். **துழனிபுரி** - ஒலிக்கின்ற. **கடி** - வாசனைமிக்க. **மதர்வழி** - செருக்கு மிக்க கண்கள். **வாரிச நல்துணர்** - நல்ல தாமரை மலர். **ஆலோன்** - சந்திரன். **வதனம்** - முகம். **அதர அணியை** - உதட்டின் அழகை. **மால் ஆய்** - ஆசை கொண்டு. **அழல்** - தீ. **மதி** - அறிவு. **வதிதரும்** - தங்குகின்ற. **அடுக்கு அணி** - ஒன்றன்மேல் ஒன்று ஆன வரிசை. **ஆதரத்தவர்கள்** - காதலர்கள். கொடியர் என்றது லோகாயதர்களை. **வாளா** - வீணாக. **சதுர்மறை** - நால்வேதங்கள். **வரைமுடி** - மலை உச்சி. **சலதரம்** - மேகம். **இரவு பகல் அற்ற நிலை** - கேவல சகலங்களைக் கடந்த சுத்த நிலை. **வைபோக ஆர்கலி** - மகிழ்ச்சிக்கடல். **தவள நிற அத்தி** - வெள்ளை யானை ஆகிய ஐராவதம். **வளர்த்த மகள்** - தெய்வசேனை. **சார் ஏனல்** - மலைச் சரிவில் உள்ள தினைப்புனம். **கோலாகலச் சிகி** - ஆடம்பரமான மயில். **விதிவிதி** - பிரமன் விதித்த ஊழ்வினை. **நீர்** - தன்மை.

**பதுமன்** - பிரமன். பத்தன் என்றது மதுரைப் பாண பத்திரரை. **ஆயாசம்** - துன்பம். **பளு அமை** - பாரமான. **ஆதரத்து** - ஆர்வம் மிக்க. **சாதாரியற்கு** - ஏமநாதரின் எதிரே சாதாரிப் பண்ணைப் பாடிய சிவபெருமானுக்கு, சொக்கப்பெருமானின் விறகு விற்ற திருவிளையாடல் வரலாறு வெளிப்படை. அருள் செய் என்றது உபதேச மந்திரம் இருசெவி மீதிலும் பகர்ந்ததை. **பரவை** - கடல். **பா ஓதியவர்** - கவிராச பண்டிதர், ஒரு பா என்றது, வேத ரஞ்சகன் எனத் தொடங்கும் சௌந்தரிய லகரியின் இருபத்தாறாவது பாடலை. **அறுமதி**-ஆறு மாதங்கள். **அவிமுத்த நகர்** - காசி. **ஆனா** - குறையாத. **காமாரி** - காமத்திற்குப் பகை ஆகிய பார்வதி. கவிராச பண்டிதரின் மகளாக இறைவி வந்தது புலவர் புராண வரலாறு. **அத்தி உரியவர்**-யானைத்தோல் அணிந்த சிவபெருமான். **பாகு** - வெல்லப்பாகு. **விது உற அளித்த இருதய அரி** - சந்திரனைத் தோற்றுவித்த மார்பினை உடைய திருமால், சந்திரன் விட்டுணுவின் மார்பில் தோன்றியதாகவும் ஒரு புராணம் உண்டு. மிடல் வீறு ஆழி என்றது சுதர்சன சக்கரத்தை. **அணித்தகையில்** - ஒரு நகையைப் போல. **அணிபவன்** - தாரகாசுரன். **வெற்பு** - மலை, கிரவுஞ்சம். **துணை ஆனார்** - சிங்கமுகனும், சூரபதுமனும். **அட்ட** - கொன்ற. **அயில் பொறுத்த** - வேலாயுதத்தைத் தாங்கிய. **தத்தை** - கிளி, அருணகிரிநாதர். **காலாயுதம்** - சேவல். **விருக்க இனம்** - மர வகைகள்

எல்லாம். **அரசவனம்** - பேரூர். **வேதா** - பிரமன். **மிசை** - மேலே. **கவிகை** - குடை. **அலர்** - மலர்கள். **மதுக் கொடு** - தேனினால். அபிடேக ஆதரத் தொழில் என்க, நீராட்டுதலாகிய அன்புப்பணி. **வியன்** - பெருமை, வியப்பு எனினும் ஆம். **இசை** - (அவ்வூரின்கண்) பொருந்தியுள்ள, இசைத்தலை உடைய எனினும் இழுக்கின்று.

தானாத் தனனத் தனதானா

சீராட்டின் மயக்கே ஏற்றி மயல்ச்
சேறு ஆழ்த்துநர் இச் சையினாலே,
தீராக் கவலைக்கு ஆளாய்க் கடையில்த்
தீவாய்த் திமிரத்து உழலாதே,
பார்ஆட்டு புலப் போராட்டு ஒழியப்
பாராட்டி உனைத் தொழுமாறே,
பார்; காத்தருளப் பா ஏற்று நினைப்
பாய்; நீக்கல்; அடைக் கலம்யானே.
ஆராட்டு அறுவர்க்கு ஓவாக் களிமுற்று
ஆறு ஆக்கை கொள் அற் புதவாழ்வே!
ஆளாய்க் கனிவில்த் தாள் போற்றுநர்கட்கு
ஆனாச் சுகம் மிக்கு அருள்வோனே!
பேர் ஆட்டு அளவற்றே காட்டி அருள்ப்
பீடு ஏற்று புகழ்ப் படிவேதோய்
பேராக் கருணைப் பேர் ஆக்க! திருப்
பேரூர்க் குமரப் பெருமாளே! 7

***சீராட்டின்*** - உபசாரங்களால். **கடையில்** - இறுதியில். **தீவாய்த் திமிரம்**- நெருப்புக்கு இடமாகிய நரகம். **பார் ஆட்டு** - உலகியலில் உழலச் செய்யும். பா ஏற்று காத்தருள நினைப்பாய் என இயையும். **நீக்கல்** - விட்டு விடாதே. **ஆராட்டு** - தாலாட்டுகின்ற. **அறுவர்** - கார்த்திகை மாதர். **களி முற்று** - உவகை பெருகும். **ஆக்கை** - உடல். **ஆளாய்** - அடியவனாய். **ஆனா** - அழியாத. **பேர் ஆட்டு** - பெரிய திருவருளாடல்கள். **பீடு** - பெருமை. **பேரா** - நீங்காத.

தய்யத் தானான தந்தன தனதானா

எவ்வப் பாழ் ஆணவம்தரு
மையல்க் கார் ஆழி முங்கி, ஓர்
எள்ளைப் போலேனும் நன்று எனல் அறியாராய்

எல்லைக் காணாத கண்பெறு
புள்ளைப் போல்வார் கணந்தனில்
எய்திப் பேராடி நொந்து அகம் மெலியாதே,
செவ்வைச் சீர் வேத தந்திர
மெய் வித்தா நீடு உன் மங்கள
செல்வப் பாதாரவிந்தம் எய் தினர்தாம்ஓர்
தெய்வக் கோலால இன்பம், என்
உள்ளில்ப் பேராது உறும்படி
செய்யக் கூர்வேல் கொடு என்கண்முன் வருவாயே-
கௌவைக் கார்கோளில் அன்று ஒரு
சுள்ளிப் பேர் ஆர் மரம்புரை
கள்ளச் சூர்மா உரம்பகிர் வடிவேலா!
கள் வற்றா நீபம் ஒன்றிய
சையத் தோள்மீதில் அன்பு இசை
கல்விச்சீர் தோய் சுகம் சுகம் உற ஆள்வாய்!
பவ்வத்து ஆலாலம் முன் கொணர்
மெய் அற்பு ஆர் ஊரன் இன் பதி
பையச் சார்வு ஆம் முன் அங்கணர் சிவையோடே
பள்ளுக் கார் மேனி கொண்டு செய்
நெல் வித்து ஓர் ஆடல் கண்டு அவிர்
பள்ளிப் பேரூர் அமர்ந்தருள் பெருமாளே! 8

**எவ்வம்** - துன்பம் ஆகிய. **கார் ஆழி** - கரிய கடல், அறியாமை. **எல்லைக் காணாத கண் பெறுபுள்** - பகலில் கண் தெரியாத பறவை ஆகிய வௌவால். **கணம்தனில்** - கூட்டத்தில். **வேத தந்திர** - மறைகள் ஆகமங்கள் ஆகியவற்றின். **வித்தா** - விதையாக. **எய்தினர் தாம்** - அடைந்தவர்கள், தாம் பகுதிப்பொருள் விகுதி. **ஓர்** - உணர்கின்ற. ஓர் இன்பம், தெய்வக் கோலால இன்பம் எனத் தனித்தனி இயையும். **கௌவை** - ஒலி மிக்க. **கார்கோளில்** - கடலில். **சுள்ளிப் பேர் ஆர் மரம் புரை** - சுள்ளி எனவும் வழங்கப்படும் மாமரத்தைப் போல. **சூர் மா** - சூரனாகிய மாமரம். **உரம் பகிர்** - மார்பைப் பிளக்கின்ற. **கள்** - தேன். **நீபம்** - கடம்ப மலர். **சையத்தோள்** - மலைபோன்ற புயம். **சுகம்** - 1.கிளி, அருணகிரிநாதர், 2. இன்பம். பவ்வத்து ஆலாலம் - கடலில் தோன்றிய ஆலகால விடம். **அற்பு ஆர்** - அன்பு நிறைந்த. **ஊரன்** - சுந்தரமூர்த்தி நாயனார். **இன்பதி** - இனிய ஊர், பேரூர். **பைய** - மெதுவாக. **அங்கணர்** - சிவபெருமான். **பள்ளுக் கார் மேனி** - பள்ளர்களைப் போன்ற கரிய உடல். **செய்** - வயலில். **வித்து** - விதைக்கின்ற. **பள்ளி** - திருக்கோவிலை உடைய.

தனத் தனத் தந்த தானத் தனதானா

கலக்கு பொய்ப் பந்த பாசத்து
இருள்ப் பெருக்கு உந்து, மாயக்
கருச் சடத் தொந்தம் நீடிப் புவிமீதே
கடல்ப் புனல் கொண்ட மாலில்த்
தடித்து எனக் கண்ட வாழ்வு எக் -
களிப்பருள்த் தங்கி வீணில்ச் சுழலாதே,
துலக்கம் மிக்கு ஒன்று உன் மேன்மைத்
திருப்புகழ்ப் பண்பின் ஓதித்
துதிக்கும் மெய்த் தொண்டர் ஏவல்ப் பணிதானே
சுகப் பெருக்கம் செய் சீலத்
தவச் சிறப்பு என்று, பேணித்
துணைப்பதத்தின்கண் மேவப் பெறுவேனோ?
அலக்கண் உள்ப் பொங்கு கீரற்கு
உவப்பு உறச் செங்கை வேல்விட்டு
அடல்க் குறள்க் கொன்ற சோதிக் குமரேசா!
அழல்க்கிரிக்கண் கொள்நாதற்கு,
அகத்தியற்கு, எண்கண் வேதற்கு,
அரற்கு உரைக்கும் சொல் ஓது அற் புதவாழ்வே!
திலத்து உளத்து அன்பு இல் எனைக்
கடைக்கணித்து இன்ப ஞானச்
சிறப்பு அருள்த்தங்க ஆள்சற் குருநாதா!
செனிப்பு இறப்பு என்கை தீர் நல்
புளிப் பனைக் கொன்கொள் பேரைத்
திருத்தலக் கந்த நாதப் பெருமாளே! 9

**இருள்பெருக்கு உந்து** - அறியாமை ஆகிய வெள்ளத்தில் தள்ளிவிடுகின்ற. **கரு சட தொந்தம்** - பிறவி ஆகிய கொடிய போர். **மாலில்** - மேகத்தின்கண். **தடித்து என** - மின்னலைப் போல. **எக்களிப்பருள் தங்கி** - பெரும் மகிழ்ச்சி கொள்வோருடன் சேர்ந்து. **துலக்கம்** - விளக்கம். **என்று பேணி** - எனக் கருதிக் கடைப்பிடித்து. **அலக்கண்** - வருத்தம். **உள்** - மனத்தில். **கீரற்கு** - நக்கீரருக்கு. **அடல் குறள்** - வலிமை மிக்க கற்கிமுகி என்ற பூதத்தை. திருப்பரங்குன்ற வரலாறு. **அழல்க் கிரிக்கண்** - திருவண்ணாமலையில். **நாதர்**-அருணகிரிநாதர். **எண்கண் வேதன்** - எட்டு விழிகளை உடைய பிரமன். **அரற்கு** - சிவபெருமானுக்கு. உரைக்கும் சொல் - உபதேசிக்க வேண்டிய வார்த்தையை. **ஓது** - உரைத்தருளிய. **திலத்து** - எள்ளவும். **கொன்** - பெருமை.

தானத் தனந்தன தானன தானன தனதானா

பாகச் செழுந் தமிழால் உனை நாள்தொறும்
நீள்பத்தி கொண்டு இடையீடு இலாதேகவி
பாடிப் பணிந்திடு காதல் கொள்வேன் எனை, இழிவேதோய்
பாழ்பட்ட வஞ்சக ஆணவ மோகன
மாயைக்குள் நொந்து அழிவாருடன் ஏதம் ஒல்
பாரில்ச் சுழன்றிட நீ விடுவாய் எனில், இனி யாரே
சோகத் திறம் கெடுமாறு அருளால் நனி
ஆளத் தகும் துணை ஆவர்? என் ஓர் நிலை
சோதித்து இருந்தனையேல், அடியேன் உய்வது உளதேயோ?
தூலக் கொடும் சுமை தீர்தரு பேர் அருள்
ஞானப் பெரும் சுக பூரண வாரிதி
தோயப் புரிந்தருள்வாய் - ததி ஈது;உளம் உணராதோ?
மோகக் கெடும் குணம் நீடும் இராவணன்
மாளச் சரம் தொடு பேர் அடல் மேவு கொண் -
மூ ஒத்த சுந்தர மேனி இராகவன் மருகோனே!
மூகச் சமண் கொடியார் மதுராபுரி
மீதில்ச் செய் வஞ்சக மாயை எலாம் அற
மோசித்து இணங்கிய மாறனை ஆள் அருள் மறையோனே!
வேகப் புலன்களில் ஓடுபு பார்மிசை
வீணில்ச் சுழன்று அயர்வேனை, விடாது இசை
மேன்மைத் தவம் பொலிவார் கணமீது அமை குருநாதா!
வீதிக்கண் இன்பு குலாம் நடராசன் மெய்
ஆடல்ப்பொலிந்திடும் வாழ்வு அமை சீர்திகழ்
மேலைச் சிதம்பர ஆலயம் மேவிய பெருமாளே! 10

**பாக** - இனிய. மோகன. மயக்குகின்ற. **ஏதம் ஒல்** - குற்றம் பொருந்திய. **தூல** - பருமையான. சுமை என்றது உடலை. **வாரிதி** - கடல். **ததி** - தருணம். **மோக** - காமம் ஆகிய. **மாரி** - இறக்கும்படி. **சரம்** - அம்பு. **கொண்மூ ஒத்த** - மேகம் போன்ற. மூக - வாதத்தில் பதில் சொல்ல முடியாமல் வாய் அடைத்துப் போய்விட்ட. **மோசித்து** - நீக்கி. **மாறனை** - நின்றசீர் நெடுமாறன் என்னும் பாண்டியனை. **மறையோனே** - அந்தணர் குடியில் தோன்றிய ஞானசம்பந்தப் பெருமானே. **வேகப் புலன்** - நுகர் பொருள்களை விரைவில் சென்று பெற்றுத் துய்க்கின்ற ஐம்பொறிகள். **கணம் மீது** - கூட்டத்தில்.

மகராலயத் திரைக் கணத்தினைப் பரு -
கிடு கோர உக்கிரச் சொலிப்பு மிக்கு அவிர்
வடவானலத்தினைத் தணிக்கும் உச்சித அடலேதோய்
மலயாசலத்தினில் செனிப்பு உயிர்ப்பினை
அழலே எனச் சொலப் படுத்து துற்குண
மடவார் மயக்கம் உள்க் கதித்து அவத்தினில் உழலாதே,
சிகராலயத் திரட்களில்க் கொடித்திரு
நடம் ஆடும் அற்புதக் கழல்ப் பதத்துணை
சிறிது ஒவறக் கருத்து இருத்து பத்தர்கள் பதமூடே
திகழ் தூளி உச்சியில்க் களிப்பொடு இட்டு இருள்
மக மாயை பற்று அறக் கழித்து உவப்புறு
திருநாள் எனக்கு உறக் கடைக்கணித்து அருள் புரிவாயே-
புகர் ஆனை வத்திரத்தனைக் குறக்கொடி
அணிஆர் தனத் திளைப்பு அளித்திடத் துதி
புரிவேல! மெய்த் தவத்தருள்த் தழைத்துஒளிர் இருதாளா!
புயல்ஆர்இடித்தொனிக்கு மிக்க குக்குடம்
எனவே அருள்ச் சுவைத் திருப்புகழ்க் கவி
புகல்வார்கள் இச்சை முற்றுறக் கொடுத்தருள்குமரேசா!
பிகராகம் முள்புறக் கனித்திரள்ப் பெறு
சுவை நாணும் அற்புதச் சுகப் பெருக்கு இயல்
பிரவாகம் உற்ற சொல்க் கிளத்தும் ஒப்புஅறு குருநாதா!
பிறிது ஓர் அகட்டினில்ப் பிறப்பு உறற்கு அயன்
எழுதா உயிர்க் குலத்தினுக்கு வைப்பு இசை
பிறவாநெறித் திருப்பதிக்கண் உற்று அவிர் பெருமாளே ! 11

**மகராலயத் திரைக் கணம்** - கடல் அலைக் கூட்டம். **கோர** - அச்சம் தருகின்ற. **உக்கிர** - வேகமான. **வடவானலம்** - கடலில் உள்ளே இருப்பதாகக் கூறப்படும் வடவைத் தீ. **உச்சித** - தகுதிவாய்ந்த. **அடலே தோய்** - வலிமை பெற்ற. **மலயாசலத்தினில்** - பொதியை மலையில். **செனிப்பு உயிர்ப்பினை** - பிறக்கின்ற தென்றல் காற்றை. **அழலே என** - தீயேதான் என்று, காமவேதனையால் தென்றல் தீயாகச் சுடுவது இயல்பு. **கதித்து** - மிகுதியாகி. **சிகராலயத்திரள்கள்** - மலைக்கூட்டங்கள். **கொடி திருநடம்** - முருகவேளுக்கு உரிய கொடிக்கூத்து. **கழல்** - வீரக்கழல்களை அணிந்த. **பதத்துணை** - இரு திருவடிகளை. சிறிதும் என உம்மை கூட்டுக. **ஒவு அற** - நீங்காமல். **பதமூடே** - கால்களில், அத்துச் சாரியை கெட்டது. **உச்சியில்** -

தலையில். **இருள்** - ஆணவத்தையும், **மக** - பெரிய. **பற்று** - ஆசை. **புகர்** - புள்ளிகளை உடைய. **ஆனைவத்திரத்தனை** - யானை முகனை. **தனத் திளைப்பு** - நகில் முயக்கம். **குக்குடம் எனவே** - சேவல் போல. **பிகராகம்** - மாம்பழம். **முள்புறக்கனி** - பலா, இரண்டையும் கூறியதால் உபலட்சணமாக வாழைக்கனியும் உணர்த்தப்பட்டது. **பிரவாகம்** - வெள்ளம். **அகட்டினில்** - வயிற்றினில். **வைப்பு இசை** - இடமாக அமைந்துள்ள.

தான தந்தன தானான தானன தனதானா

தூய நின்பத வாரீசமே கதி-
யாய் அணைந்த மெஞ்ஞானாநு பூதியர்
தோய் பெரும் சுகம் ஈவாய் கொலோ? அலதுஉலகூடே
தோடம் மிஞ்சிய மாபாவி நீ என -
வே முனிந்திடுவாயோ? எனாமிகு
சோகம் ஒன்று அடிநாயேன் என் நீடு உளமருள்தீர்வான்,
நேய நெஞ்சகம் மீதே உமாபதி
சீர்பெறும் துதி தான் ஓதும் மால்மகன்
நீடு நன் கனவூடு ஏகி ஓதிய மொழிதானே
நேரஇங்கு அடியேனோடு நீ பக -
ராது இருந்திடல் சால்போ? உனாது அருள்
நீதி என்பது இதேயோ? பராபர! முதல்வோனே!
மாய விந்தை பல்வாறே செய் சூர் தவ
மான்மியம் புவி சேண்நாடர் ஓதுபு
வாழஅன்பொடு போராடு சேவக! முருகோனே!
வான் அணைந்திடு கான் நீடு சோலைக -
ளூடு பொங்கிய தேன் ஆறுபோல் வழி
வாய குன்றுகள் தோறு ஆடு சேவடி உடையானே!
ஆயன் நந்து அருளே தோய் தயா ஒரு
மேனி கொண்டு, உலகூடே குலாவி என்
ஆகுலம் தெறு சீபாத! போதக குருநாதா!
ஆவினன்குடி போல் ஆடல் நீடிய
மேன்மை தங்கிய பேரூரின் மேல்முக
ஆலயம்தனில் வாழ்வான வானவர் பெருமாளே! 12

**பெரும் சுகம்** - பேரின்பம். **தோடம்** - குற்றம். **மருள்** - மயக்கம். **நேய** - அன்புடைய. **துதி** - சயந்தன் சிவபெருமானை நினைந்து துதித்ததைக் கந்தபுராணம் சயந்தன் புலம்புறுபடலத்தில் காண்க. **மால்**

**மகன்** - இந்திரனின் மைந்தன், சயந்தன். **சூர்** - சூரபதுமனின் புவி - உலக மக்கள். **சேண் நாடர்** - வானோர். **கான்நீடு** - மணம் மிக்க. **வாய** - இடங்களை உடைய. **ஆயன்** - திருமால். **நந்து** - விரும்புகின்ற. **தயா** - கருணை. **ஆகுலம் தெறு** - கவலைகளைப் போக்குகின்ற. **சீபாத** - திருவடிகளை உடையவரே! **போதக** - உபதேசிக்கின்ற. **மேல்முக** - மேற்குத்திசையை நோக்கியுள்ள.

**நூற்பயன் வெண்பா**

கார் ஊர் பொழிலில் கலாப மயில் ஆடு திருப்
பேரூர்க் குகன் அருள்ச்சீர் பேணும் இயல்ச் - சீர்ஊர்
திருப்புகழ்ப் பா பன்னிரண்டும் செப்புநர்க்கு விண்சார்
பொருப்பு உலவு தாளே புகல்.

**கார் ஊர்** - மேகங்கள் தவழ்கின்ற. **கலாப** - தோகைச் சிறப்பு வாய்ந்த. **சீர் ஊர்** - சிறப்புப் பொருந்திய. **பொருப்பு உலவு** - மலைகளில் நடமாடுகின்ற.



# முருகன் திருப்புகழ்

தத்ததன தானா தனந்த                                        தனதானா

சத்தமறையோடு ஆகமங்கள்
சொற்ற நெறியூடே செல்கின்ற
சற்சனர்கள் தாம் ஆர்வம் மிஞ்சி                    இலகாரோ?
சற்று அருள் இலாது ஊனை அங்கி -
யில்ப் பெய்து அர மானார் பொருந்து -
தல்க்கருது தீயோர்கள் அந்த                    ணர்கள் ஆயே
நித்தம் உனை ஓவாது நெஞ்ச -
கத் தளியின்மேல் மேவல் கொண்டு
நிற்கும் உயர்வு ஆம் ஞான இன்பம்            அடையாரோ?
நிற்குணமதே மேல் எனும் சொல்
மட்டு உரைசெய் வாய் மூடும் வென்றி
நிற்பரவும் மேலோர் பொருந்தி                    மகிழாரோ?
நத்து அமைகை மால் ஆழி கண்டம்
உற்று இலகு பூணா அணிந்து
நல்த் தவசு தோய் தாருகன்தன்                னுடனே, சார்
நக்க அரி நேர் ஆயிரம் கொள்
வத்திரன் முனோன் மாய விந்தை
நத்தும் வடிவேல் ஏவும் எங்கள்                முருகோனே!
பொய்த் தனுவின் மேல் மானம் மிஞ்சு
பித்தர் அரசு ஆவேனை, அன்பு
புக்கவர்களோடு ஆளவந்த                    குருநாதா!
புத்துஅலர் பெய்தே வானின் உம்பர்
நித்தம் இமையார் நாடுகின்ற
பொற்புமலி பேரூர் அமர்ந்த                    பெருமாளே!

***சத்த மறை*** - ஒலிச்சிறப்பு மிக்க வேதங்கள். ***சொற்ற*** - காட்டுகின்ற. ***சற்சனர்கள்*** - நல்லோர். ***ஊனை*** - விலங்குகளின் மாமிசத்தை. ***அங்கியில் பெய்து*** - வேள்வித்தீயில் இட்டு. அர மானார் பொருந்துதல் கருது - தேவலோக மங்கையர்களை அணைய விரும்பும். ***தீயோர்கள்*** - வேள்வித்தீயை வழிபடுபவர், கொலை செய்யும் கொடியோர் என்பது தொனிப்பொருள். கொலை வேள்வி புரிவோரின் நோக்கம் மேலுலக இன்பமே என்பர். "கூட்டம் பெருக்கி, உயிர் கொன்று அனலில் வெந்து அருந்தி வேட்டவர் தாம் அளவில் மெய் ஆய - வாள்த்தடம்கண்

மின்னாரை அன்ன வியன் உலகில்த் தோய்ந்து முன்பு தின் ஆகம் கொள்வார் திறம்'' என்பார் வண்ணச்சரபர் (விற்பனம் 103) **அந்தணர்கள் ஆயே** - உண்மையான அருளுடையவர்கள் ஆகி, அந்தணர் என்போர் அறவோர் என்னும் தமிழ்மறையையும், அந்தணர் என்பது அழகிய தட்பத்தினை உடையார் என ஏதுப்பெயர் என்னும் பரிமேலழகர் உரையையும் நினைந்து கூறியது. **நெஞ்சகத்தளி** - உள்ளக்கோயில். **நிற்குணம் அதே** - பெயரோ வடிவோ இல்லாத நிலை மட்டுமே. **மூடும் வென்றி** - அடைக்கச் செய்யும் வெற்றி. **நந்து** - சங்கு. **ஆழி** - சக்கரம், சுதரிசனம். **கண்டம்** - கழுத்து. **பூணா** - நகையாக. **அரிநேர்** - சிங்கம் போன்ற. **வத்திரன்** - முகங்களை உடைய சிங்கமுகாசுரன். **முனோன்** - இவர்களுக்குத் தமையன், சூரன். **பொய்த்தனு** - நிலையற்ற உடல். **மானம்** - அபிமானம், ஆசை. **புத்து அலர்** - அன்று அலர்ந்த பூ. **உம்பர்** - தேவர்கள். **இமையார்** - கண்களைக் கொட்டாதவர்கள் ஆகி, முற்றெச்சம்.



# அரிநாராயணர் பதிகம்

**காப்பு வெண்பா**

*பாராயண மறை மெய்ப் பத்தர் இனம் வாழ்பேரூர்*
*நாராயணன் துதிப்பா நான் இசைப்பக் - கூர் ஆய*
*சக்கரமும் சங்கும் அணித் தார்க்கியனும் தங்கி என்னுள்*
*மிக்க இன்பம் எய்த நல்குமே.*

மறைப் பாராயண மெய்ப்பத்தர் என மாறுக. **தார்க்கியன்** - கருடன். **தங்கி** - நிலைத்து நின்று.

**நூல்**

(எண்சீர் விருத்தம்)

*ஒளி குலவு மரகதப் பொன் கிரி அனைய வடிவும்,*
*ஓங்கு அணிப் பீதாம்பரம் தோய் உந்தி மலர்ப் பொலிவும்,*
*களி குலவும் ஒப்பு இல் மந்தகாச மலர்வாயும்,*
*கருணை மழைபொழி நயனக் கமலமலர்த் துணையும்,*
*அளி குலவும் துளவு அணி பொன்அடி இணையும் துலங்க*
*அம்மையர்கள் மத்தியில், புள் அரசு இவர்ந்து, தோன்றி,*
*வெளி குலவும் திருக்காட்சி அளித்து அருள்வாய் - பேரூர்*
*விளங்கு அரிநாராயணப் பேர் மேயபெருமாளே!* 1

**பீதாம்பரம்** - மஞ்சள் வேட்டி. **உந்தி** - கொப்பூழ். **மந்தகாச** - புன்னகை தவழும். **நயன** - விழிகள் ஆகிய. **அளி** - வண்டுகள். **துளவு** - திருத்துழாய். **அம்மையர்கள்** - சீதேவி, பூதேவி. **புள் அரசு** - கருடன்.

*அண்டம் எல்லாம் உண்ட திருவாய் உடையாய்! எளிதில்*
*அளந்த திருவடி உடையாய்! அலகு இல் புவனத்தும்*
*கொண்ட உயிர்த் திரள்கள் எலாம் இயற்றும் வினை முழுதும்*
*கூர்ந்து உணர்ந்து கணம் தோறும் குறைவு இலது அங்கு அவைகள்*
*உண்டு அமையக் கூட்டிவைப்பாய்க்கு, ஏழைமையேன் துயரம்*
*உணர்த்திடல், பானுவின் முன் விளக்கு உயர்த்திடல் ஒப்பு அன்றோ?*
*வெண் தரங்கக் கடல் அனைய வளம் குலவும் பேரூர்*
*விளங்கு அரிநாராயணப் பேர் மேய பெருமாளே!* 2

**அண்டம்** - உலகங்கள். **அலகு இல்** - கணக்கற்ற. **புவனத்தும்** - உலகங்களிலும். **அங்கு** - அந்த உயிர்கள் இருக்கும் இடத்திலேயே. **பானுவின் முன்** - கதிரவனுக்கு எதிரே. **தரங்க** - அலைகளை உடைய.

கண் அறிவு, மூக்கு அறிவு, புறம் ஆம் தோல் அறிவு,
காது அறிவு, நாக்கு அறிவு கலந்து, அதனில்ப்
பெண் அறிவோடு ஆண் அறிவு ஆம் வேற்றுமை செய் மாயைப்
பேய் அறிவை அகற்றி, என்னுள் பிரியாது ஓங்கு உன்தாள்
எண் அறிவை ஈந்தருளி, அங்கு அதனுள் ஒன்றி,
யான் தான் என்றிடும் பேதம் இல்லை என விளங்கும்
விண் அறிவு ஈந்து, எனை ஆளவேண்டும் - அணிப் பேரூர்
விளங்கு அரி நாராயணப் பேர் மேய பெருமாளே! 3

**புறம்** - வெளியே (போர்வையாக) உள்ள. ஐம்புல இன்ப நுகர்ச்சி ஆகிய இணை விழைச்சு விழைவாகிய பேய் அறிவு என்க. அதனுள் என்றது தாளைத் தியானிக்கின்ற ஞானத்தை. **தான்** - இறைவன். "அறிவு ஒன்று அற நின்று அறிவார் அறிவில் பிரிவு ஒன்று அற நின்ற பிரான்" என்பார் அருணகிரிநாதர் தம் அநுபூதியில்.

பண்ணு கன்மத்து உற்பவம் ஆம் காயம் இது மாயப்
பகல்க் கனவு; ஈங்கு இதில் ஏது ஓர் பயன் என, மெய்ப் பத்தி
நண்ணும் அறிவினர் உரைத்தல் கேட்டும், அவர் உன்னை
நாடியதால் பெறும் பயனை ஞாலமிசைக் கண்டும்,
புண் உறவே படுத்தும் மன மாயை புரிசாலம்
பொருந்தி அயர்ந்து, இன்று நின்தாள் புகல் என வந்து அடைந்தேன்
விண்ணும் மண்ணும் இசை அருள்ச் சீர் ஈந்தருள்வாய் - பேரூர்
விளங்கு அரி நாராயணப் பேர் மேய பெருமாளே! 4

**கன்மத்து உற்பவம் ஆம்** - வினைகளால் உண்டாகின்ற. **காயம்** - உடல். **ஞாலமிசை** - உலகில். **புண் உறவே படுத்தும்** - துன்பத்தின் தொடர்பையே ஏற்படுத்தும். **சாலம்** - மாயம். **புகல்** - அடைக்கலம்.

கலை கொடுத்த விளக்கம் அதைக் கொண்டு, உன் அருட்பெருஞ்சீர்
கண்டவன் போல் ஏமாந்து, உள் களிப்பு அமைந்தே, துன்ப
மலை கொடுத்த மனப் பகையை உறவு எனக் கொண்டாடி,
வாழ்த்தி, அவத்து உழன்றிடும் துன்மதியேற்கு இன்பு ஓங்கு
நிலை கொடுத்தல் உன்பரமே; உனக்கு அபயம் ஆனேன்;
நீ கைவிடாது ஆண்டருள்வாய் - நிகழ்தரு தற்போத
விலை கொடுத்தார்க்கு ஈயும் மணி முகில் உருவா பேரூர்
விளங்கு அரிநாராயணப் பேர் மேய பெருமாளே! 5

**கலைகொடுத்த விளக்கமதைக் கொண்டு** - ஏட்டுக் கல்வியளவில் பெற்ற அறிவையே முழுமையானதாகக் கொண்டு, "கலையே பதறிக் கதறித் தலையூடு அலையே படுமாறு அதுவாய் விடவோ?", "கலை உரைத்த கற்பனையே நிலை எனக் கொண்டாடும் கண்மூடி வழக்கம்" என்பன போன்ற ஆன்றோர் மொழிகள் இவண் ஒப்பு நோக்கத் தக்கன. **களிப்பு** - மன நிறைவு, செருக்கு எனினும் ஆம். **துன்மதியேற்கு** - நல்லறிவு அற்ற எளியேனுக்கு. **தற்போத விலை கொடுத்தார்** - யான் எனது என்பதை அகற்றிய அடியார். **மணி** - நீலக்கல்.

**கனவில் உறும் பொருள்கள் இசை நனவினில் எய்தார் போல்,**
**கரி என என் உயிர் இசை உன் விரிஅருள்ப் பைஞ்சோதி**
**அனகஇயல் பெரும் சேவை கருவி கரணங்கள்**
**அற விழுங்கிச் சுடர்விடும் பேர் அன்பு அமையாது; அந்தோ!**
**கனகம் முதல் சொல் வாஞ்சைக் கடலுள் மூழ்குவித்துக்**
**கள்ளவினைப் பேய் ஆட்டக் கலங்கு அடியேன் முறைகள்**
**வினவி, உளம் இரங்கி அருள் விளக்கம் நல்காய் – பேரூர்**
**விளங்கு அரிநாராயணப் பேர் மேய பெருமாளே!** 6

**கரி என** - சாட்சியாக. **அனக** - குற்றமற்ற. **கருவி கரணங்கள்** - ஐம்புலன்களும் மனமும். **கனகம்** - பொன். **முறைகள்** - விண்ணப்பம், முறையீடு.

**மைஉலவும் கூர்விழி தோய் மங்கையரைப் பொன்னை**
**மண்ணை மதித்து, ஈட்டி வைத்து மயங்கி மடிவார்க்கு ஆம்**
**பொய் உலக வாழ்க்கையினில், எனை அமிழ்த்தி மாயை**
**புரிந்த செயல் இதுவரைக்கும் போதும்; இனி மேலே**
**கை உலவும் கனிபோல் உன் திருஅருள்ச் சீர் ஈந்து,**
**கரைஇல் பரமானந்தக் காட்சி அளித்து, என்றும்**
**மெய் உலவு தொண்டர் இசை கதி தருவாய் – பேரூர்**
**விளங்கு அரிநாராயணப் பேர் மேய பெருமாளே!** 7

**ஈட்டி வைத்து** - சம்பாதித்துச் சேமித்து. **கை உலவும் கனி** - அங்கை நெல்லி. **கரை இல்** - எல்லையற்ற. **இசை கதி** - பொருந்துகின்ற முத்தி, வினைத்தொகை.

**பத்தர் பலர் தம்மை முன்னாள் ஆண்டு, அவர் இச்சித்த –**
**படி ஆடல் புரிந்த அருள்ப் பண்பினை இந்நாளில்**
**இத்தரையில் காட்டாமல் இருந்தனை; உள்க் கருணை**
**இளைப்பு அடைந்து சோர்ந்ததுவோ? என்னே! பொய்மாயை**

*மெத்த இறுமாந்து உளதே? இதற்கு உன்அருள்த் துணையை*
*விட்டு அசையும் விறல் உளதோ? விரிஅருளாட்டு இயற்ற*
*மெய்த் தவர்கள் கிடைத்திலரோ? விளம்பிடுவாய் - பேரூர்*
*விளங்கு அரிநாராயணப் பேர்மேய பெருமாளே!* 8

பலர் தம்மை என்புழித் தம் பகுதிப்பொருள் விகுதி. **இச்சித்த படி** - விரும்பியவாறு. **விறல்** - வலிமை. **விரி** - மிக விரிவாக. **அருளாட்டு**-திருவிளையாடல்கள்.

*பொன் அளவும் திருக்குருகூரிடை மருவும் கவின்ஆர்*
*புளிமருவும் சடகோபன் புலங்கள் எலாம் விழுங்கிப்*
*பன்னு அளவு அற்று அமைந்த பரிபூரண ஆனந்தப்*
*பண்பு உடைய பரமபதம் பாவி என வெறுத்தோ*
*என்னளவில் எள்அளவும் தோன்றாதே மறைந்தது?*
*இயற்கை இன்பத்தினுக்கும் மறை செயற்கை இடம் உளதே?*
*மின் அளவும் கார்மேனி வித்தகனே! பேரூர்*
*விளங்கு அரி நாராயணப் பேர் மேய பெருமாளே!* 9

**பொன் அளவும்** - திருமகள் குடிகொண்டுள்ள. **திருக்குருகூர்** - ஆழ்வார்திருநகரி. **சடகோபன்** - நம்மாழ்வாருடைய. **பன்னு அளவு** - சொற்களால் உரைக்க இயலும் தன்மை. **மறை** - தான் ஒளிந்துகொள்கின்ற. **மின் அளவும்** - ஒளிரும்.

*குணம் தோறும் கலந்த சடதத்துவங்கள் தோறும்*
*கூடி உறும் உலகிடை, பேய்க் குரங்கு ஆம் என்மனம்தான்*
*கணம் தோறும் கலந்திடு நல்வினையால், தீவினையால்*
*களிப்படைந்தும் சலிப்படைந்தும் காலம் ஒழித்தேன்; உன்*
*மணம் தோய் பேர் அருள் புரண வைகுந்தம் ஆகும்*
*வாரிசத் தாள் குடிகொள் பெருவாழ்வை எந்நாள் அளிப்பாய்?*
*விணம் தோய் மாமணிமாட கூடம்இசை பேரூர்*
*விளங்கு அரி நாராயணப் பேர் மேய பெருமாளே!* 10

**குணம் தோறும்** - சத்துவம் முதலிய முக்குணங்களோடும். **சட** - அறிவுத்தன்மை அற்ற. **தத்துவங்கள் தோறும்** - ஐம்பூதங்கள் போன்ற இயற்கைப் பொருள்களோடும். **கூடி** - சேர்வதால் உண்டாகின்ற உலகத்தின்கண். **கணம்தோறும்** - ஒவ்வொரு நொடியிலும். **புரண** - முழுமையான, பூரணம். **விணம்** - ஆகாயம். விண்ணம் என்பதன் இடைக்குறை.

*மாயன் என்றும் மாதவன் என்றும் திருப்பேர் வாய்ந்து*
*மறக் கருணை அறக்கருணை வழங்கு தயை, காசை*
*வீ அனைய திருமேனி கொண்டு, திருப் பேரூர்*
*விளங்கு அரிநாராயணப் பேர் மேய பெருமாளைச்*
*சேயன் என்று எய்க்காது, அவன் மெய்ச் சேயன் என்று வாழும்*
*சிறப்பு அமைக்கும் வண்ணம் அணிச் சிரவை வருபாலன்*
*தாயன் என்று துதித்து உவக்கும் பா புகன்று ஏத்தெடுக்கும்*
*தக்கவர்கள் இக பரசாதனம் பெறும் வல்லாரே!* 11

**வழங்கு தயை** - கொடுக்கின்ற கருணையையும். **காசை வீ** - காயாம்பூ. சேயன் - 1.தூரத்தில் உள்ளவன், 2. மைந்தன். **தாயன்** - உறவினன், உரிமை உடையவன், வள்ளல். ஏத்தெடுக்கும் - **போற்றுகின்ற.** இகபர சாதனம் - இம்மை மறுமை நன்மைகளுக்கு வேண்டிய கருவிகள்.



# பிற்சேர்க்கை

*சிரவையாதீனம் தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் அவர்களால் திருப்பேரூர்த் தொடர்பாக இயற்றப்பட்டுள்ள சிற்றிலக்கியங்களுள் இப்பதிப்பில் இடம்பெற்றுள்ளவை தவிர ஏனையவற்றிலிருந்து ஒன்றிரண்டு செய்யுள்கள் இங்கு ஒரு சோற்றுப்பதமாக உரையுடன் தரப்படுகின்றன. இவை அனைத்தும் ஒரே தொகுதியாக விளக்கமான உரையுடன் செம்பதிப்பாக வெளிவரப் பட்டிவிநாயகர் திருவருள் புரிவாராக.*

## 1. திருப்பேரூர்க் கோவை

*அகப்பொருள் பற்றிய ஐந்திணைக் கோவை ஆகிய இது பாயிரம் 3, நூல் 477 என மொத்தம் 480 கட்டளைக் கலித்துறைகளால் ஆனது. மூலம் மட்டும் 1976 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது. இப்பிரபந்தத்தில் இருந்து இரண்டு காரிகைகள்.*

**1**

*கிளவி : கைக்கிளை; துறை : குறிப்பறிதல்; தலைவன் கூற்று.*

*சோலை ஒன்றில் தனியாக இருந்த அழகிய கன்னிப் பெண் ஒருத்தியை வாலிபன் ஒருவன் கண்டு காதல் கொண்டான். தொடர்ந்து அப்பெண்ணும் தன்னை விரும்புகிறார் என்று அவன் குறிப்பால் அறிவது இத்துறைப் பொருள்.*

***நயக்கும் தகைத்திருப் பேரூர்***
***அங்கி நயனம், விண்ணோர்***
***கயக்கும் படிஒரு வேள்க் காய்ந்துஓர்***
***வேள்வரக் காட்டிடல் போல்***
***மயக்கும் பிணிமுன்பு இசைத்துப் பின்***
***மாற்று அருள் மாமருந்தாய்***
***வியக்கும் படியும் புரியும் மின் -***
***னார்மை விழித் துணையே.*** *(5)*

**நயக்கும் தகைத் திருப்பேருரர்** - அனைவராலும் விரும்பப்படும் தன்மையை உடைய பட்டிப்பெருமான்.
**அங்கி நயனம்** - (நெற்றியில் உள்ள) நெருப்புக் கண்.
**விண்ணோர் கயக்கும்படி** - வானுலகத் தேவர்கள் வெறுக்குமாறு.

**ஒரு வேள்க் காய்ந்து** - வேள் எனும் பெயர் உடையவர்களுள் ஒருவனாகிய மன்மதனை எரித்த

**ஓர் வேள் வரக்காட்டிடல் போல்** - மற்றொருவராகிய (செவ்வேள்) முருகப்பெருமானைத் தோற்றுவித்தருளியதைப் போன்று

**மின்னார் மைவிழித் துணை** - மின்னலைப் போன்ற இம்மங்கையின் மை பூசப்பெற்ற இரண்டு கண்களும்

**மயக்கும் பிணி முன்பு இசைந்து** - என் அறிவை மயக்கித் துன்பத்தைத் தந்த காமநோயை முதற்கண் உண்டாக்கி

**பின் மாற்று அருள் மா மருந்தாய்** - அதற்குப் பிறகு அந்நோயைத் தீர்க்கும் சிறந்த அவுடதம் ஆகவும்

**வியக்கும்படி புரியும்** - (என் உள்ளம்) வியப்படையுமாறு அன்புகனிந்த பார்வையை அளிக்கும்.

***குறிப்புரை :***

*விழித்துணை அங்கி நயனம் காட்டிடல் போல் வியக்கும்படிப் புரியும் எனப் பொருள் முடிபு காண்க. உவமேயத்தில் உள்ள முன், பின் என்னும் சொற்களை உவமானத்துடனும் இணைத்துக் கொள்க. வியக்கும்படியும் என்புழி உம்மை அசை. ஈற்று ஏகாரமும் அசை.*

*தலைவி முதலில் தலைவனைப் பார்த்த பார்வை எல்லோரையும் பார்ப்பதைப் போன்ற பொதுப்பார்வை. அடுத்தது அவனைக் காதலோடு நோக்கிய சிறப்பு நோக்கம். முன்னது நோய் தந்தது; பின்னது மருந்தாயிற்று.*

***இருநோக்கு இவள்உண்கண் உள்ளது; ஒருநோக்கு***
***நோய்நோக்குஒன்று அந்நோய் மருந்து (1091)***

*என்பது வள்ளுவர் வான்மொழி.*

*இந்தப் பாடலின் உவமை நயம் ஆழ்ந்து சிந்தித்துத் துய்த்து மகிழத்தக்கது.*

## 2

*கிளவி : வரைவு மலிவு. துறை : தலைவி அணங்கைப் பராநிலை காட்டல். தோழி கூற்று.*

*தலைவி தன் திருமணம் தடையின்றி நிறைவேறுவதற்காகத் தேவியை வழிபடுதலைத் தோழி தலைவனுக்குக் காட்டுதல் இத்துறையின் பாடுபொருள்.*

***புள் இயை தண்டலைப் பேரூரர்***
***வெள்ளிப் பொருப்பு அனையாய்!***
***"உள் இயை என் கருத்து உன் கருத் -***
***தின் முடி ஒல்லை" என்றே***
***வள் இயை அன்பினில் வள்ளியை***
***வாழ்த்தும் எம் மாது இயல்ச்சீர் -***
***கள் இயை தார் அண்ணலே! பார்த்தி***
***இன்பம் கரை அறவே.*** *(315)*

**புள் இயை தண்டலைப் பேரூரர்** - பறவைகள் நிறைந்த சோலைகளால் சூழப் பெற்ற பேரூரின் இறைவனுக்கு உரிய
**வெள்ளிப் பொருப்பு அனையாய்** - வெள்ளியங்கிரியைப் போல உயர்ந்த தலைவனே!
**உள் இயை என் கருத்து** - (தலைவனுடன் திருமணம் இனிது நிறைவேற வேண்டும் என்னும்) என் மனத்தின் எண்ணத்தை
**உன் கருத்தின் ஒல்லை முடி எனவே** - நீங்கள் மனது வைத்து விரைவில் முற்றுவித்தருள வேண்டும் என்று
**வள் இயை அன்பினில்** - மிகுதியான பத்தியுடன்
**வள்ளியை வாழ்த்தும் எம் மாது இயல் சீர்** - வள்ளி நாச்சியாரை வழிபடுகின்ற எம்முடைய தலைவியின் சிறப்பை
**கள் இயை தார் அண்ணலே** - தேன் நிறைந்த மலர்மாலைகளை அணிந்துள்ள தலைவனே
**இன்பம் கரை அற பார்த்தி** - உன் மகிழ்ச்சி எல்லை இன்றிப் பெருகும்படிக் காண்பாயாக.

***குறிப்புரை :***

*மிகப் பெரும்பாலான கோவைகளில் தலைவி தன் திருமணத்திற்குமுன் துர்க்கையை வழிபட்டதாகவே உள்ளது. இவர் வள்ளி தேவியை வழிபட்டதாகக் கூறுகிறார். ஏன்? கற்பமைந்த களவுக் காதல் நெறிக்கு வழிகாட்டியாகவும் முன்னோடியாகவும்*

விளங்குபவள் வள்ளிநாயகி. அந்த நெறியில் ஒழுகி வெற்றி பெற்றவள் பேரூர்த்தலைவி. இக்கருத்தைச் சுவாமிகள் குறிப்பாகத் தலைவனோடு உடன் போகும் தலைவிக்கு, "முன் போந்து அணி ஆர் அன்னம் பிடி நடை ஈபவள் வள்ளி கொல்? (350) என வள்ளி தேவியை ஐய உவமை ஆக்குவதன் வழி உணர்த்திவிடுகிறார்.

இக் காரிகையில் என் கருத்தை உன் கருத்தின் முடி என்பது இரட்டுற மொழிதல். என் எண்ணத்தை நீ மனம் வைத்து (அருள் கூர்ந்து) நிறைவேற்று என்பது ஒன்று; உன் ஆசையை நீ எப்படி நிறைவேற்றிக் கொண்டாயோ அப்படி என் நோக்கத்தையும் முடித்து வை என்பது மற்றொன்று. இது மட்டும் அல்லாமல் சுவாமிகள் தலைவனின் குலத்தவளாக வள்ளியைக் குறிப்பிடுகிறார். இது அடுத்த பாடலில், "நம் குலக்கொடி ஆகி விளங்கும் வள்ளி தாள் பற்றிய அணங்கு" (316) என்னும் தலைவன் கூற்றால் தெரிய வருகிறது. கற்புத் திறம் மிக்க பேரூர்த் தலைவி தன் காதலனின் குலக் கொடியைப் பரவுவது இயல்பான ஒன்றுதானே.

# 2. திருப்பேரூர்க் கலம்பகம்

*பாயிரம் 2, நூல் 100, நூற்பயன் 1 என மொத்தம் 103 செய்யுள்களாலியன்ற இவ்விலக்கியம் தமிழில் உள்ள சிறந்த கலம்பகளுள் ஒன்றாகக் கருதப்படுகிறது. இக் கலம்பகம் புலவர் ப.வெ.நா. அவர்களின் விளக்கமான உரையுடன் 1978 இல் வெளியிடப்பட்டுள்ளது. எனினும் இப்பொழுது படிகள் இன்மையால் இரண்டாம் பதிப்பை எதிர் நோக்கியுள்ளது.*

**[பன்னிரு சீர் விருத்தம்]**

***நீர் ஆர் பவளச் சடாடவி மேல்***
***நிலவு நிலவும் கூவிளமும்,***
***நிறைகள்க் கடுக்கை தாதகியும்,***
***நீள் கொக்கு இறகும், தூர்வையும், வேள்***
***கார் ஆர் உடலை நீற்றும்அனல்க்***
***கண் ஆர் நுதலும், பரிதி மதிக்***
***கண்ணும், மந்த காசம்மலர்***
***கனிவாய் முகமும், கரங்களும், பொய்ப்***
***போர்ஆர் மாயை நீற்றுபத அம் -***
***புயமும், பிறவும் பொலிய உமை***
***பொருந்தும் இடப் பாகமும் கண்டு என்***
***புந்தி விழி மெய் குளிரேனோ?***
***பாரார் புகழ் பேரூரா! மெய்ப்***
***பத்தர் உளப் பங்கயத்து ஊறும்***
***பரமானந்தச் செழுந்தேனே!***
***பரனே! பட்டிப் பெருமானே!*** *31*

**பாரார் புகழ் பேரூரா** - உலகத்தவர்களால் போற்றப்படும் பேரூர்த் தலத்து இறைவனே

**மெய் பத்தர் உள பங்கயத்து ஊறும்** - உண்மை அன்பர்களின் மனம் ஆகிய தாமரையில் ஊறுகின்ற

**பரம ஆனந்த செழும் தேனே** - பேரின்பம் ஆகிய செழுமை மிக்க தேன் போன்றவரே

**பரனே** - முதற் பரம்பொருளே

**பட்டிப் பெருமானே** - பட்டீசர் என்னும் திருநாமம் பெற்றுள்ள சிவபெருமானே

**நீர் ஆர் பவள சடா அடவி மேல் நிலவும் நிலவும்** - கங்கையாறு பொருந்தியதும், பவளம் போற் சிவந்ததும் ஆகிய சடைக்காட்டின்மீது விளங்குகின்ற பிறைச் சந்திரனையும்

**கூவிளமும்** - வில்வத்தையும்

**நிறைகள் கடுக்கை தாதகியும்** - தேன்நிறைந்த கொன்றை மலர்கள் மற்றும் ஆத்தியையும்

**நீள்கொக்கு இறகும்** - கொக்கின் நீண்ட சிறகினையும்

**தூர்வையும்** - அறுகம் புல்லையும்

**வேள் கார் ஆர் உடலை நீற்றும் அனல் கண் ஆர் நுதலும்** - மன்மதனின் கரிய உடலைச் சாம்பராக்கும் நெருப்பு விழி பொருந்திய நெற்றியையும்

**பரிதி மதி கண்ணும்** - சூரியன் சந்திரன் ஆகிய மற்ற இரண்டு விழிகளையும்

**மந்தகாசம் மலர் கனிவாய் முகமும்** - புன் முறுவல் பூக்கின்றதும் கொவ்வைப் பழத்தைப் போன்றதும் ஆகிய வாயிற்கு இடம் ஆகிய திருமுகத்தையும்

**கரங்களும்** - திருக்கைகளையும்

**பொய் போர் ஆர் மாயை நீற்று பத அம்புயமும்** - நிலையற்ற பொருள்களின் பொருட்டு மனப் போராட்டத்தை ஏற்படுத்தும் மாயா மலத்தை அழித்து ஒழிக்கின்ற திருவடித் தாமரைகளையும்

**பிறவும்** - ஏனைய பிற உறுப்புகளையும், புனைவுகளையும்

**பொலிய உமை பொருந்தும் இடப்பாகமும்** - நன்கு விளங்குமாறு பார்வதி தேவி இணைந்துள்ள இடப்பாகத்தையும்

**கண்டு** - தரிசித்து

**என்புந்தி விழி மெய் குளிரேனோ** - அடியேன் அறிவிலும் பார்வையிலும் உடலிலும் (மலங்களின் வெம்மை நீங்கி சிவானுபவம் ஆகிய) குளிர்ச்சியை அடைய மாட்டேனோ? அடைய அருள் புரிய வேண்டும் என்பது குறிப்பு.

*குறிப்புரை :*

*இச் செய்யுளில் இறைவனின் திருஉருவம் சடைமுதல் திருவடிவரை கேசாதிபாதமாக நன்கு காட்டப்பட்டுள்ளது. சிவபெருமானின் தியானத்திற்கு மிக உகந்த திருப்பாடல் இது.*

*பத்தர் உளப்பங்கயத்து ஊறும் தேன் என்றது, 'சிறந்தடியார் சிந்தனையுள் தேன் ஊறி நின்று'' (சிவபுராணம்) என்னும் மணிவாசகத்தின் எதிரொலி.*

கொக்கு வடிவமாக இருந்த பகாசுரன் என்னும் ஓர் அசுரன் எல்லா உலகங்களையும் தன் வயிற்றில் அடக்கிக் கொள்ள முயன்ற போது சிவபெருமான் அவனை அழித்து, அந்த வெற்றிக்கு அடையாளமாக அதன் இறகினைத் தலையில் சூடிக் கொண்டார் என்பது தொன்ம வரலாறு. இது கச்சியப்ப முனிவரால் தம் பேரூர்ப் புராணத்தில்,

***அண்டம் யாவையும் அகட்டு இடத் தொடங்கிய ஆற்றல்***
***மண்டும் ஓர் பகாசுரன் உயிர் வாட்டிவார் இறகு***
***கொண்டு வேணியில் செருகினன் குறைஅறு வலியோர்***
***கண்டு தீயன கருதுறாது அடங்குதற் பொருட்டே***

*(கௌரி தவம். 128)*

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

# 3. பச்சைநாயகி பிள்ளைத்தமிழ்

தவத்திரு. கந்தசாமி சுவாமிகளால் இயற்றப்பட்டுள்ள ஆறு பிள்ளைத்தமிழ் நூல்களுள் இது ஒன்றுதான் பெண்பாற் பிள்ளைத்தமிழ். நல்ல கற்பனைகளும் அருமையான சொல்லாட்சிகளும் நிறைந்த வளமான இந்த நூல் 1940 ஆம் ஆண்டு முதல் பதிப்பாக வெளிவந்துள்ளது. இரண்டாம் பதிப்பு சுருக்கமான உரையுடன் 1974 இல் வந்துள்ளது. எனினும் இப்பொழுது படிகள் இல்லை. நல்ல விளக்கமான உரையுடன் ஆய்வுப்பதிப்பாக மூன்றாவது பதிப்பு வெளிவர வேண்டும்.

**[பன்னிருசீர் விருத்தம்]**

***கதியே வருக! விதி ஒழிக்கும்***
***கதிரே வருக! உள்புறம்தோய்***
***கருவி கரணம் கலந்து இனிக்கும்***
***கரும்பே வருக! அருள்ச் சேம***
***நிதியே வருக! மலமாயை***
***நிரப்பும் நிரப்பை அழிக்கும் இன்ப***
***நிறைவே வருக! கன்னிஎன***
***நின்றே அனைத்தும் ஈன்றருள் அம் -***
***புதியே வருக! அவிர்பொன்னம்***
***பொருப்புச் சிலையார் விருப்புறும் அற் -***
***புதமே வருக! எமக்கு அமைமெய்ப்***
***புகலே வருக! சிவஞான***
***மதியே வருக! திருப்பேரூர்***
***வாழ்வே வருக! வருகவே!!***
***மகிமைப் பச்சை மரகதமெய்***
***வல்லீ வருக! வருகவே!!*** (5)

**கதியே வருக** - நாங்கள் பெற வேண்டிய முந்திப் பேறே எழுந்தருள்க.
**விதி ஒழிக்கும் கதிரே வருக** - ஊழ்வினை ஆகிய பனியை நீக்கும் சூரியன் போன்றவரே!...
**உள்புறம் தோய்** - உடலுக்கு வெளியிலும் உள்ளிலும் அமைந்துள்ளன ஆகிய
**கருவி கரணம் கலந்து இனிக்கும்** - ஐம்புலன்கள், மனம் முதலிய நான்கு அகக் கருவிகள் ஆகிய எல்லாவற்றோடும் இயைந்து மகிழ்ச்சியை ஊட்டும்
**கரும்பே வருக** - கரும்பு போன்ற அம்மையே!...

**அருள் சேம நிதியே வருக** - *திருவருள் ஆகிய வைப்புப் பொருள் போன்றவரே!...*

**மல மாயை நிரப்பும் நிரப்பை அழிக்கும்** - மும்மலங்களுள் ஒன்று ஆகிய மாயையால் நிறைக்கப்படும் வறுமையை இல்லாமல் போக்குகின்ற

**இன்ப நிறைவே வருக** - மகிழ்ச்சியின் முழுமையே!...

**கன்னி என நின்றே** - தன் கன்னிமையை இழக்காத மங்கையாக நிலைத்திருந்தவாறே

**அனைத்தும் ஈன்றருள்** - (உலகங்களின் இயங்குதிணை நிலைத்திணைப் பொருள்கள்) எல்லாவற்றையும் தோற்றுவித்தருளிய.

**அம்புதியே வருக** - கடல் போன்றவரே!...

அவிர் பொன்னம்பொருப்புச் சிலையார் விருப்புறும் - விளங்குகின்ற பொன்மலையை வில்லாக ஏந்திய பட்டிப்பெருமானால் காதலிக்கப்படும்.

**அற்புதமே வருக** - பெருவியப்புக்குரியவரே!...

எமக்கு அமை மெய்ப் புகலே வருக - அடியேம் ஆகிய எங்களுக்கு வாய்த்துள்ள உண்மையான புகலிடமே...

**சிவஞான மதியே வருக** - பதியறிவாகிய தண்ணொளியைப் பரப்புகின்ற சந்திரனைப் போன்றவரே!...

**திருப்பேரூர் வாழ்வே வருக வருகவே** - திருப்பேரூர்த் தலத்தின் சிறப்புக்குக் காரணாக இருப்பவரே!...

**மகிமைப் பச்சை மரகத மெய் வல்லீ** - புகழ் மிக்க பசிய ஒளியை உடைய மரகத மணியைப் போன்ற திருமேனியைப் பெற்ற கொடி போன்றவரே!

**வருக வருகவே** - எம் அன்பான அழைப்பை ஏற்று இங்கு எழுந்தருள்வீராக.

*குறிப்புரை :*

*கதி என்புழி முத்திப் பேற்றுக்குக் காரணம் ஆகிய திருவருளை (சத்தி) முத்தி என்றே கூறியது உபசார வழக்கு. உள்புறம் தோய் கருவி கரணம் என்றது எதிர் நிரனிறை. இனிக்கும் கரும்பே என நாச்சுவையைக் கூறியது ஏனைய விடயங்களுக்கும் உபலட்சணம். மலையையே வளைத்து வில்லாக்கும் பேராற்றல் படைத்தவரையே விரும்புமாறு செய்வதால் அற்புதமே என்றார். வாழ்வுக்குக் காரணமானவரை வாழ்வாகவே கூறியது உபசார வழக்கு.*

# 4. பிறவாநெறிச் சிலேடை வெண்பா

*காப்பு வெண்பா 1, நூல் 101, நூற்பயன் 1 என மொத்தம் 103 நேரிசை வெண்பாக்களால் ஆகிய பிறவாநெறிச் சிலேடை வெண்பா இதுவரையில் அச்சிடடப்படவில்லை. இத்தகைய சிலேடை வெண்பா மாலைகளைப் போன்றே இதுவும் முற்பாதி சிலேடையணி பெற்றும், பிற்பாதி மடக்கணி பெற்றும் அமைந்துள்ளது.*

**1**

**[நேரிசை வெண்பா]**

***தண்தருபூஞ் சோலைகளும் தக்கபுலவோர் நாவும்***
***வண்டமிழ்களார்ந்த பிறவாநெறியே - அண்டம்உய்ய***
***நஞ்சுஉண்டு அனத்தம் உறா நாயகன், தானம் பொழியும்***
***அம்சுண்டன் அத்தன் அகம்.*** *(3)*

**தண்தருபூஞ்சோலைகள்** - குளிர்ச்சியைத் தருகின்ற மலர்ப்பொழில்கள்

**வண்டு அமிழ்கள் ஆர்ந்த** - தேனீக்கள் வந்து படிவதற்குக் காரணம் ஆகிய தேன் நிறைந்த

**பிறவாநெறியே** - திருப்பேரூர்த்தலம். ஏ அசை.

**தக்க புலவோர் நாவு** - தகுதி வாய்ந்த அறிஞர்களின் நாக்கு

**வண் தமிழ்கள் ஆர்ந்த** - வளமுடைய தமிழ் நூல்களால் நிறைந்துள்ள (கூறுகின்ற என்றபடி)

**பிறவா நெறியே** - திருப்பேரூர். ஏ அசை

**அண்டம் உய்ய நஞ்சு உண்டு** - உலகங்கள் எல்லாம் அழிவிலிருந்து தப்புமாறு (பாற்கடலில் தோன்றிய) ஆலகாலவிடத்தைத் தான் அருந்தியும்

**அனத்தம் உறா நாயகன்** - அழியாத தலைவனும்

**தானம் பொழியும் அம் அண்டன் அத்தன் அகம்** - மதநீரைச் சொரிகின்ற அழகிய துதிக்கையை உடைய விநாயகப் பெருமானின் தந்தையும் ஆகிய சிவபெருமான் வாழும் பதி ஆகும்.

*குறிப்புரை :*

*இரண்டாம் அடியில் வண்டமிவ்களார்ந்த என்னும் சொற்றொடர்* சோலைகள் புலவோர்கள் என்னும் எழுவாய்களுக்கு இணங்க முறையே வண்டு அமிழ்கள் ஆர்ந்த எனவும் வண் தமிழ்கள் ஆர்ந்த

எனவும் இருவகையாகப் பிரிந்து பொருள் தருகிறது. நஞ்சு உண்டும் எனச் சிறப்பும்மை விரிக்க. பிறவாநெறி அத்தன் அகம் என்பது பொருள் முடிபு.

## 2

**ஒண்தரள மாலைகளும் ஓங்கு இலிங்க மெய்வடிவும்**
**மண்டபத்தாலுற்ற பிறவாநெறியே - தொண்டர் முடி**
**சூட்டு திருக்கழல் ஆர் தோடகத் தாளார், மதனை**
**வீட்டு திருக்கு அழலார் வீடு.**

**ஒண்தரள மாலைகளும்** - ஒளி வீசுகின்ற முத்துச் சரங்கள்
**மண்டபத்து ஆலுற்ற** - மண்டபங்களில் அசைந்து கொண்டுள்ள
**பிறவா நெறியே** - ............
**ஓங்கு இலிங்க மெய் வடிவு** - உயர்ந்த சிவலிங்கம் ஆகிய நிலைத்த திரு உருவம்.
**மண் தபத்தால் உற்ற** - உலக மக்களின் தவத்தினால் தோன்றிய
**பிறவாநெறி ஏ தொண்டர் முடி சூட்டு** - அடியார்களின் தலையின்மேல் அணிவிக்கப்படுவதும்
**திரு கழல் ஆர்** - அழகிய வீரக்கழல் என்னும் அணிகலன் பொருந்தியதும் ஆகிய
**தோடகத் தாளார்** - தாமரை போன்ற திருவடிகளை உடையவரும்
**மதனை வீட்டு திருக்கு அழலார் வீடு** - மன்மதனை அழித்த நெருப்புக் கண்ணை உடையவரும் ஆகிய சிவபெருமான் வீற்றிருக்கும் தலம் ஆகும்.

***குறிப்புரை :***

மண்டபத்தாலுற்ற என்னும் தொடர் மாலை, வடிவம் என்பவனவற்றிற்கு ஏற்ப முறையே மண்டபத்து ஆலுற்ற எனவும், மண்தபத்தால் உற்ற எனவும் இருவகையாகப் பிரிந்து பொருள் தருகிறது. மெய் வடிவு என்புழி அழிவற்று நிலைத்த திருவுருவம் என்றும் உடலின் வடிவம் என்றும் இருவகையாகப் பொருள் கொள்க. மெய் வடிவம் - உறுப்புகள் இல்லாவிட்டாலும் அது இறைவனின் அருவுருவம் என்பதை இது குறிக்கிறது. மண் - ஆகுபெயரால் மக்களை உணர்த்திற்று. தபம் - தவம். திருக்குஅழலார் என்பதை அழல்த் திருக்கார் என மாறுக.

# 5. திருப்பேரூர் யமகவந்தாதி

*காப்புச் செய்யுள் ஒன்று, நூல் நூறு என மொத்தம் 101 கட்டளைக் கலித்துறைகளால் ஆன இந்த யமக அந்தாதி இதுவரை அச்சுவாகனம் ஏறவில்லை. தவத்திரு. கந்தசாமி சுவாமிகளின் பழைய கையெழுத்துப் படிகளிலிருந்து அண்மையில் தான் இந்த அந்தாதி கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. திருப்பேரூரின் ஏனைய பிரபந்தங்களோடு பிறைக்கவியாலான இந்த அந்தாதியும் பதிப்பு வெளிச்சத்துக்கு வர வேண்டும்.*

*யமகம் என்பது நான்கு அடிகளிலும் முதல் சில எழுத்துக்கள் (மிகக் குறைந்தது நான்கு) ஒன்றாகவே அமைந்து வேறுவேறு பொருள் பயப்பதாக இயற்றப்படுவது ஆகும். சொல்லணிகளுள் இது மடக்கின்பாற்படும். யமகத்தின் அமைப்பை உணர்ந்து கொள்ள வாய்ப்பாகச் சந்தி பிரிக்காத சரியான யாப்பு வடிவும், சந்தி பிரித்த வடிவம் என்னும் இரண்டும் காட்டப்படுகின்றன.*

**1**

**அருளுந் துருவ திருப்பேரை**
**யாயென்றழைப்பவர்முன்**
**னருளுந்துருள் பொழுதிற்றோற்றி**
**யன்னவராவல்முற்ற**
**வருளுந் துருவந்தந் தாயென்**
**னளவிலருள் கிலைபொய்**
**யருளுந்துருமப் புழுப்போ**
**லலைத்தனை யாவியப்பே.**

**அருள் உந்து உருவ! திருப்பேரை -**
**யாய் என்று அழைப்பவர் முன் -**
**னர் உளுந்து உருள் பொழுதில் தோற்றி**
**அன்னவர் ஆவல் முற்ற**
**அருளும் துருவம் தந்தாய்; என்**
**அளவில் அருள்கிலை; பொய் -**
**யருள் உந்து உருமப் புழுப்போல்**
**அலைத்தனை; ஆ! வியப்பே!**

**அருள் உந்து உருவ** - *திருவருளைப் பொழிகின்ற உருவத் திருமேனியை உடையவரே.*

**திருப்பேரையாய்** - திருப்பேரூர் இறைவனே!

**என்று அழைப்பவர் முன்னர்** - என்றெல்லாம் போற்றிப் புகழ்ந்து கூப்பிடுகின்றவர்களுக்கு எதிரே

**உளுந்து உருள் பொழுதில் தோற்றி** ; ஓர் உளுந்து மணி உருள்கின்ற அளவு மிகக்குறுகிய நேரத்திற்குள்ளேயே காட்சியளித்து

**அன்னவர் ஆவல் முற்ற அருளும் துருவம் தந்தாய்** - அவ் வடியார்களின் விருப்பங்கள் அனைத்தையும் நிறைவேற்றியருளும் உறுதியை வழங்கினீர்கள்

**என் அளவில் அருள்கிலை** - (ஆனால் தேவரீர்) என்னைப் பொறுத்தவரையில் திருவருள் புரியவில்லை.

**பொய்யருள்** - மெய்யறிவோ நிலைத்த தன்மையோ இல்லாத உலகியல் வாதிகளுக்கு இடையே

**உருமப் புழுப்போல் அலைத்தனை** - வெய்யிலில் சிக்கிய எலும்பில்லாத புழுவைப் போன்று அடியேனை வருந்தவிட்டுவிட்டீர்கள்.

**ஆ! வியப்பே** - இது மிக ஆச்சரியத்திற்குரிய ஒரு செயலே ஆகும்.

*குறிப்புரை :*

*அருளுந்துரு என்னும் ஆறு எழுத்துக்கள் மாறாமல் வேறுவேறு பொருள் தருமாறு மடங்கி வந்துள்ளன.*

*எளியார்க்கு இரங்கும் கருணையும் வேண்டுதல் வேண்டாமை இலாத நடுநிலையும் வாய்ந்த தேவரீர் முற்காலத்திய அடியார்களுக்கு விரைவில் திருவருள் புரிந்திருக்கிறீர்கள். ஆனால் எளியேன் எப்படியெல்லாம் அழைத்து முறையிட்டாலும் சற்றும் கருணை காட்டுவதில்லை. அதுமட்டுமல்லாமல் அடியார் கூட்டத்தில் கூட இருக்க விடாமல் பாமரர்களுடனேயே கலந்து கலங்கச் செய்கிறீர்கள். தங்களின் இந்த முரண்பாட்டிற்குக் காரணம் தெரியவில்லை. இது வியப்பிற்குரியது என்றவாறு.*

## 2

***அண்டரங் கங்கலை யப்புரங்***
***கைக் கொண் டரசுபுரி***
***யண்டரங் கங்கலை யப்புன் -***
***னகைசெய் தருளுவையா -***
***னண்டரங் கங்கலை யங்கத்தை***
***நீக்கி யருட்கணுய்ப்பா***
***யண்டரங் கங்கலை யார்காஞ்சிப்***
***பேரை யமைசிவனே*** *(8)*

*அண்டர் அங்கங்கு அலையப் புரம்*
*கைக்கொண்டு அரசுபுரி*
*அண்டர் அங்கம் கலையப் புன் -*
*னகை செய்தருளுவை! யான்*
*அண் தரங்கம் கலை அம் கத்தை*
*நீக்கி அருள்க்கண் உய்ப்பாய் -*
*அண் தரங்கம் கலை ஆர் காஞ்சிப்*
*பேரை அமை சிவனே!*

**அண்டர் அங்கங்கு அலைய** - தேவர்கள் பல இடங்களிலும் திரிந்து வருந்தும்படி

**புரம் கைக் கொண்டு** - பொன், வெள்ளி, இரும்புக் கோட்டைகளைத் தன்வசப்படுத்திக் கொண்டு

**அரசுபுரி அண்டர் அங்கம் கலைய** - ஆட்சி புரிந்த வித்யுன்மாலி முதலிய மூன்று பகைவர்களின் உடல்களும் நீறு ஆகும்படி

**புன்னகை செய்தருளுவை** - முறுவலித்த பட்டிப்பிரானே

**யான் அண்** - அடியேன் பற்றியிருக்கின்ற

**தரங்கம் கலை அம் கத்தை நீக்கி** - மனக்கலக்கத்தை ஏற்படுத்துகின்ற ஏட்டுக் கல்வியாகிய செருக்கு மிகுந்த கூச்சலை அகற்றிவிட்டு

**அருள்க்கண் உய்ப்பாய்** - தேவரீரின் திருவருளை அடையத் தக்கதாகிய பத்தி நெறியில் என்னைச் செலுத்துவீராக.

**அண் தரங்கம் கலை ஆர் காஞ்சி** - தன்பாற் பொருந்திய அலைகளையும் முதலைகளையும் நிரம்பப் பெற்றுள்ள நொய்யலாற்றின் கரையில் அமைந்துள்ள

**பேரை அமை சிவனே** - திருப்பேரூரின் கண்கோவில்கொண்டு விளங்கும் சிவபெருமானே

*குறிப்புரை :*

சிவனே! புன்னகை செய்தருளுவை! யான் அண்டு கத்தை நீக்கி அருள்க்கண் உய்ப்பாய் எனப் பொருள் முடிபு காண்க.

சிவபெருமான் சிரித்துப் புரம் எரித்த வரலாறு வெளிப்படை.

*"வாசித்துக் காணொணாதது"* **(திருப்புகழ்)**

*"வெல்லாமல் எவரையும் மருட்டிவிட வகைவந்த வித்தை என் முக்தி தருமோ"* **(தாயுமானவர் பாடல்)**

*"சித்திக்கு வித்து அதுவோ இதுவோ என்று தேடிப் பொய்ந்நூல் கத்திக் குவித்த பல் புத்தகத்தீர்"* **(திருவேங்கடத்தந்தாதி)**

என்பன போன்ற ஆன்றோர் மொழிகள் இங்கு ஒப்புநோக்கத் தக்கன.




பேரூர்த் திருக்கோயிலின் அழகுத் தோற்றம்